இக்கருப்ப மடையப்பெற்ற மாதாம்பையாரும் நாளுக்கு நாள் ஜாடராக்னிமந்தித்து சிற்றுணவி லிச்சையுற்றதுவுமொ ழிந்து திருமேனியும் விளர்த்தது சோம்பலுந் தாகமும் மே லிட்டு வாந்தி யடைந்து முலைக்கண் கறுத்து பசநரம்பு பரவி தோன்றுத விடையுஞ் சிறிது தோன்றப்பெற்று இவ்வாறு க ருப்பசின்னங்கள் பலவுந்தோன்றிப பத்துமாதஞ் செல் லவே அவயவங்கள் நிறைந்து - ஸ்ரீநந்திதேவரும் சிவத்யா னத்துக்கு இதுவும் சமாதிஸ்தானமென்று நினைத்து பத்மா ஸனத்தை யடைந்து அஜபாமந்திரத்தால் பூதசுத்தி பண்ணி நாடித்ரய சுத்திகளைச் செய்து சுழுமுனையுட் பாசகரந்திச்சே தமும்பண்ணி மூலாதாரம் முதலாகத் தெரிசித்து ஆஞ்ஞை யில சதாசிவத்தைத் தெரிசித்து அவ்விடத்துப புருவ மத்தி யிற்றிருவரு ளுருவா யுண்டாகிய வமுதத்தைப பானம்பண ணி இவ்வாதார மாறுடனே நிராதாரமாறுந் தெரிசித்து மே ற் சிவதெரிசனமும் பண்ணி இவ்வாறு மூன்று வருட மக் கருப்பத்திருந்தனர்.

அப்போது மாதாம்பையார் அக்கருப்பபாரம் பொறுது வா டித்தளர்ந்து மூவாண்டாயு மிக்கருப்பம் வெளிப்படா திருத் தலெல்லாஞ் சிவன்செயலே யென்றெண்ணி ஸ்ரீநந்தி தேவர் துசன்னிதியிற சென்று வணங்கித் துதித்து ஸ்வாமி நந்தி தேவரே அநேக விரதங்களைச் செய்தும் பயனின்றி உம்மு டைய பாதங்களிற் பணிந்து செய்த விரதத்தால் கருப்பவதி யாயினேன் கருப்பமடைந்தும் உலகமுறையாய் பத்தாவது மாசத்தில் பிரசவமாகாமல் மூன்றுவருஷ காலமாயும் கர்ப்ப பாரம் பொறாமல் துன்பப்படுகிறேன் இனிச் சகிக்கமுடியாது

காத்தி ரட்சிக்க வேண்டுமென்று அஞ்சலி செய்து அவவிட ம்விட்டு மந்தகமனத்துடன் தமது மாளிகையிற் சென்று மிகுந்த துன்பத்துடன் சயனித்திருக்குந் தருணத்தில் ஷட்த வாதீதரூபியாகிய பரமசிவம் மாதாம்பையாரது ஸ்வபனத் தில் ஒரு ஜங்கமர்போல வந்துநின்று மாதாம்பையை நோக்கி ஈன் கர்ப்பபாரத்தா லுண்டாகிய துன்பமும் மனோசாஞ்சலிய மும் நீங்கி மனம் மகிழும்படி நாளையதினம் புத்திரன் பிற ன். அந்தப்புத்ரனுக்கு வசவனென்று நாமகரணஞ் செ இந்தவன் புத்ரனாலே உலகத்தில் அஞ்ஞான விருளெல்லாம நீங்கப்போகிறதென்று சொல்ல.

மாதாம்பையாருந் நித்திரைதெளிந் தெழுந்து தாங்கண்ட கனவினதிசயத்தையு மருகிருந்த மகளிர்களெல்லாருணாத்து ம னமகிழ்ந் திருந்தனர்.

நந்திதேவரும் யோகத்தைவிட்டுச் சிவனது பணிவிடையி ல் உத்யுக்தராய் இரண்டு ஸ்ரீஹஸ்தங்களையுந் தலைமேற்குவித் துத் தலைகீழாக பரவசமாகும்போது சிவபெருமான் நந்திதேவ ரது சித்தத்தில் குருவாகத்தோனறி யங்கிருந்த சுறறத்தாருமம மாதாம்பையாரு மறியாதவண்ணம் அவரது சரீரத்தில் சிவலிங் கம ப்ரகாசிக்கும்படி தாரணஞ்செய்தனா. பின்பு இவ்வாச்சரிய மான கிருத்யத்தைக்கண்ட தாய்முதலானவரும் இநத நமது பாலகன் சரீரத்தில்ஜனிக்கும்போதே யெககாரணத்தா லிந்த லி ங்கதாரணஞ் செய்யப்பட்டதோ, இந்தப பாலகனும் நம்மிடத் திற் பிள்ளையாகவந்து பிறந்தனன் என்று சந்தேகத்தோடு மகி ழ்ச்சியையு மடைந்திருந்தனர்.

அப்போது நீண்டுயர்ந்த சடைமுடியும், அம்முடியினடுவிலழகிய சிவலிங்கமும், திரிபுண்டரந்தரித்த நெற்றியும், உருத்திராக்ஷந்தரித்த திருமார்பும், தாம்பிரக்குண்டலந்தரித்த செவிகளும், தோளில் யோகபட்டிகையும், தண்டமும், குடையும், மாணிக்கக்கங்கணத்தையும், பரகாசிக்கின்ற புன்முறுவலும், நீண்ட தாடியுமாகத் திருக்கோலங்கொண்டு முன்மறைந்து தாரணஞ்செய்த [illegible]மான் யாவருங்காணத்தக்கதாய் பரத்யக்ஷமாய்நின்றார்.

[illegible]மாதாம்பையாரும் நமஸ்கரித்து அஞ்சலித்துநின்று ஸ்வாமி, தேவரீர் எழுந்தருளியிருக்குந் திருஸ்தலமிதுவென்றும், எளியேனைப் பரீக்ஷிக்க இங்குநேரிட்ட தின்னகாரணமென்றுந் தெரிய விரும்புகிறேனென்று விண்ஞாபிக்க, கேட்பாய் மாதாம்பை நெடுநாளாக நாமிருப்பது கூடலசங்கமம், நமதுபெயருங் கூடலசங்கமனென்றே சொல்லுவார்கள். நீ நெடுநாள் வருந்திச்செய்த தவத்தாலும், உலகத்திற் சமணழிந்து நமது சிவசமயமோங்கும்படி நாமிடும் பணிவிடையிருளு முன்னிடத்தில் இப்புத்திரன் ஜனித்தான். ஆதலால் இவனிடத்துவைத்த பக்ஷத்தால் நாமே அங்கலிங்கதாரணமுஞ் செய்தோம். பால்முதலிய வுணவுகளுஞ் சிவநிவேதனமல்லாது கொடுப்பீராயின் அதற்குத்தடை நம்மாணையென் றிவ்வாறு ஆஞ்ஞாபித்து மின்னல் மறைந்தது போல மறைந்தனர்.

அங்கிருந்தவர் யாவரும் பரமித்துச் சிறிதுநாழிகைசென்று தெளிந்து பின்பு இவ்வண்ணம் நமக்கருளியசங்கமர் சிவபெருமானென்றே நிச்சயித்துத் திசைநோக்கித் துதித்துப் பணிந்தனர். இந்தக் குழந்தையின் திருமேனியினொளியே யங்கிருந்தவர் தஞ்ஞானங்களையெல்லாம் போக்கிற்று.

தந்தையாரும் மனமகிழ்ச்சியோடு அத்தருணத் தவவிடத்துற்று சிவனடியா ரநேகரைவரவழைத்துப் பூசித்து, அவரது பாதோதகத்தாற் றமதுபுத்திரற்குத் திருமஞ்சனமாட்டுவித்து அவராற் கொடுக்கப்பெற்ற திருநீற்றையுந் தரிப்பித்து, சிறந்த பட்டாடையிற் சயனிப்பித்து, முன் சிவபெருமான் றிருவாய்மலாந்தருளியபடி வசவேசுவரனென்று நாமகரணமுஞ் செய்து, நவரத்னகசிதமான தொட்டிலிலேற்றினர்.

வசவேசுவரரும் சாமானியமான குழந்தைபோல வளாக கைப்பாரதுச சிரித்தும், சிவசிவேகமான முலைப்பாலுண்டும், தமதுகையைச் சுவைத்தும், கைகால்களை யுதறிக்கொண்டு சிலநாழிகையழுது மழாமலும், தமதுதிருமேனியிற் சிவலிங்கத்தைக்கண்டு மகிழ்ந்தும், கவிழ்ந்தும், உட்காந்தும், நின்றும், நடந்தும், ஓடியும், சைவபரிபாஷைகளையே மழலைச்சொற்களாகச்சொல்லியும், புழுதியாடியுங் குதித்தும், சிவனடியார்களைக் கண்டோடியோடி வணங்குவதே தமக்கு விளையாட்டாகவாடியும், இப்படியே பாலப்பருவங்கடந்தபின் வேதங்கள் ஆகமங்கள் புராணங்கள் இவைமுதலிய கலைகளெல்லாந் தாமேயுணருங் கருத்துடையவராய எட்டுவயதுடையராயினா.

தந்தையாராகிய மாதிராசா தமதுபுத்திரர்க்கு பிராமணகுலத்துக்கேற்ப வுபநயனசசடங்கைச் செய்யக்கருதி யெத்னஞ் செய்தனர். அப்போது வசவதேவரு மதைமறுப்பாராகி இந்த வுபநயனச்சடங்கு எனக்கிஷ்டமில்லாதது. சிவபெருமானை யாச்சிக்குந் தொழிலைப்பூண்டும் உமக்கே னிம்மருட்சி, குருப்பிரதங்களைப்டணிபவா பவிகளுக்குப்பணிந்தால் அதுபாவம். சைவவேஷந்தரித்தவா பவிகளைத்துவேஷந்தரித்தல் குற்றமே, அவாகளது

காயத்திரியைஜெபித்தலுங் குற்றமேயென்று சொல்லவே, மாதிராசருங் கேட்பாய் வசவேசனே குலத்துக்குரிய ஸம்ஸ்காரமில்லாதபோது குலங்கெடும். இவ்வந்தணக்கோலமும் விருத்தமானதன்று. உபாயனத்தில் பிக்ஷாபாத்திரமே சிவன்கையிற் கபாலம். உபவீதமே - சர்ப்பாபரணம். பலாசதண்டமே - விஷ்ணுவின் முதுகெலும்புத்தண்டு. முடிக்குஞ்சிகையே - சடாபாரம். கோபிசந்தனமே-திருநீறு. கிஷ்ணாஜினமே-யானைத்தோல். சிவபெருமான் பிக்ஷைக்குப புறப்பட்டபோது தாங்கொண்டகோலமே இதுவாதலால் விருத்தமன்று ஆதலால் நமதுமொழியைத் தடாது இச்சடங்கை யேற்க்வேண்டுவதென்று சொல்ல.

பிதாவே யுலகத்தி லொருகருமமும் வலிதிற்செய்வ தழகன்று நீரெனக்குத் தகப்பனுமன்று, உமதுபத்னியா ரெமக்குத் தாயுமன்று. வீரமாஹேசுவரரான வடியார்களே எமக்குத் தகப்பனாவர், அதிற் பெண்ணாவாரோ எமக்குத் தாய்மார் என்றுசொல்ல, மாதிராசரு மொன்றும்பேசாமல் மௌனமாகப்போயினர். வசவதேவரும் தாய்தந்தைகளிடத்துப்பாசத்தைவிட்டுத் தமது தங்கையாராகிய நாகாம்பையாருடனே சிவசரணரிடத்துச் சென்றிருந்தனா. உபநயனத்துக்கு வந்திருந்த பந்துவர்க்கங்களும் உபநயனச்சடங்கு நன்றாகமுடிந்ததென்று வெறுத்து வருத்தமடைந்து தத்தமிடங்களிற் சென்றார்.

திருவவதாரச்சருக்க வசனம்

முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.



## உபதேசச்சருக்கம்.



பத்தியாகத்தாபோற்றி பரமமோகத்தாபோற்றி
முத்தியோகத்தாபோற்றி முனிவர்தாகத்தாபோற்றி
மெத்தியாகத்தாபோற்றி விமலயூகத்தாபோற்றி
புத்தியாகத்தாபோற்றி புனிதர்பாகத்தாபோற்றி. (க)

அருணெறிவசவதேவ ரன்னைமாதாம்பை முன்னோர்
பெருநெறிவிச்சலேசன் பிரியமந்திரியாயுள்ளார்
திருமலிசெல்வமிக்கார் சீபலதேவரொன்பா
ரொருமைசேரீசனேசத் துருகுநன்மனஞ்சமுள்ளார் உ.

நந்திகண்மூந்நூல்சாத்து நலத்தினைக்காண்பான்வந்தார்
தந்திருமகளார்தம்மைச் சங்கரனடியார்க்கல்லாற்
புந்தியினல்கேனென்னும் போதமேபோதவுள்ளா
ரந்தநல்வசவதேவ ராணிடத்தன்புகண்டே. (௩)

தக்கசீர்வசவதேவர் தாமுறுமடத்திற்சென்று
பக்கமொன்றிடப்பணிந்து பண்பினாலணைத்துகந்து
மிக்கமண்விளங்கவந்தீர் விரும்புமென்மகளுக்கே
புக்குய்யவேண்டும்யான்வாழ் புரமதற்கணைவிரென்றார்

பொருந்தினர்நந்தியார்தம் பொற்பதிக்கண்பினுலே
யரும்பொனின்சிவிகையேற்றி யவாபின்புதாமுஞ்சென்
றங், கிருந்துநன்முகுர்நதமிட்டன்றிந்தவிசசலபுரத்தை
த், திருந்தவுற்றலங்கரித்தல் செய்புமினென்ருர்கின்ருர்.

அப்பெருவீதியெல்லா மரம்பைபூகங்களாலு
மொப்பரும்பந்தராலு மொளிருமேற்கட்டியாலுஞ்
சப்பரகிரைகளாலுந் தயங்குதோரணங்களாலுந்
துப்புமாமணியின்றூய தொங்கலினுலுந்துற்றே. சு

தண்பனிநீரிற்றுய்ய சந்தனங்கரைத்திறைத்துக்
கண்கொளாவாறுவீதி கவின்பெறவலங்கரித்தே
விண்பயிறமதுவீட்டின் மெய்ம்மணப்பந்தர்முற்றுந்
தெண்பனிநீர்கத்தூரி சேர்த்துநமெழுக்குச்சாத்தி. எ

வரமுறுவாயிலட்ட மங்கலம்வைத்துவாழ்த்தித்
தரளமேசொரிந்துகும்பம் பாலிகைதாபித்தேத்தி
நிரைமணிவிளக்கினங்க ணிறைத்துத்தோற்கருவியாதி
யிரையுமாகடலதென்ன வெங்கணும்பொலியவார்க்க. அ

எம்பிரானன்பர்தம்மை யிங்கழைத்திடுமின்பாத
வம்புயங்களைவிளக்கும் வணங்குமினுதனச்சீர்க
கம்பளநிரைகள்போடுங் காதலிலிருத்தும்பூதி
விம்பமாரிலையடைக்காய் காப்பூரமிகவும்வைம்மின் (க)

வேறு.

என்றுசிபல தேவரியம்பவே
நின்றபேர்மடத் தோர்க்குநிகழ்த்தினு
ரொன்றும்பண்டா ரியரங்கங்கோடியே
துன்றுபத்தர்க்கு மாயேசுரர்க்கெலாம் (ய)

சொல்லலும்பத்தர் மாயேசுரர்திரண்
டெல்லேயில்லவ ராகியெழுந்தருள்
பல்விதத்தைப் பலதேவர்பார்த்தெழுந்
தல்லறீர வடிகள்விளக்கியே (யக)

அளவிலாதநல் லாதனஞ்சேர்த்தபின்
வளமுறும்படி வைத்தவிபூதியும்
பளிதமுமடைக் காயும்பரிவினு
லெளியராய்வைத் திறைஞ்சியெழுந்தரோ (யஉ)

சகலபத்தர் மயேசர்சரணர்தா
நிகரிலார்கண நேசத்தராகியம்
முகமலர்ந்துநம் முக்கணன்கீர்த்தியே
சுகமதாகத் துதித்துறுங்காலேயின் (யங)

பரசிவானு பவவசவேசுரர்
சரணர்பாதாம் புயநற்சலந்தனின்
முரணமான பவமறமூழ்கியொண்
டரணிபோன்றெளிர் தண்டுகில்சாத்தியே (யச)

பூதிவெண்டிரி புண்டரமேற்றரித்
தாதியாரச் சணிமலர்சென்னியின்
மீதிருத்தி விமலநற்கண்டிகை
சோதிமேனிச் சுகாபரணத்தராய் (௰௫)

வசவதேவர் மகத்தனைக்கண்டுநன்
னசைகொணெஞ்சத்த ராகிநயனநீர்
விசையில்வீழ்வுற விம்மிப்பணிந்துநின்
றிசையுமேற்றவ மெய்திற்றெனறேத்தியே (௰௬)

ஆடைசற்று மசையாதொதுக்கியே
நீடுமங்க நெருங்கவொடுக்கியே
கூடுமஞ்சலி கொண்டகரத்தராய்த்
தேடருஞ்சிவ பத்தித்திரட்சிபோல் (௰௭)

அஞ்சியன்பி னமர்ந்தங்கிருந்தருள்
வெஞ்சமில்வச வேசனைநோக்கியின்
செஞ்சொனுவினர் சீபலதேவாதா
நெஞ்சுவந்துநன் னேயத்திருந்துபின் (௰௮)

வேறு.

சீராட்டிக்கங்காம்பைத் திருநுதலைமங்கலநன், னீரா
ட்டியிடையழகு நிதியாடைக்குறவுடுத்திப், பாராட்டுங்
கவினவட்குப் பணிவேண்டாங்கலியாணப், பேராட்டி
யெனுஞ்சிறப்பாற்பெயர்வேண்டுமெனத்தரித்தார்.(௰௯)

மலர்கமலை யனையமுக வல்லிக்குமலர் மாலை
நலமுறவேகுழற்கணிந்து நன்னுதன்மேற்குங்குமத்தின்
றிலகமதிட்டிளங்கயல்போற றிருவிழிக்கஞ்சனமெழுதி
யுலகமுய்யவந்தார்நெஞ் சொப்பவேயொப்பித்தார் (௨௰)

கவினதனாற்றிருமகளுங் கற்பினாலருந்ததியு, மவனியி த்வொவ்வாக ளணிநடையாலன்னமொவ்வாச், சவி மொழியாற்கிளியொவ்வா, நண்ணகையாற் றரளமொவ் வா, துவரிதழாற்பவளமொவ்வாத் தோகையொவ்வாச் சாயலினால். (௨௧)

கங்காம்பையெனுமமுதைக கவுரிகழற்கினியாளை
மங்காததவஞ்செய்து வசவேசற்காளனைச-
சிங்காரமடந்தையர்கள் செங்கரத்தாலேந்திவந்து
பொங்காவந்தந்தையார் பொருந்தநின்றுகாட்டினார். ()

கன்னியர்கற்பெல்லாமோர் காயமாத்திரண்டாளை
நன்னயமாககுருலிங்க நற்பத்திகேற்றாளை
யென்னைவாழ்விக்கவந்தீ தொன்னகலைகொண்டுசென்று
மன்னுமருந்தவத்தோர்முன்பலதேவர்வணங்குவித்தார்

வணங்கியபின்சிவனுருவாம் வசவேசாதமைஞானக்
குணந்திரண்டகோலத்தைக் குலவுமரியாதனமீ
திணங்குருநற்பத்தியினா லெழுந்தருளியிருக்கச்செய்
தணங்கொருபாகனைத்துதித்தங் காராமெய்யன்பினால்()

கங்காம்பைமுதலாகக் கனகவகையாபரணந்
தங்காதலாகமற்றுந் தம்மனையிலுள்ளவெலாம்
பொங்கார்வமுடனேந்திப்புண்ணியனாவலமாய்வந்
தங்காதவனையணைந்த வமுதமதியெனவைந்தார் (உரு)

எனைக்காப்பீரெனமகளை யிப்பொருளைக்கொள்விரெ
ன, மனைக்காதமிலரோனு மதிச்சடையாரருளென்று, னி
னைத்தாகுதெனக்கொண்டார் நேயத்தாற்பலதேவர், மு
னைக்காலத்தவமெனக்குமுற்றிற்றின்றெனப்பணிந்தார்.

நல்லவிலக்கணமுகுர்த்த மெனநின்றோர்நவின்றளவி
லல்லணியுங்கண்டனருளவனடியாரருளிரண்டுந்
சொல்லரியவிலக்கணமுந் துணையுமுத்திச்சுகமுமாம்
வல்லவர்கட்கெனவங்கண் வசவேசர்வகுத்துரைத்தார்()

இத்தகையவதுவைநல மெங்குமிலையெனவுலகோர்
மெத்தநின்றுபாராட்ட மெய்த்தவர்க்கும்பத்தர்கட்குஞ்
சுத்தமிகுமிட்டானஞ் சுகநிறையவளித்திறைஞ்சி
யத்தமுகிழ்த்தத்தவர்க ளனைவருமங்கறியவே (உஅ)

ஆயிழையார்கங்காம்பை நாகாம்பையாருடனே
யேயமணப்பந்தரிலே பலதேவரிசைவிறைற்
றூயபுகழ்க்கூடலசங் கமர்பாதந்தொழச்சென்று
நேயமுடனுபதேசம் பெற்றசெய்திநிகழ்த்துவாம் (உகூ)

வேறு.

விச்சலபுரத்தினை விரைந்தகலலுற்றே
யச்சமறுபத்தர்க ளனேகாபுடைசூழ
வுச்சிதநல்லற்புதமோ டுன்னரியகாத
மிச்சைதருயோசனையி லேகியெல்லைகண்டார் (௯0)

பத்தியதிகத்தொடு பணிந்துபலகாலுஞ்
சித்திவசவேசுரா சிரங்கரமுகிழ்த்தே
யத்திசையைநாடியரு மந்ததுதிசெய்யா
வெத்திசையுமெண்ணில வொழுந்தருளுகின்றார் (௯௧)

அன்னதிருமுன்னக ரரும்பெருமைதன்னைப்
பன்னகபதிக்குமிது வென்றுபகரொண்ணு
நன்னதியனைத்துமிகு புண்ணியநலத்தா
மின்னதலரும்பரிச வேதிகிரியெல்லாம் (௯௨)

ஆலயமனைத்துமர னாலயமதாகும்
சோலைநலகண்டிகை துதைந்துகனிகொள்ளு
மேலவெழுநந்தவன மேவனமியாவு
மேலணியுநீறதனை மேவுமுயிர்முற்றும் (௯௩)

ஆவினமெலாமமர ராவினமதாகுஞ்
சேவினமெலாமிடப செய்யவடிவாகும்
வாவிகுளமோடைகளும் வானநதிநீரோ
மேவுதொழிலீசனை விரும்புவழிபாடே. (௯௪)

நற்புருடரெல்லவரு நல்லமரராகுங்
கற்புடையமங்கையர்கள் காரிகையரெல்லாஞ்
சொற்செயலனைத்துமரன் ஷேத்திரமதாகும்
பொற்பொலியெலாமமரா பொன்னுலகியங்கள். ௰௫

கோதின்மறுகெங்குமிகு கோலமிடுவாரோ
வேதிகையனைத்துமறை யாகமவிளம்பே
நீதிதருமுத்தநிதி நீணிலமியாவு
மாதிநகரப்பெருமை யாரளவுரைப்பார். ௰௬

பொய்யர்கலர்வீணர்மத போதரபகாரர்
வெய்யவெடிசொல்லர் சிறுபுல்லரறிவில்லோர்
துய்யநெறியில்லரொடு தூடணர்களானோ
ரையமறவப்பதியி லாருமிலையாகும். ௰௭

அங்கண்வசவேசரணை இன்றமையறிந்தே
சஙகரனதப்பதி தருக்குதவரெல்லா
நங்கடுயரிங்கற நடந்ததரிதென்றார்
துங்கநகர்வாழைகொடி தோரணநிரைத்தார். ௰௮

வந்துநகரெய்துவச வேசரெதிர்சென்றே
யெந்தமிடர்தீரவருவீர் சரணமென்றார்
சிந்தைமகிழும்படி திருந்துதுதிசெய்தார்
நந்திகளவர்க்குற நயந்துசரணென்றே ௰௯

அன்னநகரந்தனை யடிக்கடிபணிந்தே
மன்னுதிருவீதியை வலங்கொடுவணங்காச்
சொன்னகிரியன்னசிக ரந்தொழுதிறைஞ்சிக்
கொன்னணையுமெந்தையுறை கோயிலுறுபோதின். ௪0

மைந்தர்வருகின்றமை மகிழ்ந்துமகதேவர்
முந்தைவருதேசிக முகுர்த்தமதுகொண்டே
யந்தவசவேசர்விழி யாரவெதிர்நின்றார்
வந்துகுருதெக்கணை தமைக்கசிவில்வைத்தார். ௪௧

மற்றுமடியற்றமர மென்னமனைநந்தே
பற்றுமிகுநண்பொடு பணிந்துதனாநின்று
தெற்றெனவெழாரையரு டேசிகர்கரத்தா
லுற்றபெருநண்பினுத வொற்றியெழுகென்றார். ௪௨

எழுந்துவிழிநீர்விழ விரண்டுகரமுந்தஞ்
செழுஞ்சிரமிசைக்குவிய வேதெளியுமன்பி
னழுந்தினர்மகிழ்ச்சியெனு மாவிதருநீராற்
றொழுங்குருமலர்க்கழல் விளக்கினர்துதித்தார். ௪௩

நேசமுடனேயரு கிருத்திநிகரில்லாத்
தேசவுபதேசவகை செவ்வியினளிப்பா
ராசிலெதிர்காலமு மருந்தவனைநம்போற்
பூசனைசெய்வாய்நினது புந்திமகிழன்பால். ௪௪

அத்தவர்கடம்மைநர ராகுமெனவுன்று
துத்தமரிருத்தனென வுன்னியவர்செய்யு
மெய்த்தவமனைத்தினையு மிக்கநலமென்பாய்
குத்திவையினஞ்சலிசெய் கூறினியசொல்லே. ௪௫

மேதகுதவத்தர்குல மேன்மைசிறிதென்றங்
கோதுதன்மனத்தினிடை யுன்னுதலொழிப்பாய்
போதவுடலுக்கிறுதி புக்கிடினுநெஞ்சி
னீதிதருநின்விரத நெக்குறவிடாதே. ௪௬

வண்டவரைநிந்தனைசெய் வாயினர்சிரத்தைத்
துண்டியரனூல்விதி துலங்குலகில்வைப்பாய்
மண்டுசிவபத்தியினில் வஞ்சனையொழிப்பா
யுண்டிதுவதில்லையென வுன்னிநகைகொள்ளேல். ௪௭

அன்னியர்மடந்தையரை யன்பினினையாதே
யன்னியர்தனத்துமன மற்பமுமுறாதே
யன்னியர்சுகத்துமன மாதிகள்விடாதே
யன்னியரைநிந்தனை யயர்ந்துமுரையாதே. ௪௮

பத்தசனமெய்திடி லெழுந்துபரிவாலே
யத்தமிகவஞ்சலிசெய் தன்பொடுதுதிப்பா
யித்தரையிலின்பரிவெ னுந்தமனியத்திற்
கொத்தவுரைகல்லெமது ருச்செறிதவத்தோர். ௪௯

அப்பொழுதுநின்னிணைவி னன்புநிலைகுன்று
தொப்பநடவுன்மன முறும்பிரியமெல்லாந்
தப்பறவளித்துமிது சத்தியநமைத்தா
னெப்பொழுதுநீபிறி விலாயஃதியாமும். ௫௰

என்றினிமைசேர்மதுர வாய்மைகளியம்பா
நன்றிருகரத்துடல நண்ணிடவணைத்தே
நின்றுபணிநந்தியென நீடுபணிவார்முன்
முன்றனதுமேனிகொடு மூத்தனுமிருந்தான். ௫௧

ஐயர்சிவலிங்கமய மானவையறிந்தே
வெய்யவரலாதவச வேசுரர்விருப்பா
லுய்யவுபதேசவகை யுண்மையையுணர்ந்தார்
செய்யதிருமேனியொடு சிக்குமுளரானார். ௫௨

உற்றசிவபக்தர்முனி வோருளமகிழ்ந்தா
ரிற்றைநலமேதவ மெமக்குவசவேசா
நெற்றிவிழியானென நிகழ்த்தியெதிர்நின்றார்
கொற்றவிடையானைவிழி கொண்டுதெரிசித்தார். ௫௩

இந்தவசவேசரிறை வற்கிணையராமா
மந்தவவுருக்கொடரு குற்றருளுணாத்தே
புந்திமகிழும்படி புறந்தடவிமற்றுந்
தந்தருமமெய்யொடு தழீஇயினர்தருக்கால். ௫௪

அண்ணலருளிப்படி யணைந்தவரிலென்பார்
மண்ணிலிவர்வந்தது மகாபுதுமையென்பார்
நண்ணியெழுந்துயர் நசிக்கவலலொன்பா
ரொண்ணிவசவேசவென வெய்துநலமென்பார். ௫௫

மக்களொடுதந்தையர்கண் மாதளைவதைத்து
மக்கினியிலுற்றுட லனறகொளுருவநின்று
நக்கனருள்பெற்றனர்க ணந்திகளிதென்றே
விக்கணயதேசிவனை யெய்துநவமென்பார். ௫௬

ஆகமகிழும்பொழு திலங்கண்வசவேசர்
மோகமொடெழுந்துகுரு முன்பணிதல்செய்தே
வாகணையுமண்டபம தொன்றினிடைவந்தார்
நாகபணியற்கினிய நல்லரோடிருந்தார். ௫௭

அன்றுமகபூசைகளமைத்தளவிலன்பாற்
சென்றுதிரிபோதுமுயர் தேசிகர்பதத்தே
துன்றியவிருப்பொடு பணிந்துதுதிசெய்தா
ரொன்றுமிவணின்றகலொணாதெனவிருந்தார். ௫௮

உபதேசச்சருக்கம்

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - உ௱௫.

உ

திருச்சிற்றம்பலம்.

—*—

## உபதேசசருக்க வசனம்.

முன்சொன்ன வடாயனச்சடங்குக்கு வந்தவர்களிலொருவராயும் மாதாம்பையாரது முனோராயும் செங்கோல்முறை வழுவாத விச்சலராஜன் ப்ரதான மந்திரியாயுமுள்ளவர், சிவபக்தியினாலுருகுஞ் சிந்தையுள்ளவர் ஸ்ரீபலதேவனென்னுந் திருநாமமுள்ளவர், தமது அருமையான பெண்ணைச்சிவனடியாரிற்சிறந்தவர்களன்றி மற்றையர்க்கு மனத்தினாலுங்கொடுக்கச் சமாதானிக்கேனென்னுஞ் சங்கற்பமுடையவர், அவ்விடத்து வசவேசுவரரது சிவபத்தியின்மேலீட்டைக்கண்டு அதிசயித்து அவரிருக்கு மடத்தைச்சார்ந்து மனபூர்வமாக நமஸ்கரித்து, ஸ்வாமி நீர் இந்தவுலகத்தனைவரும் நற்கதியடையவே யவதரித்தீர், எளியேனது சங்கற்பமும் பாழ்போகாது எனதுநகரத்திற்சென்று எனதருமைத் திருமகளைத் திருமணஞ்செய்து, எம்மையும் நற்கதியிற் சேர்த்தருளவேண்டுமென்று வருந்திநிற்க.

வசவதேவருந் தமக்குத் திருமணத்தில் விருப்பற்றவராயினும் சிவகாருண்யத்தா லிரங்கிச் சமாதானித்தனர். ஸ்ரீபலதேவருஞ் சதுரங்கசேனைகள் சூழ்ந்துவரப் பொற்சிவிகையிலேற்றி விச்சலபுரத்திற்சென்று அவரவர்க்குத்தக்க ஸ்தலங்களிலிருக்கச்செய்து தமது பரிஜனங்களைப் பந்தல்முதலியவற்றால் நகரத்தையுந் தமது மாளிகையையும் அலங்கரிக்கச்செய்து அநேகமடியார்களையும் வரவழைத்துப் பூசித்தனர்.

வசவதேவருந திருமணக்காட்சிக்கு வந்திருந்த சிவசரணர்களது பாதோதகத்திஞல் திருமஞ்சனமாடி கோடிசூர்யப்ரகாசமுள்ள வஸ்திரத்தைத் தரித்து, நெற்றியில் திருநீறுசாத்தி, ௨ருத்திராக்ஷ மாலேகளேயு மணிந்து, நித்தியகர்மானுஷ்டானத்துடனே சிவபூஜையும்புரிந்து, சிவார்ச்சனேயிலாச்சித்த மலரையுஞ் சிரசிலணிநது, அஙகு சிவசரணரையும் முறையாகபூசித்து நமஸகரித்திருந்தனர்.

அப்போது ஸ்ரீபலதேவரது திருமகளாகிய நாகாம்பையாரையுந் திருமஞ்சனமாட்டுவித்து வஸத்ராபரணங்களாலலங்கரித்துத் திலதமிட்டு மணகோலஞ்செய்து அநேகந்தோழிகளுஞ்சூழ விருந்தனர்.

ஸ்ரீபலதேவருந் தமது திருமகளேயழைத்துச சிவசரணரது பாதங்களில் வணஙகசசெய்து, வசவதேவரையும் மணக்கோலஞ்செய்த சிங்காசனத்திலேற்றி, அவரது திருமுன்னே தமது திருமகளேயழைத்து ஸவாமி வசவதேவரோ எம்மிடத்துக்கருணேயால் இந்தப்பொருளேத் திருககைதொட்டருள வேணுமென்றுவேண்ட.

வசவதேவரும் - இது சிவானுக்ரஹமென்றுகொண்டனர். அங்கிருந்தபெரியோர் - உத்தேசித்த முகுர்த்தகாலமுஞ் சமீபித்ததென்றுசொல்ல வசவதேவர் சிவனருளும் சிவனடியார்களருளும் இரண்டுமே நல்லமுகுர்த்தமென்றுசொல்லி அடியார்களுக்குப் போஜனமுதலிய வாராதனேகளுஞ்செய்வித்து ஸ்ரீபலதேவரது சமாதானத்திஞல் நாகாம்பையார் கங்காம்பையாரிருவரையுமழைத்துக்கொண்டு யாவரும்வணங்கும்படி அந்த விச்சலபுரத்தைவிட்டு கூடல சங்கமஸ்தலத்தை யுத்தேசித்துச்

சென்று அங்கரத்திலுள்ள சிவசரணர்யாவரும் அநேகவாடம்பரத்தோ டெதிர்கொள்ளச் சிவாலயத்திற்செல்ல.

அப்போது சிவபெருமானும் ஆசாரியத் திருக்கோலங் கொண் டெழுந்தருளிவந்து எதிரில்நின்றனர்.

வசவதேவரும் ஸாஷ்டாங்கமாகப் பூமியில் விழுந்து நமஸ்கரித்து எழாதிருப்பவே - சிவபெருமான்றமது திருக்கரத்தாற் றெட் டெழச்செய்யவே எழுந்திருந்து கண்களில் நீர்பெருகத் தலையிற் கரங்களைக்குவித்து அன்பில் மூழ்கி ஸ்துதித்தனர்.

அப்போது பரமசிவமும் அப்பா வசவனே உனக்குச்சிலவுபதேசங்கள் சொல்வேன் அதாவது முதலாவது நம்மடியார்களை நாமாகவேபாவிக்க வேண்டுவது அவர்களை நரராகப்பாவிக்கலாகாது அவருன்னைத் தண்டித்தாலும் வைதாலும் நீயவர்க்கஞ்சலித்து ஸ்தோத்ரம்பண்ணுவதே கடமையென்றிது முதலிய வநேகம் பிரமாணங்களைச்சொல்லி யிதுவேயுபதேசமென்றருள் செய்து என்னைநீமீட்டும்வணங்கென்றுஞ்ஞாபித்து அவர்வணங்குந்தருணத்துச் சிவலிங்கத்தந்தர்த்தானமாயினர்.

வசவதேவ ரிவ்வாறு தமக்கருளிய வாசாரியருஞ் சிவபெருமானென்றேயறிந்து அவ்விடத்தொரு மண்டபத்திருந்து இத்தலத்துத்தேசிகர்வந் துபதேசித்தமையா லித்தலத்தை நீங்கலாகாதென்னுஞ் சங்கற்பத்தோடிருந்தனர்.

உபதேசச்சருக்க வசனம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



# தண்டநாயகச்சருக்கம்.



பெரியவருளோதசரணார்த்தி பிரகிருதிபேதசரணார்த்தி
புரிதருமநீதிசரணார்த்தி புகலருமசாதசரணார்த்தி
யரபரமபோதசரணார்த்தி யதிகவிதகீதசரணார்த்தி
வரிசைதருபாதசரணார்த்தி வசவகுருநாதசரணார்த்தி க

வேறு.

மற்றினிக்கல்லியாண வளநகரதனுளத்த
னற்றியபத்திவித்தா நற்பலதேவர்பெற்ற
சிற்றிடை யாளைநந்தி தேவனார்க்கீயநச்சி
நெற்றியங்கணனழைத்தநீர்மைபோற்கயிலைசென்றார்.உ

விச்சலன்பலதேவர்க்கா மித்திரர்தம்மைநோக்கி
யிச்சதுரங்கதேச மெமையினிப்பரிக்கும்பேரா
யச்சமின்மக்களாய்நன் றுடன்பிறந்தவராயன்றி
யுச்சிதவுறவராகி யுரியராயுளரோவென்றான். ௩

என்னமற்றவர்கள்வேந்த னெழின்முகநோக்கிநின்றும்
மன்னகேளவர்பயந்த மகடனக்கினியகேள்வ
ருன்னரும்பாரந்தாங்கற் குரியவருமையோர்பாகன்
றன்னருளதிகம்பெற்றார் தம்பெயர்வசவதேவர் ௪

கூடலசங்கமத்தே குருவருட்பதங்கள்போற்று
நாடரும்பத்தியாலே நண்ணியங்கிருக்கின் றார்மன்
னீடநின்கருத்திற்கேற்ற நீர்மையாரொன்னவேந்தன்
றேடருங்களிப்புமன்புஞ் செறிந்தநற்சிந்தனுகி ரு

அமைச்சனைவாய்மையாலே யதிகனையமைத்துவேந்த
னுமைக்கினியவர்மேலன்பா லுயர்ந்தநன்னந்திநமபாற்
கமைத்தனுயக்கனுகுங் கருத்தினையிசையப்பேசி
யெமைப்பரிக்கின்றவிந்த யானேமேற்றருவிரொன்ன சு

விரைவுடனவர்கள்சங்க மேசுராந்தள்ளிற்சென்று, வரை
மகள்பாகர்க்கான'வசவதேவேசர்தாளின், றனைமிசைப்
பணிந்திரண்டாஞ் சம்புவேசைவர்வாழ்வே, பிரமன்மா
ல்வாழ்வுமெண்ணுப் பெருமைசேரொருமையுள்ளீர். எ

தேவரீர்சிவானுபோகத் திவ்வியவின்பம்போலப்
பூவுலகாளுமிச்சை பொருந்துமோபொருந்தாதேனும்
யாவருமுய்யநீரிங் கினிதெழுந்தருளப்பெற்றுற்
காவலன்விச்சலேசன் காசினிமுழுதுங்காப்பான். அ

மண்டரிப்பதற்கும்பட்டமல்கற்கும்பொற்பண்டார, மு
ண்டெனநிறுத்துதற்கும் பரிசனமோங்குதற்கும், விண்
டிடாநம்பிக்கைக்கு மிக்கவண்செல்வத்திற்கு, மெண்ட
ரினும்மைப்போல்வா ரில்லையெம்மிறைக்கங்கென்றுர்.கூ

ஒருபடியரிசிக்கோா னுரியன்றுமெல்லாந்தாங்கும் [ன
பெருமையமொன்றுன்வேந்தன் பிரியத்திற்செல்வீரொன்
வருணெறித்தேசிகன்று ளகல்வதென்னெனவயர்ந்தார்
மருவிமுன்னுசான்போந்தாரவணங்கினாவசவதேவர்.௰

அதுவுநம்பணிகாண்செல்வா யஞ்சலெனறையர்செப்ப
ப், பதுமமென்பதமிறைஞ்சிவிடைகொண்டுபத்தர்போ
ற்றக், கதுமெனச்சேனைசூழக் கரமலைமிசையினேறிப்,
புதுமல ரிமையோர்சிந்தப் புரியினும் புறம்புசென்றா.

கண்ட வர்கண்ணுநெஞ்சுங் களிப்புறககரங்கள்சென்னி
மண்டிமுன் கூப்பிநிற்க வானதுந்துமிமுழங்கத்
தண்டருமலரின்மூழ்குந் தகையபாயசசங்கமேசன்
புண்டரீகத்தாணேசம பொங்கியநெஞ்சராகி.　　　　௰உ

மஞ்சனவேழத்தேறி வ நம்வளமவிசசலேச
னஞ்சலானறிந்துவீதி யானவைவெயஙகுமாடி
விஞ்சுதோரணமுஞ்சல்லி மிசுகதோரணமும்வெய்யோ
னஞ்சுமாணிககமாலை யலஙகுதோரணமுமார்த்தே.௰௩

தெய்வமாவிமானத்தோடே தெரிவையர்தனையில்வந்து
கைவருஞ்சதியாலாடுங் காட்சிபோற்சப்பரத்திற்
பைவருமரவவல்குற் பாவையரிருமருங்கும்
பொய்வருமிடையாராடப் புரியலங்கரித்தபின்னா　௰௪

நண்ணினர்புரியைச்சேர நந்திகளென்னவேந்தன்
கண்ணினல்விரும்பிக்காணுங் காதலாலெதிரேசென்று
னண்ணலார்சேனைசூழ வரசன்வந்தணைதல்கண்டு
திண்ணியகளிற்றினின்று மிழிந்துநேர்சேரப்போந்தார்.

வேதசைவங்களோங்க விமலனோர்வடிவனானை
மாதவர்வைப்பைமண்ணோர் வாழ்வினைவாதவேழத்
தீதருங்குழுவைவாட்டுஞ் சிங்கத்தைவீரசைவ
ரூதியந்தன்னைஞான வொளியைநல்லொழுக்கக்குன்றை

மதியினாலொப்பிலானை வாக்கினாலிணையிலானை
நதிமுடியத்தன்பத்தி நன்மையாணிகரிலானை
யெதிரிலாக்கல்வியானை யினிமையாலமுதனானை [டான்
விதியெலாம்வென்றார்தம்மை விச்சலன்விருப்பாற்கண்

வேறு.

களிப்பினாலெதிர்காண் டலுங்காசினிவேந்த
னுளத்திலாதரவெய்தியங் குவப்புளாயனேகங்
கிளத்தியேயிருவோர்களுங் கிட்டிநண்புடனே
வளப்பநீடுநன்னகரினுள் வந்துறுமளவில். ௰௮

மகரதோரணமாட மாளிகைகளின்மீதுஞ்
சிகரமீதினுந்தேரினின் மீதினுஞ்செறிந்தே
நிகரில்பூரணசந் திரனிரைகளோநிலவு
முகுரசாலமோமுளரியோ மடந்தையர்முகமோ. ௰௯

கரியமேகமாகினகளோ காரிருளனேக
முருவமாகியேதிரண்டதோ வொண்ணுதலார்தஞ்
சொருகுகொண்டையோவள்ளேபோ தோகையர்காதோ
வரியநீலமோவேல்களோ வரிவையர்விழியோ. உ0

நிவளுநன்னிறக்குமிழ்களோ வெள்ளிநாட்டிரளோ
துவளுநுண்ணிடைமடந்தையா துண்டமோசுடரும்
பவளமோகொவ்வையோ துய்ய பாவையரிதழோ
தவளமுல்லையோநாளமோ தையலாரகையோ. உக

பணிலமோபசும்பூகமோ பாவையர்களமோ [யோ
மணிகொள்வேய்களோ மடந்தயா தோள்களோமலை
வணிகொள்செவ்விளநீர்களோவரிவையா தனமோ
விணையிலாவனக் குழக்களோதெரிவையரினமோ. உஉ

ஆனயாழினின்முழக்கமோ வரிவையர்மொழியோ
வானமாதர்கள் வசவராகசயாநம்வடிவைப்
பானலங்கணுற் பார்க்கவந்திழிந்தவப்பரிசோ
தேனுலாமலர்த் திருபலவடிவமாந்திரளோ. உரு

என்னவெண்ணிலா மடந்தையரிருமருங்கெங்குந்
துன்னியேவச வேசர்மெய்ச்சோதியைக்கண்டார்
பொன்னிறைந்ததம் புணர்முலைபூரிக்கக்காணு
வன்னமன்னவ ரதிட்டமற்றனமெனவயர்வார். உச

கண்டநீாவச வேசுராகாட்சிலயயுளைப்பி
ரொண்டருங்குழ லீரொணவொப்புநாங்கண்டே
விண்டுபேசிட வேண்டுமேவேளெனிலனங்க
னண்டர்நாட்டினி லுண்டெனிலவனேயாமறியேம். உரு

ஐயநுண்ணிடை யரிவைநங்காம்பையார்முன்னஞ்
செய்யருந்தவந்தவமலா ரைமெலாஞ்செனித்தென்
றையலாயென வல்லகாண்கண்டநேசாலும்
பையநீயுறப்பார்த்தியான் பார்த்திலேனென்பாா. உசு

பார்த்துநெஞ்சகம் பாதவிப்பதனிலும்பாரா
தார்த்துநாமனப் பிடிப்பதேபெண்மைகளாங்கா
ணோர்த்துயாமுமா நிறுத்திடின்கண்களேயோடி
நேர்த்துநோக்கிடி னென்செய்வேமெனவகநெகிழ்வார்.

காத்திலுறைத் தொழுதுயாங்கண்களாற்கண்டுந்
தரிக்குமோமனம் புயங்களேயோடியேதழுவ
வுருக்குநெய்யெனக் கரைந்ததுவுளமவருன்னிப்
பருத்தகண்களாற் பார்க்கிலென்படுவமோவென்பார்.

புண்ணியத்தொழிற் பதிவிரதையர்காம்புயத்தா
லெண்ணிலாலத்தி யெடுப்பவரிருகரமலராற்
றிண்ணிதானபுட் பாஞ்சலிசெய்பவர்தெளிவா
லொண்ணிலாவுபூ வுருத்திரரிவரெனவுரைப்பார். உகூ

விடுகிலார்களா யாடைகண்மிகவரிந்திடுவார்
வடவையோமுத்த மாலையோவெனமனந்தளர்வா
ருடைகுலைந்திரு கரங்களாலெடுத்துடுத்திடுவார்
படைமதன்பக்க பாதியோபாவியேமென்பார்.                    ௩0

விரதபாரணவேதியர் வித்தையான்மிக்கார்
பரததாண்டவனன்பர்பல் லாண்டுபல்லாண்டென்
றுரைசெய்வாய்மையி னெலியுடன்விச்சலனுடனே
யரசனீடியவம்மனை யரனுளேயணைவார்.                    ௩க

மதிதவழ்ந்தொளிர் மண்டபமதனுளேவைகி
யதிகதன்பெருவரிசை யாயினவெலாமளித்தே
யெதிரிலாவெழிலமைச்சர் பன்னிருவர்க்குங்கடாங்கள்
குதிகொள்பன்னிரண் டாயிரமிபக்குழுவதற்கும்.                    ௩உ

வாசிவாசிநூற் றறுபதினாயிரம்வகைக்கு
மாசில்பன்னிரண்டிலக்கமாம் பதாதிகள்வகைக்குந்
தேசிலங்குதன் குடைநிழலுலகிற்குஞ்சேர
நீசிறந்தநற் றண்டநாயகனெனாநிகழத்தி.                    ௩௩

தொக்கமைச்சர்க ளிருந்திடும்பீடத்தின்றூய
மிக்கபீடமே லிருத்திநற்கோசிகவிதங்க
டக்கமாமணியாரநற் றண்டநாயகர்க்கங்
கக்கணத்தினில் விச்சலனளித்திருந்தளவில்.                    ௩௪

வந்தவஞ்சனை முன்னரம்மன்னவன்காண
வந்தரத்தினின் றரவிபிலிகித்ததோரோலை
சுந்தரத்துடன் வீழ்ந்திடத்துணைக்கையாலரச
னிந்தவோலையிதென்னெனவெடுத்துக்கொண்டிண்பால்

அரியமாவட விபிமுதலாயினவெல்லாந்
தெரியவோதிட வல்லபேர்தமையெலாந்தெரிந்தே
வரவழைத்திது வாசியுமெனவவர்வாங்கிப்
பரிவினெவ்வொரு பேர்களாய்ப்பார்த்தறிந்திலராய்.

இவ்வெழுத்தினை யிதுவெனவறிந்துரைத்திடுவார்
கொவ்வைவாயுமை பாகத்தன்கணபதிகுமர
னவ்வவர்க்கலா லமரர்க்குமறிபொணுவரசே
திவ்வியத்ததிவ் வோலையென்றனைவருந்திகைத்தார். ௩எ

மன்னனீதினை வாசிக்கவல்லராரொன்றே
யுன்னிநந்திக ளொண்கரங்கொடுத்தலும்வாங்கி
யன்னவோலையை யரசன்முன்னோதினரரச
னின்னவாசகத் தத்தமேதென்னவங்கிசைப்பார். ௩அ

நீசெனிக்குமு னின்பிதாதாபித்ததாக
வாசிலெண்பத்தெண் கோடியாமருந்தனமரச
தேசனிக்குநின்செய்ய சிங்காதனத்தடியே
வாசமாயிருக்கின்ற தென்கின்றதிவ்வசனம். ௩௯

797 (4510)

ஐயமில்லேனின்னங்கங்க ளருங்களிப்பெய்தத்
துய்யநன்னிதிகாட்டுவன் ரேூட்டுவியென்ன
மெய்யதென்னவேயகழ்ந்திட விளங்கொளிக்கதிரோ
தையல்பாகத்தன்பாங்கன்முன்வைத்தவத்தனமோ. சய

கனகவெற்பின்மேற் கவிசனேவாங்கியகணக்கோ
வெனமிகுத்தவண் சோதியாயெழுவதுகண்டு
தனகிவிசசலன்றண்ட நாயகாதமைத்தொழுதே
யனகசீயிரண்டாஞ்சம்பு வெண்பநின்றறிந்தேன். சக

என்னவத்தனமெடுத்து நற்றிட்டமதிட லு
மன்னலக்கமாயிருத்தல் கண்டதிகவாச்சரிய
மன்னுநெஞ்சுடன்விச்சல னமாத்தியர்மற்றோர்
பின்னேயுந்தண்டநாதனைத் துதித்தனர்பெரிதாய். சஉ

விச்சலன்வசவேசனை விரும்பியேநோக்கி
யிசைபேசியென்னங்கங்க ளனைத்தையுமெனேயு
நிச்சயந்தரும்பரிவிஞ னிறுத்துதியென்ன
வச்சமில்லராந்தண்ட நா யகருமங்கறைவார். சங

நிருத்தனீடுலகனைத்தையு நிறுத்தரனின்னே
யொருத்தனேப்பரிந் தாள்வதோபாரமோருனைகேள்
கரூத்துணீசிவன்கருத்தனென் றிருப்பையேற்கனமோ
திருத்திமண்புரப்பது வெனநங்கிகள்செப்ப. சச

தருக்கிவிச்சலனுரைசெய்வான் மரங்களிற்றருவுங்
கிரிக்குண்மேருவுங் கிளரொளிமணியினமவையு
ளருத்தியானசிந்தாமணி யதுவுநற்பசுவுட்
டெரித்ததெய்வநற் றேனுவுமிருவருட் சிவனும். ௬௫

போலமைச்சர்களனைவருட் பூச்சியராகிக்
கோலமேவுதிரொன்றரு வளமெலாங்கொடுத்தே
சீலநற்பலதேவனு ரகத்தினிற்சென்றே
மேலராயிருமென் றெதிர்விச்சலனவிளம்ப. ௬௬

எழுந்துநற்றண்டநாயகர் சிவபத்தர்புடையே
யொழுங்கிவந்திடச்சேனையோ டின்னியமுவரி
முழங்கல்போன்மிகமுழங்கி முன்னூர்த்தெழச்சென்று
விழைந்ததங்கணன் மாமனுரகத்துளேமேவி. ௬௭

சிவனருச்சனைசிவத்துதி நேயராயிருந்தா
ரிவரைவிச்சலனெய்தலா விருநிலமுழுதுங்
கவலைநீங்கின கடவுளர்பூசனைகனத்த
தவிகொளாகுதிநிறைந்தன வளமெலாமணைந்த. ௬௮

இனையநாளிலேயெம்பிரான் வசவேசரினிதாய்த்
தினமுநற்சிவ ராத்திரிவிரதமேசெய்வார்
புனிதரன்பரோ புனிதரொன்றெண்ணுமெய்ப்பரிவு
நினைவிலுமவர்குற்றங்க ணினைந்திடாநெறியும். ௬௯

வஞ்சியாதுளதன்பாக்குக கொடுத்திடும்வனப்பு
நஞ்சருந்தினனிடத்தினுங் கேட்கலாநலமு
மஞ்சிமுன்னென் றுபின்னென் று மொழிதராவறிவு
நெஞ்சினுநடுவிலைமையே நீங்கிடாநிலையும். ருய

குற்றமன்பர்பாற் கூடினுந்தமதெனுங்குணமும்
வெற்றியாற்பர சமயஞாவென் றிடும்விறலு
முற்றறிந்தர நிந்தையாக்குட்கொடாவுரமு
நற்றவத்தனை யிகழுநாகேட்கலாநலமும். ருக

திரமிலன்னியர்க் கஞ்சலிசெய்கலாத்திறமும்
பரவுசென்மத்துங் கேதுவாந்தொழிலுருப்பயமு
நிரயவேதுவா மிந்தியவழிசெலாநினைவும்
வரைவில்காமமே யாதியாமாறிலாமறப்பும். ருஉ

நவின்றசொற்படி யெப்படியப்படிநடையு
முவந்துசங்கமத் துயர்ச்சியேசிறுத்துநல்லூாமுஞ்
சிவன்றனன்பர்பா லடிமையேசெய்யுநற்றிறமு
மவன்றன்மேனியே கனவினும்பேணுமெய்யறிவும். ருங

அத்தனன்பர்சொன் னூலையேகேட்குநல்லவாவுஞ்
சுத்தமாதவர் சேடமேயருந்துமாதுணிவு [ஞ
மெய்த்தவத்தர்சொற் கெதிர்மொழிகொடுக்கிலாவெரு
சித்தசங்கமந் தமதுயிரிலிங்கமென்னினைவும். ருச

பத்திநற்பயிர் வேலியாமவர்கண்மேற்பரிவு
முத்தியில்லெனும் புல்லராக்கண்டிடின்முனிவு
மொத்தியேதுவந் தடுக்கினுந்தவர்த்தொழுமுரமும்
புத்தியாற்பவி காண்கிலாப்பூசனையொளிப்பும். ௫௫

துண்டமாக்சிரம் வீழினுமரவெனுஞ்சொல்லு
முண்டநீற்றர னன்பராத்தொழுங்கரமுகிழ்ப்பு
மண்டுநல்விர தந்தராயிவையொன்றுமாறுத்
தண்டநாயகா தருக்கியேசரிக்குமந்நாளின். ௫௬

வரங்கொணந்திகள் பெருப்புநம்மலர்மணமண்மேற்
பரந்தசெய்தியாற் பரமனன்னேயர்கள்பரிவாற்
சிரநகரங்குவித் திறைஞ்சுவமென்பவர்சிலரு
மிரந்துவாழுது மெனவரும்பெயர்களெண்ணிலரும்.

வே று.

நந்திகைப்பூசைகொள்வோ நாமெனநண்ணுவாரும்
புந்தியாற்கண்டாற்பாவம் போமெனப்போதுவாரு
முந்தியேவசவதீர்த்த முழுகுவோமெனச்செல்வாரு
நிந்தியாப்பத்திநேச நேடுவோமெனச்செல்வாரும். ௫௮

வே று.

ஆகவேவையம் பரிவண்டிலானையின்மீதும்
வாகுநந்தியின் சிவிகையின்மீதினும்வருவோர்
மோககண்டியின் முடியினர்தூசுசேர்வேணிச்
சேகரத்தினர் முண்டிதர்சிறுசடைத்திரளோர். ௫௯

வடுகுகன்னட மாரியந்தமிழுடன்மலா
மடியதாயுள தேசத்திலருந்தவரெல்லா
முடிவிலாதவர்வருதலை நந்திகண்முன்னிக்
கடிகொளமமனைவீதிகண் மிகவலயகரித்தார். ௬௫

வேறு

நந்திகள்வாழகல்யாண நகரமேநடலதாகச
சந்ததஞ்சிவமாயேசா சங்கநகரை ன்போல
வந்துறவெதிரோசென்று வசவதேசிகாடணிநது
தந்தலைக்கவாதாட்போது சாத்திட்டுக்கொண்டுசென்று.

பொறகலசத்துரோற புனிதாபாதமவிளக்கி
நற்கதியமர்பபரொன்று நல்லவாதனத்திருத்திப்
பிறகனபதியாலே பெரியதாணீதாட்டி
யெறகடிமலாகள்சூட்டி யெழிறதூபதீபங்காட்டி. ௬௬

எழுந்தவர்செய்யுபூசைக்கிருத்தவையெல்லாஞ்செய்வ
தழுந்துநற்பத்தியாலே யறுநூவையைந்துபேதச் [த
செழுந்திருவமுதமூட்டித் தெண்டனிட்டெழுந்துநின்று
தொழுங்கரத்தினராயனபின் றோத்திரமிகவுஞ்செய்து

தாபதரிருக்கசசொல்லத் தாமிருந்தவாகளபாதப
பாபநாசனமாந்தீர்த்தம பரிகலச்சேர மெல்லாஞ்
சோபனமுநதியென்னுஞ் சுகப்பயிரவித்திதென்று
கோபமில்வசவதேவ ரன்பிறைகுலாவிக்கொண்டு. ௬௮

அவர்கண்முனமதுரகீத மஞ்சிறைப்பாடியாடி, புவ்கை சோமுகத்தராகி புத்தமதவத்தோரக்கெய்து, நவமுறு நகுமுலைக்கண்டு நன்மனமுடலங்கம்பித, இவர்கள் வேண்டியதேதென்னவெண்ணி முன்னண்ணிக்கேட்டு.

தனமணியாரமாடை தையலார்தேனுபூமி
கனதிவாகனமபுரங்கள் கந்தசந்தனகர்ப்பூர
மெனவுளவிவ்வையுமற்று மினிபவுர்ச்சனோசாக
கனவரதங்கொடுத்திவ் கன்பிறைற்றொழுதிறைஞ்சி. ௭௧

விரதசீலத்தாக்கேற்ற விதமொலாம்வெவ்வேறாக
வர்முறைவமைத்தமைத்துவைத்துத்தம்மடத்தில்வாராப்
பெரியவர்நமக்குமன்னம பிறங்குகாவடியின்மூடிக்
திரமுறுபத்தியாலே திரிவிதப்பொழுதுநல்கி. ௭௨

வேசியாமனைவிடாத விடர்களாஞ்சிவவேடத்தா
ராசிலாவெண்சேரீரா ருயிரார்லோகமெல்லாம
வாசியாலவர்கள்வகு மனைதோறுமவளங்கணல்கி
நேசராய்வசவதேவா நிகரிலாதிருசகுநாளில். ௭௩

தண்டநாயகச்சருக்கம
முற்றிற்று.

---

ஆகத் திருவிருத்தம - ௭0 அ.

திருச்சிற்றம்பலம்.

—*—

## தண்டநாயகச்சருக்க

## வசனம்.

ஸ்ரீவசவேசரிவ்வாறிருப்ப, விச்சலநகரமென்னுங் கலியாணநகரத்திலிருந்த தமதுமாமனார் ஸ்ரீபலதேவர் சிவபதத்தையடைந்தனர்.

விச்சலராஜன் ஸ்ரீபலதேவர்க் கன்பானவரையழைத்து அவர்க்குப் பிள்ளைகளாவது சகோதரராவது மற்று முறவினராவது இந்தப் பூபாரத்தைக்காப்பாற்றத்தக்கவ ருண்டோவென்று வினவினன்.

அவர் ஸ்ரீபலதேவர்க்கு மருகனார் வசவதேவர் கூடலசங்கமத்தில் குருபாதத்தியானஞ் செய்துகொண்டு வீற்றிருக்கின்றனர். அவரே யமைச்சுக்குத்தக்கவரென்று சொல்லினர்.

அரசன் மந்திரிகளிற் றக்கவரையழைத்து வசவதேவரையெமது பட்டத்துயானையின்மே லழைத்துவாருமென்ன, அவருஞ் சங்கமேசரத்துச்சென்று வருந்தியழைக்க, வசவேசரும் நமது குருபாதங்களைப்பிரிந் தெவ்வாறு செல்வதென்று வருந்த சிவபெருமான் முன்போலவே தேசிகரூபியா யெதிர்வந்துநிற்ப, இவரும் வணங்கிநிற்பவே, அவ்வரசன்பணிகளையும் நமதுபணிவிடைகளாகவே நினைத்துச் செய்வாயென் றுஞ்ஞாபிக்கத் திருவரு ளிதுவோவென்று அவர்கொணர்ந்த யானையின்மீதேறிச் சென்று சகலபரிஜனங்களோடு விச்சலபுரத்தரச னரண்மனைக் குச்சமீபத் தரசன்வந்தெதிர்கொள்ளத் தாமும் யானையினின்று

மிறங்கி இராஜசபையிற்சென்று அரசனால் மந்திரிபபட்டமுந் தண்டநாயகமென்னும் பட்டப்பெயரும்பெற்று வீற்றிருக்குந் தருணத்தில்,

ஆகாயத்திலிருந்து எழுதிய வோலைச்சுருள் ஒன்று வந்து வீழ, அரசனதை வரவழைத்துப்பார்த் தின்னபாஷையென்று தெரியாமையால் யாவர்க்குந்தெரிவிக்க வெல்லோருமயங்கி யிந்தப்பாஷை தேவருந்தெரிவ தரிதென்றுநிற்க, அப்போது அரசனதுகுறிப்பால் தண்டநாயக ரவ்வோலையைப்படித் திதன்பொருள்யாதென்னில், அரசனே யுமதுஜனனத்துக்கு முன்பாகவே உமதுபிதாவினால் ஸ்தாபிக்கப்பட்ட பொருள் எண்பத்தெட்டு கோடியாகும், அதுவும் இந்தச்சிங்காசனத்தின்கீழாகவே யிருக்கின்றதென்று இதிலெழுதப்பட்டிருக்கின்றது இப்போதே பரிக்ஷித்துப்பார்க்கலாமென்று சொல்ல, அரசனுமவ்வாறே யெடுப்பிக்க, அநேக சூர்யோதயம்போலக் கனகமிற்குறைவின்றி ப்ரகாசிக்க, அந்த மகிமையைக்கண்ட வரசன்முதலிய யாவரும் வசவதேவரை வணங்கித்துதித்தனர்.

பின்னும் அரசன் வசவரைப்பார்த்து என்னையும் ராஜ்யத்தையு மிங்கிருந்து ரக்ஷிக்கவேண்டுமென்றுசொல்ல, உலகத்தையெல்லாம் ரக்ஷிக்கும் பரமசிவன் உம்மைமாத்திரம் ரக்ஷிக்கக் கடனில்லையோ, சிவனே கர்த்தாவென்று நினைத்திருந்தால் இந்த பூபாரம்பெரிதன்றுஎன்றுவசவேசர்சொல்லி யவ்வரசன் குறிப்பின்படி ஸ்ரீபலதேவரது வீட்டிற்சென்றிருந்து அநேகம் அடியார்களைப் பூசித்துக்கொண்டிருந்தனர்.

தண்டநாயகச்சருக்க வசனம்
முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## சென்னவசவேசுரர் புராணம்.

சங்கமாநேயமெல்லாந் தமக்குடலாகியுள்ளார்
மங்கைநாகாம்பையார்தம் வயிற்றில்வந்துதயமானார்
பங்கபுண்ணியபாவத்தின் பரப்பெலாம்பறித்தரீரா
ரெங்கணுந்திகளையொப்பா மியல்புளார்மயலிலாதார். க

மலமிலாதிருப்போர்சென்ன வரவையரொன்னும்பேரா,
ருலகியல்பேசாராசா னுவப்புறுநேயமுள்ளா, ரலைகொ
ள்காமாதியில்லா ரனைத்துமெய்யிலிங்கங்கண்டா, ருல
வுதத்துவஞானத்தா ருயர்ந்துளாருணையான்மிக்கார். உ

ஆசையில்வாழ்க்கையில்லா ரானந்தவனுபவத்தார்
பாசமில்சங்கமேசர் பரிகலத்திச்சைநீங்கார்
தேசுறுநித்தமான சிவபுண்ணியத்தார்நல்லார்
நேசமோடாறுறுறு மூன்றிரண்டொன்றினின்றார். ௩

ஒப்பரும்பரமயோக ருணைக்கருஞ்சிவானுபோகர்
செப்பருஞ்சரணர்மோகர் திரிகாலபரித்தியாகர்
துப்பிலிங்காபிமான தாகர்தூய்தாகுமாகர்
தப்பருஞ்சோகரோகர் சங்கரபத்தியூகர். ச

கூடலசங்கமேசன் குறைகழற்கன்புசெய்து
நீடவங்கிருந்துவாழ்ந்து நித்தராநந்தியார்தந்
தாடொழும்பிரியமிக்குர் சங்கமேசுரத்தினின்றுந்
தேடருங்கல்லியாணச் செழுநகர்வந்துசேர்ந்தார். ௫

தேசிகவசவதேவர் செய்யசன்னிதியிற்சென்றே
யாசைமேல்கொண்டுரோம மானவைசிலிர்த்துமேனி
பேசரும்புளகமண்டிப் பெருவிழியருவியாறாய்
வாசகங்குன்றிச்சென்ன வசவராசையர்பணிந்து. ௬

எழுகெனவெழுந்து நந்தங் கிணைமலர்ப் பதம்பன்னீரா,
லழகினலாட்டிக்கந்த மணிமலர்சாத்தித்தூபஞ், செழு
மணித்தீபமெல்லாஞ் செலுத்திப்பின் சிரத்தையாலே,
தொழுகாஞ்சென்னிகூப்பித்தோத்திரஞ்செய்யாநிற்பார்

வேறு.

அருளாரமுதே சரணஞ்சரண மன்பர்க்கணியே சர
ணஞ்சரணங், கருநாசனனேசரணஞ்சரணங் கண்ணே
மணியேசரணஞ்சரணங், தெருளேபொருளே சரணஞ்
சரணந் திருவேதருவே சரணஞ்சரணந், தருமாகரனேச
ரணஞ்சரணந் தவநற்குருவேசரணஞ்சரணம். அ

வேறு.

எங்குமீசனே டேகுவாய்சரண மென்கருத்திருட்கிர
வியேசரணம், பங்கவாதனைப்பாற்றுவாய்சரணம் பரம
பத்திவிற்பத்தியாய்சரணஞ், சங்கரன்றிரு வுருவமேசர

ணங் தருமஞானமாஞ் சக்குவேசரணங், திங்கள்வேணி
யார்செல்வமேசரணங்தெளிவிலேனருந்தேசிகாசரணம்

முந்தைநன்னெறிமூலமேசரண முத்தியீதெனுமொ
ழியனேசரண, நிந்தையொன்றிலாநின்மலாசரண நிகரி
ல்சைவநன் னிதியமேசரணம், வந்தவெந்துயர் மாற்று
வாய்சரண மதந்தவெஞ்சமண் மறவியேசரணஞ், சிந்
தையின்வழிசசேரலாய்சரணந் தெளிவிலேனருந் தேசி
காசரணம்.      ய

வேறு.

என்றுசென்னவசவதேவ ரிஙஙனந்துதிக்கவே
நின்றபேர்கடம்முளே நினைந்துநின்றுசெப்புவார்
நன்றுநந்திதேவருண்மை நன்மைவல்லரிவரலா
லன்றணந்தனுவிலு லளந்துணாக்கவரியதால்.      யக

எனவுரைத்தபின்னர்சென்ன வசவதேவரியல்பெலா
முனநினைந்துநந்திதேவர் மொழியவல்லரிருவர்தங்
கனமதானமகிமைநீதி கண்டிசைப்பனத்தனென்
றனைவரும்புகழுந்துநிற்கு மந்தநல்லவெல்லையினை.      யஉ

சென்னவசவேசுரா புராணம்

முற்றிற்று.

---

ஆகதிருவிருத்தம் - கூஉ0.

உ

திருச்சிற்றம்பலம்.

---*---

# சென்னவசவேசுரர் புராண வசனம்.

சென்னவசவேசுவரர்—ஜங்கமபக்தியே வடிவமாயுள்ளவர் நாகாம்பையாரது திருவயிற்றவதரித்தவர், வசவதேவர்க்குச் சமானமானவர், இருவினைப்பற்றற்றவர், இல்வாழ்க்கையில்லாதவர், ஜங்கமரது பரிகலத்திச்சை நீங்காதவர், லிங்காபிமானியாயுள்ளவர்.

இவர் கூடலஜங்கமேசுவரத்திற் சிவபெருமானது பாதாரவிந்தங்களி லன்புவைத் தங்கு நெடுநாளிருந்து கல்யாணபுரத்தெழுந்தருளியிருக்கும் வசவதேவரது பாதங்களைப்பணியும் விருப்பமிகுந்து அங்கிருந்து வசவதேவரது சந்நிதியில்வந்து ஆசைமிகுந்து ரோமங்கள் சிலிர்த்து விழிகளினீ ராறாகப்பெருக வாக்கானது குழறப்பணிந்து தண்டம்போற்கிடந்து வசவதேவரெழுந்திரென் றுஞ்ஞாபிக்க வெழுந்து அவரது பாதங்களைப் பனிநீராலாட்டி கந்தமும் மலருஞ்சாத்தித் தூபதீபமும் பணிமாறப்பண்ணிக் கைகளைச் சிரத்திற்குவித்து அநேகஸதோத்திரங்களையுஞ்சொல்லி நிற்க.

அங்குச் சன்னிதியிற் கைகட்டி வாய்பொத்திநின்ற அநேகமாயிரமடியார்கள் இந்த வசவேசரதுபெருமை முழுதுமறிந்தவரிச்சென்னவசவதேவரோ நமபோல்வாருளாக குட்பட்டதன்று இச்சென்னவசவேசரது பெருமையையும் வசவதேவரேயறிவரன்றி மற்றையரறியார், இவ்விருவர் பெருமையையுஞ் சிவபெருமானே யறியவேண்டுமென்று புகழ்ந்து மகிழ்ந்துநின்றனர்.

சென்னவசவேசுரர் புராண வசனம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



# அல்லமாப்பிரபு புராணம்.



செய்யசங்கரனல்லமாப்பிரபு தேவனொன்றொருதேகர் போல், வையமுய்யமகிதலத்திடை வந்திறங்கியமகிமை யார், பொய்யெனும்பிரவஞ்சநீதி பொருந்திலாததபோ தன, னையமொன்றற மண்ணுளோர்க ளகத்திலுற்றத றிந்துளார். ௧

கன்மமில்லவர் மாயையாதிடு காரியங்கள் கடந்துளா ர், சென்மாசனர்நூர திட்டி தெரிந்தசெய்திய ரொப்பி லார் நன்மைதீமை பகுத்தலற்றவர் நாடுபொன்மணி யோடெறுங், தன்மையாகவிகழ்ந்துகாமம தாதியாறுத விர்ந்துளார். ௨

உடல்விகற்பமெலாமொழிந்தவ ரூழிநீரனல்காலுரு
தடல்படைத்தொருகாலமுமன மாதிநாலணையாதுளார்
விடலிலாதசிவானுபூதி விழிக்குளேவிழிவிரவுவார்
நடைநிலத்திலுறார்நிழற்றொழி ஞொடாணுதலத்தினர்.

கரத்தலத்திலிலிங்கமும்மலை கரியகுஞ்சி புநெற்றிமேற்
றரித்தபுண்டரமுந்துலங்கிய தன்மையுள்ளவராயரோ

விரித்தவேதசிவாகமாதிக வித்தையுள்ளவராகிநன்
னிருத்தனந்தரியாகயோக நிலைக்கருத்தினராகியே. ௪

பதார்த்தன்னிலிதுவிரத்தா பரந்தபேருள தில்லரோ,
சத்துமுள்ளதுமில்லரோவென நானெனாதவா சொல்ல
வே, யொருதுபாவனை யுள்ளதுமில ரோவெனும்படியு
டையராய், நித்தசிந்தனை யிறரோமறை யிறரோவெனு
நிலையராய். ௫

சரிக்குமெல்லையினுள்ளதாரு வினங்கள்காடுகள் சை
யமா, நிரைந்தெழுங்கடலேரிதம்மி லிறைஞ்சியேறவி
லங்குமே, லருந்திமேனிகொடண்டமூடுவரனுவதாகு
வாமேகமே, விருப்பாரீரிடப்பாவானவ ரோகாணுவி
டமெய்துவார். ௬

இன்னதன்மைய ரல்லமாப்பிரபு வென்னுநற்கலியா
ணமும், மன்னமேனிகொடமலநகிக ளாதிகபத்தியினன்
புகீ, னன்னியாயநிலைந்துவிசசல நகருணண்ணிநயப்பு
டன், மன்னரும்புகழவசவந்தவா மலர்க்கண்முன்னெ
திர்வருதலும். ௭

நந்திகேசுரர்நவமணித்திர ணன்மைவல்லவர்போலெ
ழுந், தெந்தையெய்தினனெனவறிந்தெதி ரெய்தியன்பி
னிறைஞ்சியே, செந்திரட்கதிரொன்னலாமரி யாதனைததி

டைசேரவைத், தந்தமெய்த்தவர்சோதிமேனியி னதிச
யந்தனைநாடியே. ௮

விளங்குபாதம்விளக்கிநீரை விரைந்தயின்று சிரத்தி
லு, முளங்குளிர்ந்திடவேதெளித்துட லுருகுநேயவுயர்
ச்சியால், வளங்கொள்பூதி யிருத்திநின்று வணங்கியெ
ன்னுயிராவாழ்வுநீ, யளந்தமுறபடியன்னமுள்ள தருந்து
மென்பழுதாறுகேன். ௯

என்னநல்லதிடமபணென்ன விலங்குபொற்பரியாண
மே, லன்னமாதியதானதிவ்விய வமுதுடன்கறியமுதெ
லா, மன்னலம்பெறவேபடைத்து மலர்க்கைகொண்டு
திரட்டியே, பன்னரும்புகழல்லமாப்பிரபு தேவர்பாணி
யின்மீதரோ. ௰

வேறு.

ஐயர்சுரிகைச்சவுண்டைய ராஜாகரத்திற்பிடிபிடியா
ய்ச், செய்யநண்பினளித்ததுபோற் றிரட்டித்திரட்டிவ
சவேசர், துய்யால்லமாப்பிரபுவின் றுணைகைகொடுக்
கவேற்றேற்று, வெய்யபசிகொண் டவாபோல மேன்
மேன்மாறுதருந்துதலும். ௰௧

எண்ணுமிலக்கத்தெண்பதினா யிரஞ்சங்கமத்திற்கினி
தாகப், பண்ணுமமுதுகறியெல்லாம் படைத்துத்துலங்
துப்பசிதீரா, தண்ணலமுதுநுகருகென்னுமளவில்வசவே

சுரர்தம்மைத், திண்ணமாகநிவேதித்தார் சிந்தைமகிழ்ந்
துபிரபுதேவர். மஉ

நல்லைநல்லைகணேந்திரனே நாதன்பத்திவித்தனையாய்
நல்லைநல்லைவசவண்ண நாடுமிரண்டாஞ்சம்புவே
நல்லைநல்லைதிருநந்தி நரலோகத்தினுருத்திரனே [தில்.
நல்லைநல்லையுனைப்போல்வார் நாங்கண்டறியோநானிலத்

மருவின்மணம்போன்மாணிக்கவயின்சேரொளிபோ
ற்கரும்பிடத்திற், பெருகுமிரதம்போலமுதம் பிரியாம
துரம்போலநீ, யுருவமெடுத்தவஞ்ஞான்றே யுன்றனுட
னேயுதித்ததோ, பொருவில்பத்திபொறைஞானம்பொ
ன்றுநீதிபுத்திரனே. மச

வேறு.

தேயுவினுடலமெங்குஞ் சேரவாயாறுற்போல
வாயுவின்மேனியெல்லா மன்னியதலையாறுற்போற்
பாயுநீராகமுற்றும் படர்தருகாலாறுற்போ
னீயுறுமுருவனைத்தும் பத்திகாணெனநிகழ்த்தி. மரு

மற்றுநன்மொழிகளாலே வாழ்த்தியபிரபுவின்முன்ன
முற்றமெய்ப்பத்தியாலே நந்திகளுறவணங்கிப்
பெற்றனன்பேறின்றென்னப் பேசிக்கைகூப்பிநின்று
பற்றருநேயராகிப் பாவிப்பின்பகராநிற்பார். மசு

நித்தனே பரமானந்தா நிர்க்குணநிகரொன்றில்லா
முத்தனே முத்தர்வாழ்வே முற்றுணாவுடையமூர்த்தி
சத்தமே பொருளே துய்ய தருமியே பெருமைநீங்கா
வுத்தமாவுனக்குநானே வுரியநல்லமுதளிப்பேன். ௰எ

அன்றுமாகயிலையுச்சி யதனிடைக்கிரியயந்த
மின்றருமிடையாளத்தன் மெய்க்கணநாதர்க்கன்ன
மின்றளித்திடுகேனென்ன வெண்ணியங் கவரைநோக்க
வொன்றியநீலகண்ட னுருவராயிருத்தல்கண்டே. ௰அ

சங்கரனந்தநாதன் றனெவன்கணங்களானொன்
றங்குமையையமெய்த வரனறிந்தவரைநோக்கச்
சிங்கமாமுகத்தராயுஞ் சிம்புளின்முகத்தராயும்
வெங்கயமயிடங்கோமான் மேடவானனத்தராயும். ௰௯

புலிபரிவராகம்பூனை பொருந்தியமுகத்தராயு
மொலிகடன்மகரமாதி யுயர்ந்தமீன்முகத்தராயும்
வலிகொள்பேரண்டன்சேவன் மஞ்ஞையின்முகத்தராயு
மெலிநடையனம்பருந்து விடவராமுகத்தராயும். ௨௰

அழகியமுகமொன்றுதி யாயிரமீறதான, செழுவியமு
கத்தராயுஞ் செப்பியமுகங்கட்கொவ்வா, தெழுமவயவ
த்தராயு மெழினிறம் வெவ்வேறுயும், பழுதறு கணத்
தோர்நிற்கும் பான்மையை யுமையாள்பார்த்து. ௨௧

நம்பனதனையங்கண்டு நற்கணநாதர்தாங்க, ளிம்மகாவ
டிவங்கொண்டா ரென்னவே பணைமகிழ்ந்து, செம்மை
யாரிவர்கட்கெல்லாந் திருவமுதளிப்பனென்று, கொம்
மைவெம் முலையாளத்தற் குறுகிவிண்ணப்பஞ்செய்ய.

நல்லதுபடைப்பாயென்ன நகமயின்மகிழ்ந்துபோற்றி
யொல்லையிற்கடனீராற்று வுயர்பலபாண்டந்தோறு
முல்லையம்முகைபோலன்ன மொழிவருங்கறியின்வர்க்க
மெல்லையிலப்பவர்க்க மிருங்கனிநெய்பாலெல்லாம். ௨௩

மலைகளோவன்னக்குப்பை வன்கனியப்பவர்க்க, முல
வருங்கிரிகடானோ வொண்கறிவர்க்கபாண்ட, மலைகட
லாவையோநெய்பா லரியபானாதியென்னத், தொலைவற
வமைத்துவைத்துத் தோகையாள்கணிக்குங்காலை. ௨௪

குறைவறு கணத்தோர்மற்றோர் குறுங்கணநாதன்ற
ன்னை யுறவழைத்தமுதமாய்த்தோ கேளெனவோடிய
ன்ன, மிறைவியேயாய்த்தோவென்ன வாய்த்தெனவிய
ம்பவன்னே, சிறுபசியாளனொந்தே னெனக்களிசிறிதூ
ணென்றான். ௨௫

சிவைமகிழ்ந்தவனையங்கண்சிவார்ச்சனைசெய்வித்தன்ன
நவமுறுங்கறிபானாதி நலம்பெறப்படைத்தபோழ்தி
லவனொருகரத்தால்வெள்ளி யங்கிரிபோலப்போலக்
கவளமாயனைத்துங்கொள்ளக்கண்டுமையதிசயித்தாள்.

கணங்களிற்சிறியோனேகன் கடும்பசியிவ்வாறுறு, விண
ங்கிலாப்பெரியோர்செய்தியென்னையோவென்னவெண்
ணி, மணந்ததம்பிரானூர்பாற்போய்வந்தவிச்செய்திசெ
ப்ப, வணங்குநீகேட்பாய்கந்த மருங்கணாதர்மேன்மை.

எம்முடலவர்க்குமேனி யவருடலெமக்குமேனி
நம்முயிரவர்க்காதார மவருயிர்நமக்காதாரந்
தம்மைநேரில்லாருன்னிற் சலசரூராகும்போகு
மிம்முறையிவரிமைத்தாற் பிரளயமெங்குமெய்தும்.

ஆதலாலுமையேநம்பா லடியவாபெருமைதன்னை
யோதொணாதொருவராலு மென்றலுமுமையிறைஞ்சி
யீதெலாமுனதுலீலை யெனவிருந்தனளியானே
நாதனேயுனக்கிங்கன்ன நலம்பெறப்படைக்கவல்லேன்.

அனைத்துநின்செயல்களென்றேயம்புவியுறப்பணிந்திங்,
கெனைப்பரிந்தாள்வாயென்ன விருகையாலெடுத்தணைத்
திங், குனக்கிணையானநேய ரின்றெனவுவந்துரைத்தார்,
கனத்ததங்கருணைநோக்காற்கண்டிருந்தருளிச்செய்வார்

காமதேனுவுநினைத்த கடிதருண்மணியுஞ்சங்குந், தாம
ரைநிதியுங்கற்ப தாருவுநின்றன்முன்றிற், சேமமாயிருக்
கத்தந்தேனுஞ் சிந்தையினினைத்தவெல்லாந், தோமறப்ப
லிக்கத்தந்தேஞ் சொல்லெலாம்பலிக்கத்தந்தேம். ௩௧

இன்றுபோலென்றுநிற்க வேதுநீதீண்டிற்றெல்லாம்
பொன்றிரளாகவிண்ணும் பொருந்தியகண்டிப்பாக
நன்றுடனமையும்வெல்ல நற்றவர்வெருண்டுசொல்லுங்
குன்றுணைபொறுக்கவெல்லாக்குலவுசித்திகளுந்தந்தேம்

இன்னமும்வேண்டிற்றீவோமெழில்வரமனைத்துமென்று, மின்னெறிபோலவேகிட் களத்தராம்பியப்புநாடி, மன்னரும்பயத்தராகி வணங்கியஞ்சலிக்கரத்தா, னன்னயமதனுற்கண்டு நயந்துவந்திருக்குநாளில். ௫௫

அல்லமாபிரபு புராணம்

மு ற் றி ய து.

ஆ க தி ரு வி ரு த் த ம் - ௫ ௫ ௫.

---

உ

திருச்சிற்றம்பலம்.

—*—

அ ல் ல மா ப் பி ர பு பு ரா ண

வ ச ன ம்.

அல்லமாப்பிரபுவென்பவர் சிவாமிசமாயுள்ளவா மாயைக ககப்படாதவர் யாவர்மனத்தையு மறிந்தவர். கையிலிலிங்கமுள்ளவர்.

இவர் பூமியிற்சஞ்சரிக்குங்கால் எதிர்தோன்றுந் தருக்கள் காடுகள் மலைகள் ஆறுகள் ஏரிகள் சமுத்திரம், முதலானவைவணங்கி யொதுங்கிச்செல்லத் தாஞ்சென்று மேகமண்

டலத்திலும் நீரினிடத்தூஞ்செல்வர். தேவர்கள்செல்லுதற் க ரியவிடங்களிலுஞ் செல்வர்

அத்தன்மையான திருமேனியோடு வசவதேவரது சிறந்தபத் தியைத் திருவுளத்தினினைந்து விச்சலநகரத்திற்சென்று அவர்க ண்களிற்றோன்றச செல்லவே யவரு மெதிரசென்று வணங்கி யொரு சிங்காதனத்திலேற்றி அல்லமாபரபுவின்றிருமேனியி ன திசயத்தைக்கண்டு அவாபாதங்களை விளக்கி யந்நீரைச் சிறிதுட் கொண்டு சிரத்திற் சிறிது புரோக்ஷித்துக்கொண்டு விபூதியுமெ திர்வைத்து வணங்கி யெனதுயிர் நீவிரோ யெளியேனிடத்து முற்சிகையமுது செய்தருள்க வென்று பிரார்த்தித்து நிற்க அவவாறேயிடமபண்ணலா மென்ன அவ்வாறே யிடம்பண் ணி யமுதெடுத்துக் கையிற கொடுக்கக கொடுக்கக் கொடியப சிகொண்டவர்போ லேறறேற்றுண்ணவே லக்ஷத் தெண்பதி னாயிரஞ் சங்கமங்களுக்குச் சமைத்த வமுது கறிகளெல்லாம் படைத்தும் பசிதீரா தினனுமு படைப்பா யென்ன வசவதே வரு மிவரின்னரென்றறிந்து தம்மையே நிவேதித்தனர். பிர புதேவரு மதைக்கண்டுமகிழ்ந்து.

ஏகாரலோக ருத்திரரோ கணேந்திரரோ இரண்டாஞ்சம்புவே யும்மைப்போல்லாரைகண்டறியேன் கரும்பில்ரஸம்போலவும் மாணிக்கத்தி லொளிபோலவும் பிறபபிலேதானே சிவபக்திமு தலாயின வும்மிடத்துத்தோன்றின. இவ்வாறுபுகழவே வசவ தேவரும பக்திபூர்வமாகவணங்கி யஞ்சலித்து ஸ்வாமி ஸாக்ஷா த்சிவாகாரமின வுமக்கு எளியேனே வமுதுபடைக்கச் சத் திபுள்ளவன.

முன்னொருகாலத்தில் உமாதேவியார் சிவகணங்களுக்க முது படைக்கவேண்டு மென்று நினைத்து நீலகண்டராகிய சிவபெருமானின் வேற்றுமை யுணராது மயங்கிநிற்க சிவபெருமானக் குறிப்புணர்ந்து கணங்களைநோக்கவே சிங்கங் கரடி புலி முதலிய முகமுடையவராயினர். அப்போது வேற்றுமை யறிந் துமாதேவியா ரன்னம்படைக்கவெண்ணக கணங்களிலுள்ளார் ஒருசிறுகணத்தை யுமையாரிடத்து உணவு கேட்கும்படியேவ அச்சிறிய கணநாதனு மவ்வாறு கேழ்க்க உமையாரு மவ்வாறு படைக்க அச்சிறியவ னம்மைசேகரித்த வுணவுகளும்பற்றாது பாகபாண்டங்களையு மெடுத்துண்டு ஏற்றசாமக்கிரிகளையும் மடுத்தனன். இதுகண்டு உமாதேவியார் மனங்கூசி இதுநோக்கிச் சிவானுகரஹம் பெற்றவர்க்கு நாமோ வமுதளிப்பமென்று நின்றனளென்னில் எளியேன் தேவரீருக்கமுதுபடைக்க வல்லனோ என்று வணங்கித் துதித்துநிற்க.

அல்லமாப்ரபு தேவரும் வசவதேவரே நீர் இவ்வாறுசிவதருமங்களைச் செய்தலால் காமதேனு கற்பகம் சங்கநிதி பதுமநிதி யுமதுமுற்றத்தி லெப்போது நின்று பணிகேட்கத் தக்கது நீர் நினைத்ததெல்லாம் பலிக்கக்கடவது தவத்தர்சொல்லுங்கோப மொழிகளைப் பொறுக்கத் தக்க சித்தியையுந் தந்தோம் என்றருளிச்செய்தனர்.

அல்லமாப்பிரபு புராண வசனம்

முற்றிற்று.

---

மகாமகோபாத்யாய . . . . . . ர்

உ

திருச்சிற்றம்பலம்.

## கள்ளர்க்கருளிய திருவிளையாடல்.

அன்பிலென்னாதா போற்றி பவங்கள்பன்னாதாய்போற்றி
துன்பமுன்னாதாய்போற்றி துரிசுமுன்னாதாய்போற்றி
நின்புகழ்நாதா போற்றி நினைவினென்னாதாபோற்றி
வன்புமுன்னாதாபோற்றி வரதண்டநாதாபோற்றி. க

ஒருதினம்வசவராச ரோங்கியமடத்திற்றுய்ய
பொருளினைக்கவர்வான்கள்வா புகவரிதாகியீசன்
றருமகற்றவாபோற்சென்றுற் றவறிலையெனவறிந்து
கருவழுதுணங்காயாடை சேர்த்துத்தங்கழுத்திற்கட்டி.

கொண்டுகெண்டிகைவிபூதி கூடுதலின்றிச்சென்றே
யொண்டவரமுதுசெய்யுங் காலையினுட்போய்ச்சேர
வண்டவரல்லானந்த மடந்தனில்வாராவொன்னத்
தண்டநாயகர்மகிழ்ந்து சரணார்த்தியெனக்கைகூப்பி. ௩

பந்தியிலிருத்திப்பூசை பண்ணுமென் றுரைக்கலங்கண்,
வெந்துயர்கொண்டுமேனி வியர்த்துளநடுங்கிவாடி, வந்
துகாமகப்பட் டோமே மரணம்வந்ததுவேயென்ன, கொ
ங்கொருவரையொருத்தர் நோக்கியுண் ணடுங்குங்காலை.

ஆயிடையவர்கள்கள்ள மறிந்திவர் பவிகளென்று
தீயவெங்கோபராகித் தேசிகரொழுந்தபோது
நேயராநந்திதேவர் சித்தர்வேடத்தாசித்த
ரேயெனவழுதுணங்கா யிலிங்கமாயிருந்த நன்றே. ௫

சோரரோயீசனையந் துன்னியகருத்தராகி, நேரின்மந்தி
ரோபதேச நெறியெலாநிறையப்பெற்று, வீரசைவாசார
த்து விதியுளமிகவிளங்கிப், பாரமாம்பெரியோரொப்பு
ம் பான்மையாமேன்மைசார்ந்தார். ௬

பழுதிலாநந்திதேவர் பாவனைநோக்கினாலே
வழுதுணையிலிங்கமான வளந்தனைமகத்தோரோத்தத்
தொழுதவண்வசவதேவர் தொல்லையோர்செய்தலத்தின்
விழுமியசெய்திதன்னை விரித்துமுன்விளம்பாநிற்பாம்.

கள்ளர்க்கருளிய திருவிளையாடல்

முற்றிற்று.

---

ஆகதிருவிருத்தம் - ௩௬0.

உ
திருச்சிற்றம்பலம்.

## கள்ளர்க்கருளிய திருவிளையாடல்

வசனம்.

ஸ்ரீவசவேசரது திருமடத்தில் திருவமுதுசெய்யு மடியார்களோடு தாரணமில்லாத கள்ளர் சிலர் கந்திரிப்பிஞ்சைச் சிலையில்முடிந்து கழுத்திற்றரித்துப் புகுந்தனர். ஆராதனைககாலத்தி லவர்க்கவ் வாசாரந்தெரியாதமையா லிவரையறிந் தங்கிருந்தவடியார்கள் கோபங்கொண்டு தண்டிக்கப்புகவே வசவதேவ ரடியாரைமறுத்து அவர் கள்வரல்லர். அடியார்களேயென்று சொல்லிச் சாந்தப்படுத்திச் சிவபெருமானைதியானிக்க - கள்ளரெல்லாஞ் சிவஞானிகளானர். கழுத்துணங்காய்கள் சிவலிங்கங்களாயின.

கள்ளர்க்கருளிய திருவிளையாடல் வசனம்

முற்றிற்று.

உ
திருச்சிற்றம்பலம்.

## வணிகமல்லையர்புராணம்.

வசியரிற்றலைவரானோர் மல்லையனென்றோன்பர் *
சசிமுடியத்தனைச் சந்தியாதுணைவுகொள்ளா *
ருசிதவத்தகத்தின்மேலே யோரயற்பதியிற்சென்று *
நிசியுமாய்ப்பசியுமாகி நித்தாலயங்காணுமல். க

வருந்திடவுடனிருந்த மைத்துனரிவரருந்தா, தருந்த ஞமொணுதென் றெண்ணி யந்தவூரயலோர் தூற்றின், பெரும்படி யொன்றைவைத்து வாயில்போற் பிரித்துக் கட்டித், திரும்பிவந்திலிங்கங்கண்டேமவருதிொன்றவர்க்குச்செப்ப. ௨

வருதிொன்றுரைத்துநின்ற மைத்துனருடன்றுஞ்சென்றங், கருளுநேயதரராகி யவாவிளக்கேற்றிக்காட்டத், தெரியுமெய்ப் புளகமெய்தித் தெண்டனிட்டெழுந்து போற்றி, யிருமைசேரத்தன்கோயில் வலம்வந்துவிடைகொண்டேகி. ௩

கருத்தினன்னியமமுற்றுங் களிப்பினுணவருந்தித், திருத்தராயிருக்குங்காலை மைத்துனா சிரித்தெழுந்து, பருத்ததோர்செடியுள்வைத்தபடியினைப்பணிந்தாவந்தார், பெருத்ததம்பசிதணிந்தார் பெரியவாவணிகரொன்று. ௪

அளந்திடப்படியின்றேடியச்செடியூடிருக்கும் வளங்கொணுழியையெடுத்து வாருமினெனமல்லையர் கிளர்ந்தெழுகோபராகிக் கிரிமகளகணவரொன்று தெளிந்திலீர் தீயசொன்னீர்சிவாவெனச்செவிகண்மூடி

பண்டரேமிண்டரேயிப் படிபரியாசகந்தான், மண்டிநீருரைக்குமாறென் வாருமின்மதனகால, னண்டர்நாயக

லைக்காட்ட வென்றவாதமையழைத்துக், கொண்டுபோ
ய்க்குறித்துப்பார்க்கச்செடிபெருங்கோயிலாகி.        ௯

சிகரநற்கோபுரங்க டிருமதிலாகியுள்ளே
பகருமங்காழிதானே பரமன்மெய்யிலிங்கமாகி
நிகரிலாநந்திமுன்னே நிகழ்தரவொளியார்தீபம்
புகரிலாதொளிரக்கண்ட புவியுளோர்வணங்கிப்போற்ற.

மைத்துனாவைத்துவந்த வள்ளத்தின்பேரினாலே
நித்தர்வள்ளேசரொன்று நிகழ்த்துவர்மண்ணோரின்றும்
பத்தியேமுத்திமூலம் பகர்தரின்மற்றோரன்ப
ரித்தகைநெறியார்காட்டக்கோட்டையரொன்னும்பேரார்

வணிகமல்லையா புராணம

முற்றியது.

ஆக திருவிருத்தம - ௩௯அ.

---

உ

திருச்சிற்றம்பலம்.

---

வணிகமல்லையர்புராண

வசனம்.

மல்லையரென்பவர் வைசியகுலத்திற்பிறந்தவர், சிவபத்தியி ற்சிறந்தவர், சிவதரிசனத்துக்குத் தடைவருமாயின் உபவாசம் பண்ணும் விரதமுள்ளவர், வியாபாரத்தை முன்னிட்டு அயலூ ர்க்குச்செல்ல அவ்விடத்துச் சிவாலயமின்மையாலும் அர்த்த ராத்திரியானதாலும் வருந்திப் பசியினாலுந் துன்புற்றிருந்தனர்.

உடன்சென்ற விவர் மைத்துனவணிகர் தாமும்புசித்தற்கு விரோதமிருத்தலால் ஒருபுதரில் தாமளக்கும் வள்ளத்தைக்கவிழ்த்துச் சிவலிங்கம்போ லலங்கரித்துவைத்துத் திரும்பிவந்து நானோர் சிவலிங்கங்கண்டேன் நீர்தெரிசித் துணவுகொள்ளலாமென்றழைக்க, மல்லையரும் மைத்துனர் தீபமெடுத்துவரத் தாஞ்சென்று புளகாங்கராய்த் தெரிசித்துத் தெண்டனிட்டு வலம்வந்து மீண்டுந் தமதுநியமம் நிறைவேறினமையின் றடையின்றிப்புசித்து மனமகிழ்ந்திருந்தனர்.

அருகிருந்த மைத்துனர் நகைத்து உமக்கு நாமளக்கும் வள்ளமே சிவலிங்கமாய்த் தெரிசிக்க வீற்றிருந்தது அளத்தற்கு வேறுவள்ளமின்று விளாவிலோடி யவ்வள்ளத்தைக் கொண்டுவாருமென்று பரிஹாஸஞ்செய்யவே,

மல்லையர் மிகக்கோபித்து சிவபெருமானை வள்ளமென்று சொல்லவு மொருமூடத்வ மும்மிடத்திருந்ததன்றோவென் றவனை யழைத்துப்போய்க்காட்ட, முன்செடிகள் திருக்கோயிலாகவுந் திருமதிலாகவுங் கோபுரமாகவு முள்ளேநின்ற வள்ளமே சிவபெருமானாகவுந்தோன்றி நந்திதேவரு முன்னேதோன்றினர். தீபமும் அகண்டமாக ப்ரகாசித்தது, பூமியில் யாவருந் தெரிசித்தனர்.

வள்ளமே சிவலிங்கமான காரணத்தால் இவ்வுலகத்துள்ளோ ரின்றும் வள்ளேசரென்றுசொல்வர்.

வணிகமல்லையர் புராணவசனம்

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

# காட்டுக்கோட்டையாபுராணம்.

ஆட்டினோநலவெருவினை யழுகுளதேங்கிக்
காட்டினோபுடைவேதிகை செய்ததின்கண்ணே
வீட்டின்மேவுநம்பரனென விருப்பினையிருத்திக்
கூட்டியாவினைமங்கையாய்க் குடங்கரங்கொள்ளா. க

கறந்துபாலினைத்துய்ய நற்கடத்தினிற்றணிந்தே
சிறந்தபாலையனபா லரன்பாலுறசசோத்தி
யுறைந்தகாட்டினுண்மணங் தருமொள்ளியபூவாய்
நிறைந்தநேயராயப்பலா சிலைக்கல்லையினிறையா. உ

கொண்டுவந்தகமலரவம் மலரைமுன்கூட்டி
யெண்டுநம்பரற்கிருத்திய பின்புதாமிருந்து
மண்டுகாதலிற்சாதலைப் பிறததலைமறுப்பா
ரண்டநாயகர்சிரத்தி லப்பாலினையாட்டி. ௩

கண்ணிறைந்தநீர்கொண்டு வண்கண்ணிறைமலரைத்
தண்ணிறைந்தநீர்முடி மிசையழுகுறச்சாத்திப்
பண்ணிறைந்ததம்பல துளைக்குழலினையழகா
ருண்ணிறைந்தபேரன்பினு ளாகினின்றுருகி. ௪

பாடியாடிமுன்பணிந்தபின் வலமுறப்படர்ந்து
நாடிநின்றுளமுருகியே யருவிநீர்நயன
நீடிமெய்மயிர்சிலிர்த்தெழ நெடிதுயிர்த்தடியேன்
றேடரும்பொருளே யருளேயெனச்செப்பி. ரு

இந்தவாறுசில்பகலருச் சித்தபினிவர்தந்
தந்தைபால்சிறிதானவை தனைத்தெளிந்திடுவா
னந்தமாடுறைகாட்டினு ளயலொளித்திருந்தான்
முந்தவாவுடனன்பர்தம் பூசனைமுயல்வார். சு

வேறு.

இத்திறம்பாலெலா மிவன்கெடுப்பனென்
றொத்திவந்தரன்றனை யுதாசனித்தலும்
பத்திசெய்யன்பர்தம் பரசுபற்றினர்
செத்திடுகெனப்பிதாச் சிரத்தைவெட்டினார். எ

வெட்டினாற்றந்தைமண் வீழ்ந்திறந்தனன்
சட்டெனவானர்பூத் தாணிவீசினார்
மட்டறுதுந்துமி வானிலார்த்தன
சிட்டர்கடோத்திரஞ் செய்துவாழ்த்தினார். அ

வெண்ணிலாமுடியினார் விடையிற்றோன்றினார்
மண்ணில்வீழ்ந்திறந்தவன் மரிப்புநீக்கியே
யண்ணலர்காட்டக்கோட் டையனாவாவென
வொண்ணிறக்கயிலையி னுவந்துவைத்தனர். கூ

வேறு.

முக்கண்ணன்பரசோவேழமுகன்கரப்பரசுதானோ
மிக்கவண்பதங்கள்வீர மிகவருள்பரசுதானோ
செக்கரஞ்சடையார்வைகுந் திருக்கயிலாயவாயி
லக்கதவுறுந்தாணிக்கு மரியபொற்றிறவுகோலோ. ௰

பங்கராஞ்சிவத்துரோகர் படவுறும்பரசோதண்டி
வெங்கரப்பரசோகாலன் விடுங்கயிறறுக்கவல்லோர்
செங்கரப்பரசோசென்ம சேதனப்பரசுதானோ
கங்கரனன்பர்காட்டக் கோட்டையர்கைக்கோடாலி. ௰௧

எனச்சிவகணங்கள்போற்ற விழிந்தமேடத்தெருத்தான்
கனச்சிவலிங்கமாகக் காட்டக்கோட்டையர்செய்தி
மனச்சிவநெறியீதல்லான் மற்றும்பாலூரிற்பொம்மர்
முனைச்செயவாதிற்சோளமுத்திலிங்கமதாய்ச்சேர்ந்தார்.

ஆதலாலன்பர்மேன்மைக் களவில்லையடியனேனைப்
போதவோர்பொருளதாகப் புகழன்பினெனவணங்கி
நாதனார்பெருமைநாட்டு நாளிலிச்செயலைக்கேளாப்
போதவேவிச்சலேசன் புந்தியிற்பொருதானுகி. ௰௨

காட்டக்கோட்டையர் புராணம்

முற்றிற்று.

---

ஆகதிருவிருத்தம் - ௱௮௧.

திருச்சிற்றம்பலம்.

## காட்டக்கோட்டையர் புராண வசனம்.

காட்டக்கோட்டையரென்பவர் - ஆயர்குலத்திற் செனித்தவர், சிவநேயத்திற் சிறந்தவர், ஆட்டின்சாணங்களைக் குவித்து வேதிகையாக்கி யதிற் சிவலிங்கத் திருவுருவத்தைத் தாபித்துப் பசுவினங்களை மந்தையாகமடக்கி யவற்றின் பால்களையெல்லாங் குடங்களிற்சேர்த்து அக்காட்டகத்துள்ள மலர்களையெல்லாங் கொய்து பலாசிலைக்கல்லைகளி னிறைத்துவைத்துத் தமது சித்தியக்கடனையும் முடித்துக்கொண்டு பின்னர் சிவபெருமானுக்கு இக்குடப்பால்களையு மபிஷேகஞ்செய்து மலர்களையுஞ்சாத்தி மகிழ்ந்து தமது புள்ளாங்குழலைக் கையிலெடுத்துப் பேரன்போடு பலகா லூதித் துதித்துச் சிவானந்தமேலீட்டாற் கூத்தாடி மனமுருகிக் கண்களில் நீர்பெருக மெய்ம்மயிர்சிலிர்த்து எனதருமைப் பெரும்பொருளேயென்று இவ்வாறு பலநாளருச்சிக்கவே,

இவர் தந்தையார் பசுவின்பால்க ளளவிற்குறைந்ததுகண்டு ஒருதினம் மறைவிலிருந்து இச்செய்கையையுங்கண்டு எதிரில் வந்து கோபங்கொண்டு சிவலிங்கத்தை யிடறினர். இதுகண்ட அன்பர் மனம்பொறுதவராய்த் தமதுகையிலிருந்த கோடரியை விரைவினெடுத்துத் தந்தையின்சிரத்தைக் கொய்துவீழ்த்தினர்.

உடனே சிவபெருமான் இவரது பத்திமேலீட்டைக்கண்டு இறந்துவீழ்ந்த பிதாவின் மரணத்தைநீக்கிப் புத்திரனாகிய காட்டக்கோட்டையரை வாவென்றழைத்துத் தம்முடன் கைலையிற் சேர்த்தனர்.

காட்டக்கோட்டையர் புராணவசன முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

—*—

## வஞ்சனைவடிவமாதவர் புராணம்.

பெருத்தவிச்செயலைநன்றாய்ப்பேதித்தின்றறிவோமெ
ன்றே, மாத்திரனைமண்ணனெண்ணின் மாதவர்வடிவ
மாகத், திருத்தமாய்ச்செய்வித்தஞ்சச் செறியிருள்சேர்
த்திருத்தி, யருட்செறிவசவதேவர்க் கறிவித்தானறிவில்
வேந்தன். க

அவ்வுரைகேட்டவாறே யறநெறித்தண்டநாதர்
செவ்வியமனத்தாற்சென்று சிவதவரிவரொன்றெண்ணி
யெவ்வமிலன்பினாலே சரணார்த்தியெனவிறைஞ்சித்
தெய்விகப்பெரியீர்சென்மின் றிருவமுதருந்தவென்றார்.

செடவடிவானதெல்லாஞ் செறிந்துயிரறிந்துநோக்கி
யடல்பெறுந்தவத்தோராகி யரகராவெனவெழுந்து
திடமிகுந்தண்டநாதர் பின்செலமுன்னேசெல்ல
மடமைசேர்விச்சலேசன் மதிமிகமருண்டருந்தான். ௩

அரமனைபுகுந்திருந்தா னப்பதியுள்ளோரெல்லாம், பா
வினனந்தியாரைப் பன்முறைபணிந்துநின்றே, புரியுமி
ச்செயலைச்செய்வாராரொனப்புகழ்ந்தார்விண்ணோர், மரு
மலர்பொழிந்தாரார்த்தார் மற்றைநாள்வசவதேவர். ௪

உ

திருச்சிற்றம்பலம்.

## வஞ்சனைவடிவமாதவர் புராண வசனம்.

விச்சலராஜன் தனதுமந்திரியாராகிய வசவதேவரது மகிமைகளைக்கண்டு மனம்பொருதவனாய் மரங்களினாலும் மண்ணினாலும் சிவனடியாரது திருவுருவம்போ லலங்கரித்துவைத்து ஒருநாளிரவில் வசவதேவர்க்கறிவித்தனன். அவரும் மெய்யாகவேநினைத்து அரன்மனையுட்சென்று அவன் செய்வித்தவுருவத்தைச் சரணார்த்தியென்று சொல்லி வணங்கி யன்பினாலே திருவமுதுசெய்தற் கெழுந்தருளுவீரென்னவே.

மரத்தால் மண்ணாற்செய்த வவ்வுருவங்களெல்லாம் உயிர்பெற்றுத் தவவுருவடைந்து ஹரஹரவென்னுஞ் சத்தத்துடனே முன்னேசெல்ல வசவதேவரும் பின்னேசென்றார். இது கண்டரசன் பயந் துணவுமருந்தா துள்ளேசென்றனன்-யாவரு நந்திதேவனைப்புகழ்ந்து போற்றினார்கள். தேவர்களும் மலர் மாரிபொழிந்தார்கள்.

வஞ்சனைவடிவமாதவர் புராணவசனம்

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## வங்கையர்புராணம்.

எண்ணெய்கண்ணுதற்குச்சாத்தி யினிதுபின்றமது
சென்னி, தண்ணெனவார்க்குங்காலைச் சங்கமரொருவர்
வந்தே, திண்ணியவருச்சனைக்குத் தினந்தொறுங் குறு
ணிமுத்தத், தொண்ணிறப் பொடியாற்கோல முவந்து
யாம்வரைந்துகொள்வோம். க

வருடமொன்றதற்களிப்பாய்வசவவென்றுரைத்தவாறே
பெருநெறிநந்திகேசர் பிரியத்தாற்றொழுதுபோற்றி
யருகுறுஞ்சோளக்குப்பையவ்வயினையருளாற்பார்க்கத்
திருமலிதரளராசித் திரளதாய்த்திகழ்ந்துதோன்ற. ௨

நினைத்தலக்கங்கள்வேண்டா நித்திலக்குவைகளாகு
மனைத்தையுந்தேவரீர்கொண் டருளுமென்றன்பினாலே
வினைத்திறமில்லாரான நந்திகள்விளம்பிமுத்தந்
தனைப்பலவெருதியானை யொட்டகந்தன்னிலேற்றே. ௩

கொடுத்திறைஞ்சினர்மகேசர் கொண்டுசென்றன ரிருந்
தோ, ரடுத்தநேயத்தாற்சொல்வா ரன்றுவங்கையனென்
பார், மடத்திலோர்சங்கமேசர் வந்துநள்ளிருளார்காலை,
பிடித்தநன்னியமமன்பர் பேசக்கேள் பிறரைக்கேளேம்.

புதியநற்கோவின்பாலும் புனிதநம்முன் பறித்த
வதிககூவிளமுநம்மை யாண்டருளமலர்க்காட்டி
மதியினற்சாத்தியல்லான் மகிழ்ந்தமுதருந்தோமென்னக்,
கதிபெறற்குரியரான வங்கையர்கசிந்திறைஞ்சி. ௫

மடந்தனிற்கட்டிநின்ற மலட்டினைக்கறக்கத்துய்ய, குட
ந்தணிபாலதாயக் கோவினைப்பிணித்துநின்ற, நெடுந்த
றிவில்வபத்திர நிறையவேதளிர்க்கக்கொய்து, விடஞ்
செறிகண்டனன்பர் விரும்பமுன்கொடுத்தானென்பர். ௬

இன்றுநந்தண்டநாதனிணைவிழிக்கருணைநோக்காற்
றுன்றுசோளக்குவாலைத் தூயநித்திலங்களாக்கிச்
சென்றசங்கமாக்களித்த தெய்வீகம்பாரீரென்று
நின்றநற்பெரியோரோதநந்திகணிகழுபாவில். ௭

வங்கையர் புராணம்
முற்றிற்று.
ஆக திருவிருத்தம் - ௩௬௨.

---

உ
திருச்சிற்றம்பலம்.

வங்கையர் புராண வசனம்.

வசவதேவர் சிவபெருமானுக்கு எண்ணெய்க்காப்பு நிவேதித்துப் பின் றாமெண்ணெய்க்காப்பிட்டுக்கொள்ளுஞ் சமயத்தில் ஒருஜங்கமர்வந்து எமது சிவார்ச்சனைத்தலத்தில் ப்ரதிதினங் குறுணிமுத்துகளாற் கோலமிட்டுப் பின் சிவார்ச்சனைசெய்வது நியமம், ஆதலாலொருவருஷத்துக்குப் போதுமான முத்தங்க

ளைத் தம்மிடத்துப் பெறவந்தேனென்னவே, வசவதேவர் அவ ரைவணங்கி யிருக்கச்செய்து அவ்விடத்தருகிற் குவித்துகிடந்த சோளகுவியலைத் தமது திருவருளால் நோக்கவே யச்சோளங்கள்முழுதும் முத்துகளாகப் பிரகாசித்தன.

ஐயா கணக்கிடவேண்டாம இம்முத்தங்கள்முழுதுந் தமது சிவபூஜாத்தமாகவே யுண்டானதாதலா லங்கீகாரஞ்செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து யானை யொட்டகம் மாடுகளிலேற்றிக்கொடுத்து வணங்கினர். அந்த வீரமாஹேசரு மது கொண்டு மகிழ்ந்துசென்றனர்.

உடனிருந் திவ்வதிசயத்தைக்கண்ட பெரியோர்சொல்வதாவது, அக்காலத்து அடியார்களிற்சிறந்த வங்கையரது திருமடததில் பத்தியிற்சிறந்த ஒருஜங்கமர் பாதிராத்திரியில்வந்து ஐயா பசுவின்பாலும வில்வபததிரமுமில்லாம லிதுகாறுஞ் சிவார்ச்சனைசெய்தறியேன்இன்றையதின மஃதிரண்டுமில்லாதகுறையாற் சிவார்ச்சனை நடுராத்திரியாயுந் தடையுற்றிருக்கின்றது, உம்மையன்றிப பிறரையுங்கேளேம் என்றுசொல்லி வருந்திநிற்கவே, அ காலத்தில் வந்தமையால் வஙகையா தாமு மிருமடங்காகவ நந்திமடத்திற்கட்டியிருந்த மலட்டுப்பசுவை யருளால்நோககிக் கறக்கச்சொல்லவே யதுவும பாலைப்பொழிந்தது. அப்பசுவைக்கட்டியிருந்த கட்டுத்தறியை யருளாற்பார்க்கவே அந்தவில்வக்கட்டுத்தறியுந் தளிர்த்துநின்றது. அநத வில்வப்பததிரத்தையு மெடுத்துப் பாலுடன்கொடுத்தனர் என்று சொல்வர்கள்.

இன்று நம்போல்வாரெல்லாங் காணும்வண்ணஞ் சோளக்குமபலை முத்துக்கும்பலாக்கி வந்தவொரு ஜங்கமருக்களித்த தெய்வத்தன்மையைப் பாருங்களென்று புகழ்ந்தனர்.

வங்கையர் புராணவசன முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## சித்தராமையர்புராணம்.

---*---

தண்டநாயகமணியனார்சசி தங்குவேணிதருக்கினார்
மிண்டுறும்பரவாதகாலர் விகாரநெஞ்சரைமேவலார்
மண்டலாதிபனைவிச்சல மன்னனீள்சபைமன்னியே
கொண்டபூமிபுரக்குநீதி குலாவியாய்வுறுகாலையின். க

சென்னிமீதொரு செங்கைகொண்டு திடத்தமர்த்
யோரசெங்கையா, னன்னிலத்தினுமருளலென்றுநவின்
றெடுத்துவிறீஇயலு, மன்னசெய்தியமைச்சர்கண்டிதெ
னற்புதமெனவிச்சல, னன்னியாயம தென்னதானுனை
நந்தியென்னவிசைத்தலும். உ

ஓதினாலி துயர்ச்சியாமென வுரைசெயாமலுணர்ந்துபி
னீதிதென்னவிசைத்திடாவிடி லிந்தமன்னனிணங்குறு
னுதலாவிதுசொல்லுவாமென வரசன்முன்னுறவறைகு
வார், நீதியாலுயாசொன்னலாபுரநித்தனார்கபிலேசனார்

நடஞ்செய்வானையோர் நல்லதாபதர் நண்புடன்பதி
னையிரங், குடங்கள்பான்மிகவேகொணர்ந்து குலாவியா
[illegible]டதுரொலா, மடைந்துவீதிகள்சேறதாயின வத்தெ

ருக்களிலாயமா, மடந்தைகாடகனின்றுமோர்கொடுவந்
துமாறியவேலையின். ௪

வழுவுசேறுவழுக்கிவீழ்பவள் வசவனேயெனும்வச
னநாம், விழுமிதாகவறிந்துமண்ணவள்வீழ்தராமலெடு
த்தனன், கழுமுசெய்தியிதென்றலும்புலி காவலன்கன
புதுமையென், றெழுகிரேவலைக்கொணர்ந்திடு மென்
னநின்றவரோடினார். ௫

அன்றுசொன்னலவப்புரத்தி லணைந்தவட்டரவங்கை
யி, னென்றுசேறுடன்மோர்சுமந்துகொ டுலவுமானன
விழியுடன், றுன்றுகொங்கையணின்றுவிச்சலன் வின
வவுள்ளதுசொல்லவே, நன்றுநங்கிகண்மேன்மைநீமுன
நாடலென்னெனநவிலுவாள். ௬

சொன்னலாபுரமென்னுநற்பதி தூயநன்கதியெய்து
வான், மன்னநீடுபெரும்பருப்பத மல்லிகார்ச்சுனவள்ள
ல்போ, லுன்னருஞ்சிவலிங்கமங்க ணுவப்பினோடுபதி
ட்டியா, மின்னுவானணிகோயில்கண்டு மிகுத்தபூசை
யமைத்தரோ. ௭

மற்றுமெண்பதினாயிரஞ்சிவ மந்திரங்கள்வகுத்துமு
ன், சொற்றநஞ்சிவனார்தமக்குயர் சித்தராமையர்தாவி
ழா, வுற்றநண்பினடத்துகின்றமை யுலகுளோர்களறிந்

துபோ, மற்றைநாளெமதூருளோரொடும் யானுமன்பி
ன்மகிழ்ந்துபோய். அ

செய்யவப்பதி யுட்புகுந்து சிவாலயத்திடை சேரலு,
மையர்மெய்த்தவர் சித்தராமைய ரம்பகஞ்செறி பால
ராய், மெய்யினீழலு மின்றியேபத மேதினிக்கணுறும
லத், துய்யர்நிற்பது கண்டுமாதவர் தொழுதுமுன்ன ரி
றைஞ்சியே. ௯

இத்தயபரர்சித்தராமைய ரீசனூர்கயிலாயமே
நித்தமேகுவர்மீள்வர்நந்திகணெறிவிஞவுதுமென்னவே
யத்தபோதனர்சொல்லுவார்வச வேசரம்புவியன்பிறு
லொத்துமாகயிலாயமீதினு முறுவரொன்பர்களுத்தமர்.

போகபூமிபொருந்திமற்றுயர் புனிதனூர்கயிலாயமேன்
மாகராலுமணிந்திடற்கரி தென்னநூல்கள்வகுக்குமா
ஞகபூடணர்வெள்ளிவெற்பரு ணந்திகேசரிருந்தநீ
ராகமாதிகரேயெமக்கிதை யருளுமென்றபினத்தவர்.௰௧

இன்றுசென்றினிதெம்பிரானை யிறைஞ்சிநாளையிறந்
கிவந், தொன்றுநந்திகள்செய்திதன்னையுணர்த்துவாமெ
னவோதியே, கன்றுகண்டர்கணத்தகோயிலகன்றுமாத
வர்கைதொழா, நின்றுகாணவியோமமேறி நிலாவவோ
டிமறைந்தரோ. ௰௨

அந்தநாளிறவத்தர்சன்னிதி யகங்கீணந்ததி காலையே, வந்துமாதவனொதிாசெறிந்து வணங்கிநின்று வழுத்தலு ஞ், சிந்தையன்பொடுசித்தராமைய தேவாதாமுனைசெ ய்குவ, ரெந்தையங்கயி லாயனென்ன விராவில்யானினி தெய்தியே. ௰௩

இனிதுடன்பதிணெண்கணத்தரு மிறைவனென்றுவ ணங்கவாழ, புனிதனன்றிருமுன்புகுந்து பணிந்துநின் றுடல்புளகமாய்க், கனியுமென்மனநினைவறிந் துயிராளி யாகியகாவலன், முனிவவெண்ணியதேதுசொல்லென முன்னிறைஞ்சியெழுந்தியான். ௰௪

அண்ணலேயென தாவியேயடி யாரபெருந்திரு வாம ரா, மண்ணின்மாதவாவாழ்வதாகிய வசவராசையாவந் துநின், கண்ணிருப்பனெனத்தபோதனாகட்டுனைப்பாக ளுண்மையோ, தெண்ணிலாமுடி யாயெனக்கிது திரு வுளஞ்செய்தியென்றலும். ௰௫

அத்தனென்முகமன்பிஞடிய துள்ளதெங்கணுமாகியும் பத்தர்சங்கமர்சங்கமேவிய பாரிடந்தொறுமாகியு மொத்தநங்கணநாயகாக்கதி கத்தனுகியுமுள்ளவன் மெய்த்தவென்னிதயத்துநாடொறுமேவுவனவனுவிநாம

ஐயநீதெளிகாணிதோவெனு மத்தன்மெய்யொளியத னுளே, செய்யசோதியதாகியேயொருசெங்கரதநிலிங

சமுக், கதுப்பமாதவர் தம்மையோர்க்கை தொழுந்திறத்த
ருமாகியே, பொய்யகன்ற நாதிதேவர் பொருந்தல்க
ண்டுபணிந்தனன். ௰௭

கண்டவாசவ னாதிதேவர் கணேசர் மாதவர் நதியர்,
தொண்டர் நதிநதேவி ளம்மை யுவந்துகை தொழுதுந
கியே, பண்டர் கோ யாபதிமுல வசந்தலாதிகரதி
யர், மண்டுகோபிழுளககன்றிந மெய்கொலென்னவெ
ழுந்திறை. ௰௮

அரியாநக யமலைபிறளியு ளிலையுநந்திகளெமவினை
புரிபசயகியருகி நந்தவ குளபகிழந்தெதிராடியே
புரிதருமபல புநபு நன்றுமளபுளிதனன்பொடுபுகலுவா
ணிருவ நந்தவமுறுசிலாத னிடத்தினன்றருணந்தியாய.

மேவிநின்றுயர்வடிவமும்வசவேசனென்றெருநமேனியா
யாவிசங்கமமாகியண்ணரி லமாந்ததுநமதுருவமுஞ்
சீவனுமலதில்லைகாணல சித்தராமதெளிந்தியோ
யாவருந்தொழுநாரிவ[illegible]மிரண்டிலையென்றனன் ௨௰

முத்திநாயகமாகுநாமுயா முத்திமூலமதாகுமா, பத்தி
நாயகநந்தியெம்மன பான்மையன்பரிபூரண, ஞைத்தமு
வுலகத்தருன்னலுனாநதல்செய்தலுணர்ந்துதன், சித்தி
நாமமுனாநதபோதுயர்தெருவினைறுனாசெய்தனன்

என்றுதேசிக சித்தராம ரிசைத்தவெல்லையி லேயவ, ணென்றுமாதவா வசவதேவரை யுன்னியொண்டுதிசெ ய்தபி, னன்றுநந்திகள் செய்திதன்னை யறிந்தனனெனை வங்கவ, ணின்றுசொல்லினள் விச்சலன்னிது நிச்சயம் மெனநம்பியே. ௨௨

அற்புதம்பெரி தூற்றிருந்தன னவ்வமைச்சரு மஞ்சி ஞர், நற்பொருளமோடாடைமன்னவ னல்கலுங்கொடு காடகன், சற்பகங்கணனண்பாநந்திகள் சன்னிதிக்கணி றைஞ்சியே, வெற்பெனுங்குயை தங்கள்சாதியர் வீதியி ன்பொடுமேவினுள். ௨௩

தூரவேவசவேசவென்றவர் துயரமுள்ளவை தூளதா ய்த், தூரவோடலினந்தியாமிகு தூரதிட்டிகள்காணலு ங், தூரசொல்லுமை துணிதலும்வெகு தூரசிந்தனைசொ ல்லலுந், தூரமன்றுயர் தண்டநாயகா பெருமையாவர் துதிப்பவர். ௨௪

சித்தராமையர் புராணம்

முற்றிற்று.

---

ஆகதிருவிருத்தம் - சகசு.

உ

திருச்சிற்றம்பலம்.



# சித்தராமையர் புராண

## வசனம்.

ஸ்ரீசிவதேவர் ஒருதினம் தமது நித்தியகாமங்களையெல்லாம் முடித்துக்கொண்டு விச்சலராஜன் சபையிற்சென்று தமக்குரிய மந்திரித்தொழிலை நடத்திக்கொண்டிருக்கும்போது,

ஒருகையைத் தலைமேற்றூக்கி மற்றொருகையாற் கீழ்வீழ்ந்தவளை யெடுப்பதுபோலவெடுத்து அஞ்சாதேயென்றுசொல்லி நிறுத்துதலும் இதைக்கண்ட மந்திரிகள் ஆச்சரியமடைந்தனர். அரசனும் இஃது யாதுகாரணமென்றுகேட்க இதனைச் சொல்லலாகாதென்று சிறிதுநாழிகை மௌனமாயிருந்து அரசன் கேட்டமையாற் சொல்லவேண்டுவதென்றே துணிந்து சொல்வதாயினார்.

கேளுமரசனே, சொன்னலாபுரமென்னுந் திருஸ்தலத்தில் ஈடேசரிடத்தன்புள்ளாரொருஜங்கமர் பதினாயிரங்குடம் பசுவின்பால் சேகரித்து அபிஷேகஞ்செய்வித்தனர். அவ்வபிஷேகத்துப் பால்முதலியனவெல்லாம் பரந்து அவ்வூரொங்கும் பெருவெள்ளமாய்ச் சேர்ந்தன, அவ்வீதிவழி லாயர்குலத்துச் சிறுமியொருத்தி மோர்விலைகூறிவந்தவள் வழுக்கிவீழ்ந்தனள். அவள் வீழும்போது மற்றவரைநினையாது சிவதேவரோயென்று வருந்தினமையால் யாமிவ்வாறு தாங்கிநிறுத்தினமென்ன, அரசனும் மிது மிகப்புதுமையாயிருக்கின்றதென்று சொன்னலாபுரத்தவளிவ்வாறிருப்பது மெய்யானால் அழைத்துவாருங்களென் றுஞ்ஞை

யிட, அருகிருந்த கிங்கரர் ஸ்வாமியே யக்கிரமத்துவர வெருநர் மோ
ர்க்கூவிடையுடனே கைகால்களெல்லாஞ் சோர்ந்து வருந்துகின்றனள்.
விச்சலராஜனு மிங்குநடந்தவண்ணங் கேட்க வவரு மவ்வாறு
சொல்ல, வசவேசரது மகத்துவத்தைக் கண்ட தெப்படியென்
று மீட்டு மரசனவரைக்கேழ்க்க.

அரசனே, மல்லிகார்ச்சுனலிங்கம்போல சொன்னலாபுரத்
திற் பிரதிஷ்டைபண்ணி மற்று மெண்பத்துநாயிரஞ் சிவஸ்தலங்
கள்கட்டுவித்துச் சிவலிங்கப்ரதிஷ்டைபண்ணித் திருவிழாவை
யுஞ்செய்விக்கின்றார் சித்தராமதேவரென்று கேழ்வியுற் றுலகத்
தார்செல்ல வப்போது எம்முனிவருடன் யாமுஞ்சென்று சிவா
லயத்திற் றரிசித்துநிற்கும் சமயத்தில், சிலமுனிவர் சித்தராம
தேவர் நெற்றிக்கண்ணுடையராய்க் கால்கள் பூமியிற்றோயாது
நிற்கு மகிமையைக்கண் டதிசயித்துப் பணிந்து இவர் ப்ரதிதி
னங் கைலைக்குச்சென்று தெரிசித்துவருகின்றமையால் அங்குதே
வரது மார்க்கங்களையெல்லாங்கேட் டறிவோமென்று நினைத்து
ச்சொல்லுவார். ஸ்வாமி சித்தராமதேவரே, நந்திதேவர் பூமியி
லுங் கைலையிலு மிரண்டிடத்து மொத்துப் பிரகாசிக்கின்றாரெ
ன்று பெரியர்சிலர் மொழிகின்றார். அவ்வாறிருக்குமியல்பை யெ
மக்கெடுத்துரைக்க வேண்டுமென்னச் சித்தராமதேவரும் யாமி
ன்றைக்குச்சென்று தெரிசிக்கும்போது நீவிர்சொன்னவை நிசமு
மதுகண்டு நாளையுங்கட்குச் சொல்வமென்று அவருமப்பார்த்து
நிற்க, ஆகாயமார்க்கமாகச்சென்று மறைந்து கைலையிற்சென்று
தெரிசித்து மறுதினங்காலையில் அம்முனிவரைப்பார்த்துச் சொ
ல்வார். கேளும் முனிவரே, நேற்றையதினம் கைலையிற் றிரு
வோலக்கத்துத் தெரிசித்து நீவிர்மொழிந்த சங்கைகளையும் நினை
த்துநிற்க, சிவபெருமா னனது கருத்தறிந்து முனிவனே புனை

துகோட்பாட்டை யுணாப்பாயென்றுசொல்ல, நந்திகளது சரித்திரங்களைச் சவிஸ்தாரமாகச் சொல்லினேன், தமது திவ்யதிருமேனியிற் சாயுச்சியமாயிருக்கும் நந்திகளது திருமேனியை ஒருகையி லிலிங்கமும் ஒருகை யடியணைத்தொழுவதாகவுஞ் சிவகிருபையாற் கண்டுதொழுதேன்.

அப்போது சிவபெருமான் சிலாதரிஷியினிடத்து முன்னமவதரித்த விநந்தியின்மேனியும் இப்போது வசவதேவனுசவித்த மேனியும் எமக்குச் சரீரமுமுயிருமாகுஞ் சித்சராமனே யென்றருள்செய்தனர். என்று சித்திராமர்சொல்ல அம்முனிவ ரெல்லாங்கேட்டு மகிழ்ந்து வணங்கினர். யாதவு மவ்விடத்திருந்தரிச்சுதமென் றவ்வாய்ச்சியுகல, விச்சலராஜனு மிதுநிச்சயமென்றறிந்து ஆச்சரியமடைந்திருந்தனன். மற்றையமந்திரிகளுமச்சமடைந்திருந்தனர். அவ்வாய்ச்சியு மரசனிடத்துச் சமமானம்பெற்றுத் தனதிடஞ்சேர்ந்தனள்.

சித்திராமையர் புராணவசனம்
முற்றிற்று.

---

௨

திருச்சிற்றம்பலம்.

—*—

## சாளிகைப்பெட்டியமைப்பித்த திருவிளையாடல்.

——*◯*——

இன்னவற்புதநாளிலே விச்சலனென்பான்
கொன்னவனந்தனபண்டக்கெலாஞ் சீவிதங்கொடுப்பான்
மன்னுசீர்வசவேசர் கைமாதனமளித்தா
னன்னமீனிநியனமச்சரோ டுடனச்செலுமளவில். ௧

உற்றுமற்றொருகுமார சங்கமர்தூர்த்தவுருவாய்க்
கொற்றமாதனையணைத்தையுங் கொடுமகனென்றூர்
சற்றுமவ்வயிற்றூழ்த்திடா தவர்கையிற்றந்தே
முற்றுமன்பினால்வணங்கின ரமைசசர்கண் முனிந்து. உ

வந்துவிச்சலன்முன்னுற வணங்கினாமனைநீ
தந்தவப்பொருளனைத்தையுந் தண்டநாயகன்றான்
சுந்தரத்தமொரூர்த்த சங்கமன்கையிற்கொடுத்தா
னிந்தமந்திரியா லுனக்காவதென்னென்றூர். ௩

கோவெருஞ்சுடன்விச்சல மன்னவன்கொதியா
யாவரிப்படிசெய்பவர் கணாயெனவெதிராய்
மாவரந்தராந்தண்டனா யழைக்கவந்திருந்து
காவலாவெனையழையென்ற கருமமேதென்றூர். ௪

விச்சலன்வசவேசுரர் முகமிகநோக்கிக்
கைச்சவெஞ்சொலாங் கடுமொழிகூறிநீ நனக
மசசமின்றியேயளித்தனை யாசர்தம்பொருளை
யிச்சகத்திலாரமைசசாகள் கொடுத்தனரொன்று. ௫

தேடிவைத்தநின்னிதியெனை நம்பொருட்டிரளை
யோடிவந்தெனக்களியென்ற வொருவிடன்கையி
லூடமின்றியேகொடுத்தனை நம்மையார்தண்டித்
தாடவல்லவரொன்றுநீ யுன்னினதுணாந்தேம். ௬

நம்பினோர்தனந்தன்னையுரசித்திடநினைப்பார்
வம்பரல்லதுநல்லவா மதிக்கிலார்மனத்தா
லெம்பெருந்திருத்தாங்கியே யெமக்கினம்பொருளை
யம்பொருந்திடவளாக்கிலா தழித்தனையந்தோ. ௭

உன்றன்மந்திரித்தனநமக் கமையுநீபுரித்தா
மொன்றுநம்பிக்கையென்பது போதுமெம்முடைமை
யின்றிவண்டருவாய் கண்டியாமுனமென்று
நன்றுநன்றுனைநம்பின நலமெனநவின்றான். ௮

வேறு.

அரசனொந்துரைத்தகாலை யருள்வசவேசர்சொல்வார்
பரசிவபத்தியென்னும் பதுமநன்னிதியுஞ்சங்கும்
சுரபியுங்கற்பதாருச் சோலையுஞ்சொன்னவெற்பும்
பெரிதுளோர்பரதனத்திற் பிரியத்தராகார்மன்னா. ௯

பங்கயமுரலும்வண்டு மத்தம்பூப்பரிந்துதேடா
திங்களின்கிரணமுண்ணுஞ்சகோரமின்கதிர்தேடாதால்
வெங்கயமறிசல்பன்றி மூலையினைவிரும்பித்தீண்டாச்
சங்கரனன்பர்மன்னா பரதனஞ்சற்றுநற்றார். ௰

பாற்கடலன்னமுப்பின் பானியமருந்தார்தேமாஞ்
சீர்க்கனியிருக்கவெட்டிக் கனியினைத்தேடாக்கிள்ளை
மூக்கமாசியம்புல்லை மோகித்துத்தின்றதென்று
மாற்கரியோன்றனன்பர் பரதனமருவார்மன்னா. ௰௧

வேறு.

தெண்கடல்வற்றினுந் சேடன்சாயினு
மண்கடிதலையினும் வடவையாறினு
மொண்குலகிரிநெரிந் துகினு மன்னிய
வொண்கனகங்கொளா ரீசனன்பினோர். ௰௨

சுடர்வடிவாயினோர் சுடடையிச்சியா
ரிடைவிடாஞானர்சிற் றின்பமிர்சியார்
திடமுறெண்சித்திதான் சித்தியாந்தவ
ருடையநல்லன்பினோ னுன்பொருட் கொளேன். ௰௩

விடுவிடிவ்வையமுன் மிக்கபொன்கொளே
னுடையவர்பொருளையென் னுடை யாக்கினன்
கடுகுமின்னிதியமாக் காணிருன்றினும்
படவராப்பணியினன் பத்தனெலேன். ௰௪

பெட்டியிற்சேர்த்தநின் பிணையற்சாளிகை
யொட்டியமுத்திரை யுள்ளவாறுநீ
திட்டமிட்டறியெனச் செப்பப்பேழையைக்
கட்டுடன்முன்னுறக் கண்டுமன்னவன். ௰௫

திறந்தரும்பெட்டியைத் திட்டமிட்டலு
நிறைந்தமுன்முத்திரை நீங்கலின்றியே
யுறைந்ததுகண்டிறை யுவந்துநந்தியார்
சிறந்தநற்பெருமையைச் செப்பியேத்தினன். ௰௬

வானவாமலாமழை வழங்கிவாழத்திரு
ஞானசீலவசவ ராசையாவேந்தன்மு
னூனமில்வாதவூ ரொண்டவாசகரா
ருனரிபரியெனத்தருதல்செப்பியே. ௰௭

ஆதலாலரனருட் கவாவிலென்றனா
மாதலாமன்னவ ரவசவதேவனாப்
போதவேமகிழ்ந்துநீ புனிதனென்றுமண்
ணோதுமாறுனல னுண்மையென்றனரே. ௰௮

கட்டுறுபூட்டினிப்பவர் கரங்களைப்போலவே
கடாந்தருமணியவரி தூசகல்கியே
சடகமெனநதிமேற டப்புனர்த்தபே
ரடக்கபிறவினை யரிவர்செல்லென. ௰௯

மன்னவனுலாத்தனை செவதேவர்தா
மன்னவிசாலமகிழ்ந் தனுப்பத்தமமனை
பன்னகவணியனைப் பரவியேகினா
ரன்னரிநரினதிமேய சரிக்குநாளரே. ௨௰

சாளிகைப்பெட்டியழைப்பித்த திருவிளையாடல்

முற்றிற்று.

---

ஆகத் திருவிருத்தம் - ௪௬௯.

திருச்சிற்றம்பலம்.

## சாளிகைப்பெட்டியழைப்பித்த திருவிளையாடல்

### வ ச ன ம்.

இப்படிப்பட்ட வற்புதங்கள் நடக்குநாளில், விச்சலராஜன் தனது சைனியங்களுக்குச் சம்பளங்கொடுக்கும்படி வசவதே வரிடத்தில் அநேகதிரவியங்களைப் பெட்டியிலிட்டுத் தந்தனன். அதைப் பெற்றுக்கொண்டு போகுந்தருணத்தில் தூர்த்தவடிவ முள்ள வொருஜங்கமர் குறுக்கிட்டு நீர்கொண்டுபோ மித் தன முழுதும் எமக்களிக்கவென்று கேழ்க்கவே, வசவதேவருமஞ்சா மலத்தனமுழுது மவர்க்குத்தந்து வணங்கினர்.

உடனிருந்த மற்றையவமைச்சர்கள் கோபக்குறிப்பினரா யரசனிடத்துப்போய் மஹாராஜனே, வசவதேவரிடத்துக்கொ டுத்த திரவியங்களையெல்லாம் நடுவழியில்வந்து யாசித்த ஒருவி டஜங்கமர்க்குத் தந்துவிட்டனரென்று வந்துசொல்லினர்.

அதைக்கேட்ட வவ்வரசன் மிகக்கோபமுடையனாய்த் தண் டாதனையழைப்பித்துப் பல கடுமொழிகளைச்சொல்லி யும்மைப் போல இவ்வாறு செய்வாருண்டோ, இதுவனையி லும்மை நம்பி யிருந்த வெனக்கு நல்லபயனளித்தீர். உமது மந்திரித்தன மிது வனையிற்போதும், எமதுபொருளைமாத்திரம் உத்தரவாதம்பண் ணுமென்று சொல்லினன்.

இவ்வாறு கோபித்துரைக்க, வசவதேவரும் சிவபத்தியென் னுஞ் செல்வமுள்ளோர் அநித்தியமாகிய விச்செல்வத்தை விரு ம்புவரோ, உமக்குண்டான வையத்தையொழித்துவிடும், நான்

வசனம்.

கொடுத்தபொரு ளச் சங்கமர்க்கே சொந்தமானதன்றி யுமது பொருளன்று. உமதுபொருளிற் சிறிதுங் குறைவின்றி முத்திரையுடனேயிருக்கும்படி சாளிகைப்பெட்டியை யொப்புக்கொள்ளுமென்றுசொல்ல, அவ்வாறே அரசனுமொப்பநோக்கிப் பிழையொன்றுங்காணுமையால் வசவதேவரிடத்து மிகமகிழ்ந்து நீர் மானுடனல்லன் றேவனேயாகும். என்று பலவாறுபுகழ்ந்து அநேக வஸ்திராபரணபூர்வமான மரியாதைகளையுஞ் செய்தனுப்பினன். வசவதேவரும் பன்னகாபரணனுகிய சிவபெருமானைத்துதித்துத் தம்மகத்திற்சென்றிருந்தனர்.

சாளிகைப்பெட்டியழைப்பித்த திருவிளையாடல்

வசன முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

—*—

## நெற்றிக்கண்கேட்ட திருவிளையாடல்.

இத்திறம்வசவதேவ ரினியசங்கமமேநந்த
முத்தியுஞ்சித்திதானு மூலமாமுதலுமென்னும்
பத்தியின்பெருமைதன்னைப் பாருமேளாரறியப்பண்ணும்
புத்தியாற்கல்லியாண புரத்தரன்புகுந்தபின்னர். க

வேறு.

தங்குவெண்பிறையைந்தலைப்பணி தாவுநீர்நகுந்தலையு
ணங்கியோர்விழிகாளநீல மராப்பணித்தொகையுக்

குமான், பங்குநீடலைமாலையாகிய பலவிதங்கள்மறைத்
தரும், துங்கமாதவவடிவமாய்வசவேசர் தம்மெதிர்தோ
ன்றியே. ௨

நம்பியுன்னிடைவந்தனம்மொரு நல்லுறுப்பினைநாடி
யே, யெம்பிரானயனங்களென்ன வெமக்குமுக்கணிவி
ச்சையா, மம்பிகாபதி யன்பனெற்றியி னம்பகந்தரு வா
யென, வம்பிலாமனவசவதேவர் வணங்கிநின்றுவழுத்
துவார். ௩

வீறுமானைமுகத்தன்மூவிழி மிக்கவுக்கிரனன்னகன்,
டேறுமாறொளிர்மாமுகன்னியல் செய்யபன்னிருதுய்ய
க, ணீறில்சங்கரதாசர்முக்க ணிருக்கனெண்கணவ் விந்
திர, னூறொடொன்பது நூறுகண்கொடு நோக்கநல்கி
னைநீயலோ. ௪

இல்லதொன்றையெமக்களித்திடு கென்றுகொள்ளரு
மியல்புளோர், வல்லபேர்முனமில்லையென்கை வழக்க
தன்றுமனத்துளாய், நல்லதம்விழிதங்களுங்குறையத்துகா
ணெவொணதெனுஞ், சொல்லுமக்கிலையென்றொராடிது
தித்துநின்றெதிர்காட்டினார். ௫

காட்டுமாடியுன்முக்கணும்மெதிர் கண்டுகொண்டுக
ருத்தினு, லீட்டுநாணமுளோர்கள்போன்முக மினிமை

குன்றியிறங்கியே, மீட்டுநின்றொருமாற்றமொன்று விள
ம்பிடாதுவிரைந்துட, னொட்டுசெங்கமதேவர்போலுருநண்
ணுமீசர்நடத்தலும். ௬

நடக்குமத்தனைநந்திகேசர் நயந்துகண்டுலகெவையுநீ,
கொடுக்கவல்லையுனக்கொருத்தர்கொடுக்கவுள்ளவொவ
ர்கணின், னிடத்திலில்லவையுள்ளதேலடி யேனளிப்ப
னதின்றிவண், டிடத்தினீவெருள்வோனெனும்படிசெல்
வதென்னெனவுரைசெய்வார். ௭

சுந்தரன்னெனவேமடந்தையர் தூதுசெல்லெனவோ
திலே, னந்தருந்திருநீலகண்ட னணைந்தவாலிபமளியெ
னே, னந்தருநிதிசேடதாசையர் நண்ணல்போலுனைநல்
கெனே, னைந்தவெம்பிடிமாறனாள கைப்பதந்தாநுவ
ல்கிலேன். ௮

சொன்னமாரியெனக்குநல்செனுஞ் சோழர்போலது
சொல்கிலே, னின்னசொர்க்கமதாதியான விருஞ்சுகந்த
ருவாயெனேன், மன்னநின்கயிலாயநீயெனை வைத்ததெ
வ்விடமவ்விட, முன்னலன்பருந்துசேடம துண்டை
யாகுறையொன்றிலேன். ௯

வேறு.

உன்னையருச்சிப்பவர்கண்ணப்பன்றண்டியுடையளிப்
பார்சேடதாசையர்நற்பூக், தன்னைவிடாதேதருவர் புட்

பதந்தர் சங்கிலிமாலைகடொடுப்பள்வாயிலாரோ, நின்னி டமாங்கோயில்செய்வர் கலியனூர்தா நேசத்தால்விளக்கி டுவார்முத்தாலத்தி, துன்னவெடுத்துடன்பாடுஞ்சேர்வ ணன்றான் றூய்யதமிழ்ச்சம்பந்தன் றுதிக்கவல்லோன். ௰

கந்தமணைப்பவர்மூர்த்திகந்ததூபங் கலையரொருவலை யரிவர்கசிந்தளிப்பர், வந்தமுதுபடியளப்பர் தாயனூர்தா மாசிலாக்கர்ப்பூரவடைக்காய்நல்குஞ், சிலைதமகிழ்ந்தி ரோசையர்தீம்பால்வங்கர் தினந்தருவர்திரண்டபால்கொ டகூச்சவ்வை, தந்திடுவெளேகாந்தத்தலத்துச்சாத்தர் ச ங்கரதாசையரிலங்கர்மாஞ்சிதேவர். ௰௧

செலவழியாநினதுநெல்லுக்களஞ்சியங்க டனங்காப் பர்கோட்புலியார்சுங்கம்பார்க்க, வலரியல்சேர்பங்கையர ங்கம்வெட்ட வல்லர்முனையடுவார்நின்கோயிற்காவ, னி லைதிரியார்சிலைநிசிசெய்சங்கிதேவர் நினக்கமுதுபடைப் பள்சிறுத்தொண்டன்றேவி, பலதளிகையமுதேற்றுஞ் சோழர்நெஞ்சிற் பக்கமெல்லாஞ்சென்னையர் பரிந்தளி ப்பார். ௰௨

மிக்விதத்தகச்சாயம் படைக்கவல்லாள் வீரசோளவ் வைநன்னீர்த்தடஞ்சமைக்கத், தருவர்திருவாரூரிற்றண் டியார்தாஞ் சாதமிடச்சாம்பவர்முன்றருக்கிநிற்ப, ரகமு ருகிப்பாடிநிற்க வப்பர்வல்ல ரருங்குளிர்நீர் தந்திடுவார்

பொன்னிதேவர், நெகுமனத்தானின்கோயின்மெழுகவ
ல்ல ணிம்மவ்வைமாளையர்நீள்விற்களிப்பார்.     ௰௩

பிரதானர்கணநாதர்சூதுமின்பாற் பிழையாமலாடவ
ல்லர்மூர்க்கனூர்தாம், திரமானகணக்குவல்லர்வாச்சிதே
வர் செய்யவிசுவாசருயர்கெம்பர்விக்குள், வரமேவுபோ
கையர்மாவின்றுய்யமதுரகனிகாளைக்காலம்மைநல்கும்,
வரமேவுமெய்ப்பொருளாருன்றனீற்றை வணங்குவர்கா
வியம்படிப்போர்சாமவேதர்.     ௰௪

ஆண்டருணின்றிருமேனிகாவலன்பர் பசுபதியாரம்ம
வ்வையன்பாய்போற்றி, வேண்டுறுநற்றுயர்நமித் தண்
டியார்தாம் விமலவயித்தியர்கானவீணைக்காரர், பூண்டு
லகையாண்டகன்றமாதிராசர் புகழுமுருத்திரபசுபதியா
ரென்பார், காண்டகுமந்திரவாதரப்பப்பாச்சர் கசிந்துன
துபிரசாதங் கருதிக்கொள்வார்.     ௰௫

உன்னலமுத்திரையிடுவார்கின்னரைய ருன்வாயிற்ற
ளவாய ரோங்குஞ்சேரா, நின்னருணற்றவசமெலா மெ
ாத்திலேற்பார் நீள்வணிகமல்லையர் நீநன்கார, நன்னெ
றியார்காட்டக்கோட் டையர்காப்பார் நண்ணுபயிர்ச்செ
யல்செய்வோ ரிளைசைமாறர், துன்னருள்சேர்மாமனூர்
மலயராசர் சுரிகைசவுண்டையர்நின்கைச் சுரிகையேற்
பார்.     ௰௬

எறிபத்தர்மின்பூக்கூ டினிதுகாப்பா ரியலுமடியார்து
திப்பாரொழிலாரூரா, நெறிபெற்றுமேகாந்தராமர்மின்னே
நேசிபாச்சமயிகளை நெருக்குந்தீர, ரறுவைந்தீ தகறு
வோர குறிப்புத்தொண்ட ரதிகதிறன்மாச்சையரமலர்
பொம்மர், வெறிபுற்றநந்தவனம்விருப்பிககாப்பார வீசி
றிற்பார்மதவரசராலவட்டம். ௰எ

திருநீலகண்டர்தாஙவபாண்டங்க டினந்தருவர்விறன்
மிண்டாசிவநேசாகரு, வெருவாரைவெட் டவல்லார வி
பூதிதன்னை விரும்பார்க்குக்குலச்சிறையார்சமூர்சமைப்
பா, மருவாருமருவுதற்குவாதஆரர் மாணிநகவாசகந்தா
ன்வருக்கவல்லார, பெருவாயிற்பாலகரோலெச்சகெத்தா
பெரியவிடதாரியாபாம் பினக்கல்லையா. ௰அ

ஏகமுகராதியாயீரைஞ்ஞூறு மெழின்முகந்தரந்தர
மாமிருங்கணத்தோர், மாகவுமைபாகவரசஙகராயமகதே
வமறைமுதல்வமாறுவின்ப, யோகபரசிவமுத்தியுதார
தீரா வொருகாலுமிறவாதாய் பிறவாதாயென், றுகவி
வைமுதலாக வனந்தநாம மன்புடனே துதித்துநிறக வ
மர்ந்துவாழ்வாய். ௰௯

வேறு.

இப்படிப்படியிலாத விரும்பெருஞ்செல்வமுள்ளா
யொப்படிமுடியொன்றில்லா வொருமுதலாகிநிற்பா
யெப்படியென்னைமுக்க ணீயெனக்கேட்டாயிந்தச்
செப்படியென்மேல்வைத்த திருவுளக்கருணையன்றே.

நின்களங்கறுக்குமுன்ன நெடும்புரமெரியாமுன்ன
மன்கனமலையன்பெற்ற மாதைநீவரையாமுன்ன
முன்கசுறியட்ட மூர்த்தநீசெய்யாமுன்ன
மென்கமலத்தோன்மாலுன்விகாரத்திற்சனியாமுன்னம்

அதற்குமுன்னதற்குமுன்னீ யாண்டவனடிமைநானின்
பதக்கமலங்களல்லாற் பற்றிலேனெனப்பணிந்து
மதத்துறைசிறிதுமில்லா வசவேசர்முகமபார்த்தெம்மா
னிதத்தநின்பத்திகாட்ட வெய்தினேமெனமறைந்தான்.

நெற்றிக்கண்கேட்ட திருவிளையாடல்
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - சுடு அ.

௨

திருச்சிற்றம்பலம்.

நெற்றிக்கண்கேட்ட திருவிளையாடல்
வசனம்.

உலகத்திற் பெருஞ்செல்வமும் பேரின்பமுத்தியுமெல்லாம் ஜங்கமாராதனையேயென்னும் உறுதியுள்ள வசவதேவரது பக்தியை விஸ்தரிப்பிக்குங் கருத்தால் சர்வவியாபகரான பரமசிவந் தமது சர்ப்பாபரணம் முதலிய திருச்சின்னங்களைமறைத்து ஒரு ஜங்கமக்கோலமாக எழுந்தருளிவந்து வசவதேவரோ யெமக்கோரவயவம் புதிதாகவேண்டுவது. அஃதேதென்னில் பரமசிவத்துக்கிருப்பதுபோல எமக்கும் நெற்றிக்கண் வேண்டுமென்றனர்.

## ௱௬-து நெற்றிக்கண்கேட்ட திருவிளையாடல்வசனம்.

வசவதேவரும் வந்தஜங்கமரைத் தமது சிவஞானத்தால் பரமசிவமென்றேயறிந்து ஸ்வாமி ஜங்கமரோ, விநாயகர் வீரபத்திரர்முதலானவர்களுக்கு முக்கண்ணும், பிரமனுக்கு எட்டுக்கண்ணும், இந்திரனுக் காயிரங்கண்ணுங் கொடுத்தவர் நீரன்றோ, அன்றியுந் தம்மிடத்துள்ளபொருளை யொருவரைபோய்க் கேழ்ப்பது முறையோ என்றுசொல்லி ஒரு கண்ணாடியையெடுத்து முகத்தெதிர்காட்டினர். அக்கண்ணாடியில் தமது நெற்றிக்கண்ணையுங்கண்டு நாணபபட்டவர்போலப் பின்பொருவசனமுங்கூறாது விரைந்துசென்றார்.

வசவதேவரும் பின்சென்று உலகத்திலெவையுந்தரத்தக்க வுமக்கு ஒருபொருளைக்கொடுக்கும் வல்லவரொவர், ஏதோ பயமடைந்தவர்போ லிவ்வாறுசெல்வது யாதுகாரணம். சுந்தரமூர்த்திநாயனா முதலானவரைப்போல வலிதானவரங்களைக்கேட்டேனோ, கைலையிலிருந்து நீரெவ்விடத்திருக்கக் கட்டளையிட்டீரோ அவ்விடத்திற்றானேயிருந்து அன்பரது ப்ரசாதசேஷங்களைப் புசித்துச் சீவிக்கின்றே னென்னிடத்துக் குற்றமியாது, அநந்தவாத்மாக்கள் வேண்டியவரங்களை நின்னிடத்துபபெற்று முத்திபெறவு மெளியேனோ வுமக்கொன்றைத்தருவேன், எளியேனைக் கேட்பதும் முறையோ, இவ்வாறென்னைச்சோதித்ததுந் திருவருளேயென்று நினைக்கின்றேன். நீர் சகளீகரித்து பிர்ம விஷ்ணுக்களைப்படைக்கு முன்னமேதானே நீராண்டானும் நானடிமையுமன்றோவென்று பணிந்துநிற்கும் வசவதேவரது முகத்தைப் பார்த்து ஜங்கமரூபியான சிவபெருமான் பத்தியை வெளிப்படுத்தவந்தோமென்று உடனே யந்தர்த்தானமாயினர்.

நெற்றிக்கண்கேட்ட திருவிளையாடல் வசனம்
முற்றிற்று.

ஒளியுநல்லலஙகாரமு மொண்மைபுமொப்பும்
தெளியுமிவ்வுலகத்தினு ளில்லையச்சேலை
பளிதருங்குமருலையுமை கயிலையம்பரமன்
களிகொளும்படியுடுப்பளோ வறிகிலேன்கருதின். ரு

அவ்விசேடநற்றிவ்வியாம் பரிணையனையுஞ்
செவ்விசேர்முகச்சங்கமர் வசவணர்ச்சேர்ந்து
வவ்வியாசையாற் கேட்டலுமகிழ்ந்தளிக்கின்று
னவ்விபோல்விழியவ்வைநீ யுடுக்கலாநயப்பால். சா

வேறு.

நந்தெருவிடந்தொறு நண்ணுசஙகமா
தந்தெரிவையர்க்கு நற்றண்டநாயகன்
சிந்தனைமகிழ்ந்தளித் திடந்தினங்கொடு
வந்தவர்தரத்தர மகிழ்ந்துடுத்திடும். எ

வேறு.

புதியபல்வளஞ்செயரஞ்சி காம்போசஞ்சீனஞ்
சிதைவில்பாவசத்திலக நற்புயனிறந்தேசரி
யுதயராகமிவ்வகைய கங்காம்பிகையுடுக்கு
நிதியினம்பரத்தோரிழை விலைபெறுநினைக்கின் அ

வேறு.

எனவுரைத்தநாதிதனை மகிழ்ந்துநோக்கி யிதமுரைத்
துச் சங்கமர்முனினியராக, மனமுருகும்வகைபாடிக்கூ
டிநல்ல மதனகலைவிதமெல்லா மகிழச்செய்தே, யனகா
வசவேசுரர்முனணைந்துநீரங் கவர்தேவிகங்காம்பையழ

காற்சாத்துங், கனகமிகப்பெறுஞ்சேலை கேட்டுவாங்கிக்
கடிதின்னேவரிலென்மேற் காதலுள்ளீர். ௬

வேறு.

அவளுரைத்தனவச்சொற்கேட் டப்படிசெய்துமென்
று, தவளவெண்ணீற்றுநெற்றிச் சங்கமர்விரைந்துசென்
று, பவளமெய்வசவதேவர் பாற்சென்றுவசவகேணின்,
றுவளருநுண் ணிடைகங்காம்பை யுடுக்குமென் றுகிலீ
யென்றார். ௰

சங்கமருரைத்தசொல்லைச் சங்கமேசுரன்சொல்லென்
றே, யங்கநற்புளகங்கொள்ள வத்தநின் னடியேன்செ
ய்த, துங்கமாதவமின்றன்றோ துணைசெய்ததெனக்கென்
றன்பான், மங்கைகங்காம்பைதன்னை வரச்சொலுகென்
றுள்விட்டார். ௰௧

தாதியர்தூதர்வார்த்தை தன்னைக்கேட்டுண்ணடுங்கி
நீதிசேர்தண்டநாத னிறைந்தபட்டத்திராணி
கோதில்பத்தினியாசாரக் கூடத்தில்வருவதென்னென்
றோதியுள்ளஞ்சிக்கங்காம்பிகைசெவியுறவுரைத்தார் ௰௨

சிவனருச்சனைமேன்மோகி செய்யவெண்பூதியாகி
தவநெறிவிவேகியாகி சதாசாரநீதித்தாகி
பவநெறிவிராகிதுய்ய பதிவிரதத்தாலேகி
யுவமையிலஞ்செழுத்தா யூகிதன்மத்தியாகி ௰௩

தங்கநற்குகையிற்காய்ச்சித் தையலாய்வார்த்திழைத்த
பங்கமில்பாவையாவி படைத்தொளிமணிகள்பூண்டு
மங்கலமுறநடந்து வருதல்போற்றிரண்டுமாத
ரங்கணத்திரண்டுபாலும் வரச்சபையணைந்தாளந்தோ.

வந்தகங்காம்பைதூய மதிமுகம்வசவதேவர்
சிந்தனைமகிழ்ந்துநோக்கிச் செய்யவித்தம்பிராற்கு
னிந்தவண்சேலைதன்னை யிங்ஙனங்கொடுப்பாயென்று
ரந்தமொன்றில்லாநாண மதனிலையர்ந்துநின்றாள்.ம௫

இன்றுமானுபிமான மின்றிநந்திரிபுடுத்த
மின்றுணுஞ்சேலைவாங்கி விளையநாமிவர்க்களித்தால்
வன்றுயர்ப்பிறவிச்சேலை மண்ணின்மேல்மாறிமாறிப்
பொன்றுதலின்றிப்போம்போமென்றுநற்புத்தியன்பால்

உரிந்தனர்தங்கையாலே யொண்ணுதறிரும்பாநிற்பப்
புரிந்தகங்காம்பைகற்பின் பொற்பதோவசவராசர்
பரிந்தகைப்பரிசமேன்மைப்பான்மையோவாங்கவாங்கத்
தெரிந்திடவரிதாநீளச் சேலையாய்த்துலைவதின்றி. ௰எ

வெய்யவனுதிக்கும்வாரி மிசையெழுதிரையோவிஞ்சு
செய்யநற்கொடிமின்றானோ திங்களுட்டுளங்குமின்னோ
துய்யவிச்சேலையென்னத் துலைவறவளர்தலாலே
யையநற்றண்டாத வமைபுங்காணமக்கிதென்றார். ௰அ

அமையுற்றன்றவருரைத்த வளவிலக்குறிகொண்டற்ற
சமமுறுஞ்சேலைதன்னைச் சரணராம்வசவதேவ
ருமையொருபாகர்வேடர்க்குவந்தளித்திறைஞ்சிநின்றார்
கமையுறுங்கருத்தராகிச் சங்கமர்களித்துச்சென்றார்.

அம்மைகஙகாம்பையுள்ளே யன்னமோபிடியோ வெ
ன்னச், செம்மையாநடந்துமெல்லச் சென்றுறுபோதி
ருந்தோ, ரொம்மையாதரவிற்பெற்ற விவளைநாம்விழியா
ற்காண, வெம்மைதீர்தவநாஞ்செய்த மேன்மையேமே
ன்மையென்றார். உ௰

வேறு.

படிமகளிவர்பதப் பரிசுவேண்டியே
முடிவரும்பொறையினை முன்னமெய்தினள்
கடிமலர்மகளிவா கனத்தநல்லியல்
வடிவினைவிரும்பிவாழ் மனையினையினள். உக

கலைமகளிவருரை கற்கவேண்டியே
நலமலரயனிடநாவினையினள்
சிலைநுதலிவர்பதி விரதந்தேடியே
யுலைதலாலருந்ததி யுடலங்குன்றினள். உஉ

வேறு.

இவரபிமானம்பெற்ற விவரருங்கற்பினாலும்
தவநெறிவசவதேவர் சற்பாவனிலையுமென்றே
யவரவரிருந்தஙதேத்த வன்னளாயன்பாற்போற்றிச்
சிவநெறிவசவதேவர் முன்னுளோர்செய்திசொல்வார்.

வேறு.

எந்நெறியுமோர்நெறியாய்த்தேவரீர்கள் இயம்புவதெ
ன்னென்றஞ்சியிச்சையாலே, பன்னிரண்டாண்டிருந்து
நெய்தபட்டோரன்பாபரிந்துதரவெனச்சேடதாசரீந்தா,
ரிந்நெறிவல்லாளரியற்பகையரானு ரிருவருந்தமில்லாளை
யிசைந்தளித்தா, ரங்கிலேயேமானக்கஞ்சாறர்பெற்ற மக
ள்குழலைமணப்பந்தர் மகிழ்ந்துதந்தார். உச

விருப்பமுடனமர்நீதி நேயரென்பார் விமலனன்பர்க்
குடலாதிமிகுவாழ்வெல்லா, மருத்தியினலளித்திலரோ
வரிவைமோக ராந்தவர்க்குநரசிங்கமுனையராவார், பெ
ருத்தநிதியிரட்டிகொடுத்தருளடைந்தார் பெருங்கருப்பி
னெற்கவர்ந்தோர்பேச்சுக்கேளா, விரக்கமுடனிடங்கழி
யார்தமதுசெல்வ மெல்லாநம்மாதவத்தோர்க்கென்றன்
றீந்தார். உரு

என்றுவசவேசர்முன்னோர்செய்தசெய்தி யியம்பியே
தம்மையெண்ணுதிருந்தாரிப்பாற், றுன்றுகுழற்கங்காம்
பையம்மையுந்தந் தூயவந்தபுரத்தரனைத்துதித்தேபுக்கா
ர், நன்றுறுமிந்நாளின்மற்றோர் தூர்த்தவேடா நங்களன்
னைகங்காம்பைநலத்தகன்ன, மின்றிகழ்கா பரஞ்சியோ
லைகேட்டார் விரும்பியளித்தாரவரோர் வேசிக்கீந்தா.

ஆடைவளர்ந்த திருவிளையாடல்
முற்றிற்று.

---

ஆகதிருவிருத்தம் - சஅ௯.

797
(ഗ്ര10)

உ

திருச்சிற்றம்பலம்.

## ஆடைவளர்ந்த திருவிளையாடல்

### வசனம்.

ஸ்ரீவசவதேவ ரிப்படியிருக்குநாளில், நாள்தோறு மிவரிடத்துப் பொருள்பெற்றுச் சீவிக்கும் விடஜங்கமரது பொருட்பெண்ணொருத்தி தனது மாளிகையினின்று மொருதாதியையழைத்து நமது சங்கமனாக காணுமையால் வசவதேவரிடத்துச்சென்று நாமனுப்பினோமென்றுசொல்லிச் செலவுகளுக்கு வேண்டும்பொருளைக்கேட்பின் அப்படியே பொருளைத்தருவர் நீ வாங்கிக்கொண்டு வருவாயென்றனுப்ப, அத்தாதியு மவ்வாறுசென்று அவரது பத்னியாராகிய கங்காம்மையார் தரித்திருந்த பீதாம்பரத்தைக்கண்டதிசயித்துத் திரும்பி யுடனே தனது தலைவியினிடத்துவந்து கேட்பாயம்மா வொருவிசேடமிருக்குது, கங்காம்மையார் தரித்திருக்குஞ் சேலையைப்போ லுலகத்தி லெங்குமிராது, திருக்கைலாயத்தி லுமாதேவியார் தரிக்குஞ்சேலை யொருகாலிவ்வாறிருக்குமென் றெண்ணுகிறேன்.

உன்னிடத்தில் வந்துபோகும் ஜங்கமர் வசவதேவரிடத்துச்சென் றச்சேலை வேண்டுமென்றுகேட்டா லுடனேதருவர் நீயும் உடுத்திக்கொள்ளலாமென்று சொல்ல, அப்பொருட்பெண்ணு மவ்வாறே தனக்குரிய விடஜங்கமருக்குச்சொல்ல, அச்சங்கமருமவ்வாறே வசவதேவரைச் சென்றுகேழ்க்க, வசவதேவருந் தமது பத்னியாரையழைப்பித்து ஆடையையவிழ்த்துத் தருவாயென்ன, பத்னியாரும் நாணமடைந்து முகந்திரும்பிநிற்க, வச

வதேவர் தாமேசென் றுடையையவிழ்க்க, அதுவு மவிழ்க்குந் தோறுந் துலையாதுவளர, விடஜங்கமரும் இதுவே போதுமான து இனிவேண்டுவ தின்றெனமறுக்க, வசவேசரு மதனையவ்வள விற் சேதித்துத் தந்தனின்றனர். விடஜங்கமருங் களித்துச்செ ன்றனர்.

மற்றொரு விடஜங்கமரும் நீகாம்பையாரணிந்திருந்த ஸ்வ ர்ணரத்னகசிதமான காதணியைக்கேழ்க்க, வசவதேவரு மவ்வா றுகொடுக்க ஜங்கமரும் வாங்கிச்சென்று தமதுவேசைக் களித் தனர்.

ஆடைவளர்ந்த திருவிளையாடல்வசனம்

முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

—*—

# முத்தசங்கையர்புராணம்.

—*◯*—

அமலமெய்தரித்தாய்போற்றியருளையாதரித்தாய்போ ற்றி, எமைகிரந்தரித்தாய்போற்றி யேதமதரித்தாய்போ ற்றி,கமையுழிதரித்தாய்போற்றிகருமமுத்தரித்தாய்போ ற்றி, சமணிலுத்தரித்தாய்போற்றி சைவம்வித்தரித்தா ய்போற்றி. க

வேறு.

அறவராந்தண்டநாயகர்க் கணியராந்தோழா
செறியிலிங்கநன்னிட்டராய் மற்றொன்றுந்தேரா
குறவுவெம்பகைதெரிவைய ரின்பமொன்றுன்னார்
முறைமைசேர்முத்த சங்கையரென்றுருமுனிவர். ௨

தண்டநாதர்பால்விடாகளாஞ் சங்கமாசாரந்தே
யொண்டருந்தமதரிவையர்க் குதவுநன்னிதியுந்
தண்டருந்துகில்குங்குமஞ் சந்தனம்பன்னீர்
கொண்டுகொண்டனுதினஞ்செலுங்குறிப்பினைக்குறியா

இவர்சிவார்ச்சனைபுரிவதற் கிதந்தவைகொண்டு
தவமிராந்தொறுமாதர் பாறசெயயவேசராவார
நவமதாகயாமிவர்களைப்போ லின்றுநன்றருந்
சிவனருச்சனையரிவைய ரிடஞ்சென்றுசெயவாம். ௪

என்றுதண்டநாயகர் தமையழைத்தெதிரிசைப்பார
வென்றிமாதவர்போலயா மாதவபான்மேவி
யொன்றுநறுசிவபூசனை புரிவதற்குடனே
நன்றுமங்கையுமதற்குள பொருள்களுநல்கி. ௫

செல்லுமாதவர்தம்முட னம்மையுஞ்சேர்ப்பாய்
வல்லையென்றலுந் தண்டநாயகருளமகிழ்ந்து
நல்லதென்றுறுநண்பினுன் மெல்லெனநகைத்துப்
புல்லியேயராயிருகரங் குவித்தெதிர்போற்றி. ௬

எனைத்துநெஞ் சினுல்வாக்கினு லிகழ்ந்திடா திசைந்து
வனப்பின்மிக்கதூசாரஙகண் மணவஙகையடைக்காய்
கனத்தநன்னிதிபுதுமல ரிவையெலாங்கட்டி
யனைத்துமின்றுசெய்பரிசனர் கரங்களிலளித்தே. எ

எழுதுமோவிபப்பாவையோ விருந்திய தனுற்
பழுதிலாதுசெய்மஙகையோ பதுமையோபவளக்
கொழுவிதாகியகொடிகொலோ வென்னலாஙகோல
மொழுகுமேனியாளுருத்திர கணிகைபாலுய்த்தார். அ

இதமுறும்பலவளம் பரிசனத்தாகொண்டேக
முதிாமனத்தராமுத்த சஙகையனொனுமுனிவர்
மதனகாலனேமடந்தையா தந்தையாவென்ன
வதிகரூபியாங்கணிகையா ளகத்துறுமளவில். ௯

வசவதேவர் தமிசையெனும் வளரொளிவனப்பி
னசைவிலாமையைப் பருதிகண்டஞ்சிப்பினிடைந்து
விசையில்வீழவதுபோலவே விரிகதிருறைநதெண
டிசையின்மேற்கதாங்கடலிடைவீழ்ந்துகீழ்ச்செறிந்தான்

அவந்தரும்பரசமயாமே னந்தியாரங்கண
சிவந்தபோலவேமேல்கட லிடத்துவிண்சிவந்த
பவங்கொளப்பரவாதர்கள் பலமுகமொடுங்கிக்
குவிந்தபோலவண்பங்கய மலரொலாங்குவிந்த. ௰க

வேறு.

உததியிற்பிறந்தவெம்மோ டுதித்தமாவசவதேவர்
விதமனையிருக்கப்பெற்றாள் விதுவரன்சென்னியுற்று
னிதழுறவெம்மைமண்ணோ ரெச்சில்செய்கின்றாரென்று
கதறுதல்போலக்கோயிற் கண்டொறுஞ்சங்கமார்த்த.

இனியநம்வசவதேவ ரியல்கண்டுசமணைப்பற்றி
வனிதைமார்நகுதல்போல மலர்ந்தனவாம்பலெங்கு
மனியராமமணாமுற்று மடங்குதல்போலத்தத்த
நனியுறுசேக்கைதோறு நண்ணினபுட்களெல்லாம். ௰௩

வேறு.

வெய்யபுன்சமண்கள்ளர்தாம் வெருவிடவந்த
செய்யதண்டநாயக ரெனவெழுந்ததுதிங்க
ளையர்நந்திகளருளினு லனைத்துளோர்நுதலி
னுய்யவந்தவெண்ணீறு போலுதித்தனவுடுக்கள். ௰௪

இந்தவாறிராத்திங்கள் வந்திசைதரும்பொழுதி
னந்தமெய்த்தவர்சங் கையவெழுந்தருள்வாரைச்
சந்தவோவியமுயிர்பெற்றுச் சரிக்குதல்போல
வந்துருத்திரகணிகையா ளெதிருறவணங்கி. ௰௫

கரங்கொடுத்தகங்கொண்டு போய்க்கழலிணைவிளக்கி
யிரங்குமன்பினுற்றீர்த்த மதருந்திநீடெழிலாற்
றிரங்கொளாதனத்திருத்திமுன் னினியனசெப்பி
வரந்தருந்திருநீறடைக் காய்வைத்துவணங்கி. ௰௬

வளந்தரும்பரிசனத் தனைச்செலுமென் றுமகிழ்வா
லுளங்குளிர்ந்தகம்புகும்பொழு துருத்திரகணிகை
தளங்கொண்மாளிகைபடிக மாமணியினாற்சமைத்தங்
களந்திடற்கரிதா மொளிமண்டபமதனில். ௰எ

கிள்ளைசாரிகைகபோதங் கண்முழங்கவேகளித்த
வுள்ளநைந்திடவீணை யாழ்கின்னரியொலிப்ப
வள்ளிதாகியதமனியக் கட்டின்மேல்வனப்பார்
பள்ளியொள்ளியபஞ்சணை மென்மலர்பரப்பி. ௰அ

தூங்குதீபங்கள்புடை தொறுமசைவறச்சுடர்
வோங்குமென்றிரைவிரித்து மேற்கட்டிகளொளிரப்
பாங்குதாதியர்சவரங் களாஞ்சிகள்பற்றி
யாங்குதெண்பனீர்தெளித்தபூ விசிறிகளசைப்ப. ௰௯

வாசநீர்சின்னக்கெண் டிகைநிறைத்துமுன்வைப்பார்
பூசுசந்தனமாதிசேர் பொற்கிண்ணநிறைப்பா
ராசிலாவடைக்காய்தரு மடைப்பைமுனபிடிப்பார்
தேசுலாவுபொற்படிகல விங்கிகைசேர்ப்பார். ௨௰

ஆகுமெல்லையிற் கனகசோபானமேலைய
ரேகுபோதினிலுருத்திர கணிகையாளிருகை
மோகமேல்கொடுகொடுத்திட முத்தசங்கையர்தாம்
போகநெஞ்சினரன்றியே யேறிப்புகுந்து. ௨௧

பைம்பொன்மாமணிப்பரியங்க சயனத்தைப்பார்த்தே
யெம்பிரானிருந்த நளூற்றபீடமீதென்ன
நம்பியன்பிஞனனிமிகப் பயந்ததற்கருகாக்
கம்பளாதனம்போட் டதன்கண்ணிருந்தருளி. ௨௨

நெடியவேணியைவிட்டு முன்கட்டிநேரிழைநீ
சடைகள்கட்டிலையென்னிது சாற்றெனயாங்க
ளடையுமம்பிகையெங்களுக் கஞதியிலளித்த
கடிகொண்மெல்லியசடையிது வெனமயிர்காட்ட. ௨௩

பொறையுறுந்தமதுருவெலாம் பூதியைப்பூசி
நிறைபவிந்தநீறென்முனே நீதரிக்கில்லாய்
யறைதியென்றலுமம்பிகை யெனக்குமுன்னளித்த
முறையினீறிதுவென்றுமெய் மஞ்சனைமொழிந்தாள்.

கண்டிதம்முடற்றரித்துநீ காரிகையிவைமேற்
கொண்டிடாததென்கூறென வுவர்க்கடற்கணாயின்
மண்டுமிம்மணிமாலையன் றரியபாற்கடற்றீ [ள்.
வுண்டிவ்வெள்ளைநற்கண்டிகை யெனமுத்தையுரைத்தா

முத்தசங்கையர்முத்த மூக்குத்தியைநோக்கிச்
சுத்தருத்திராக்கத்தைநற் சிரத்தினிற்றூய்தாய்
வைத்திடாதிந்தமூக்கினில் வைத்ததேனென்ன
வத்தநாரணதீதனே வல்லெனவறைந்தாள். ௨௬

சற்குணத்திரீகச் சட்டமொன்றையேதரியா
தெற்கொண்மெய்யெலாங் கலையினுன்மூடலேனென்ன
துற்பவித்திரட்டுணைவிழிக் கென்னுடறேன்று [த்
நற்கிரமத்திஞற்போர்த்தன னெனமனநயந்து. ௨௭

அரிவையாளிவளனுதிலாஞ் சனமுடையாளென்
றிருகைகூப்பிநின்றிந்தநல் வேடத்திற்கெவர்தாம்
பெரியதேசிகர்நியமமே தாசாரபேதத்
துரிமையேதுநின்குருபரம் பரையெதுவுரைப்பாய். ௨௮

தவங்களெவ்வழிசெய்வை நீயாருடன்சங்க
மூவந்துபண்ணுதியுண்பதே துரையெனநகையா
சிவந்தவாயினள்செப்புவாள் வாமதேவாசா
னவங்கொண்முன்னுபதேசத்தால் வெள்ளிமாநகமேல்.

அகிலநாயகியருந்தவஞ் செய்தவன்றன்னை
மிகமகிழ்ந்திடப்பண்ணித்தன் மேனியோர்பாலுந்
தகுமவ்வேடமுந்தந்திடப் பெற்றவத்தையல்
சகமளித்தருடேசிகை யாமவள்சமயம். ௩௰

தரணிமோகனலாஞ் சனதாரியர்யாங்க
ளருமறைப்புராபுராணங்க ணிறையவன்றான்பால்
வரமுறும்படிகேட்டவ ளனைத்தையும்வகுப்பாள்
பரமகாரணிசந்ததிப் பாவையர்யாங்கள். ௩௧

அட்டமொன்றதாய்க் காய்ந்தபால்சருக்கரையன்பா
லிட்ட லிங்கத்துக்கீந் தியாமருந்துவமினிதாய்த்
தட்டிலாமலொண்கந்தமூ லாதிகட்டவத்தோர்
நட்ட பந்தர்கட்கீந்திடற் கொள்ளுதுநயந்து. ௩௨

தனு மனந்தனம்வந்த சனையின்றியேதவரு
தனுவினந்தருந்தசங்கமர் தம்மையாமனைவோர்
தினமுமியாஞ்செயுஞ் செயலெலாஞ்சிவலிங்கபூசை
புனிதமுத்தியும்பத்தியு மெமக்கவாபுகலின். ௩௩

மூவிதத்தவாம்பொறிகளால் யாங்கள்செய்முறையீ
தாவிபோலுமெம்மாரி யர்மார்க்கமாகிட்டை
மேவுவேடங்கள்விரத நற்சரித்திரமிவையெந்
தாவில்சந்ததிமடந்தையா சிவாலயஞ்சார்வார். ௩௪

ஐயவென்றுமின்னிசைத்தலு முத்தசங்கையர்தா
மெய்யிதென்னவேயவரை நற்றவரெனவிரும்பிச்
செய்யுமுன்வளம்பார்க்கெனத் தெளிசிவார்ச்சனைக்குத்
தூய்யமஞ்சனமலர்தரு வாயெனத்தோகை. ௩௫

இவர்க்கிதத்தனசெய்வதே கருமமென்றெண்ணி
யவர்க்குமஞ்சனமலர் கந்தமாதியாமனைத்து
முவப்பினல்கியே யூழியந்தவறறவுதவத்
தவத்தராமுத்தசங் கையர்சிவார்ச்சனைத்தருக்கால். ௩௬

போதவர்ச்சனைசெய்வதைக் கணிகையாள்புரியா
வாதரத்தினிற்றன்பரி சனத்தனையழைக்கக்
கோதின்மாமயிற்றிரள்களோ வன்னத்தின்குழுவோ
வோதுசித்திரப்பாவையோ வெனப்பலருறலும். ௬௭

ஒத்துமத்தளந்தாளங்க ளொத்துமின்காளந்
சுத்தமாகவேயூதுமின் றோத்திரந்துதிமின்
சத்தநல்லிசைபாடுமி னாடுமின்றவருச்
சித்தமெய்த்தவா பூசனைக்கேவனன்செய்வேன். ௬௮

என்றுதூபதீபார்த்தி நன்னிவேதனமெல்லா
நின்றுருத்திரகணிகையா ணையத்தினளிப்ப
வென்றுமெய்த்தவாசிவார்ச் சனைவிருப்பமேமிகவு
மொன்றுநெஞ்சராயிரவெலாமெழாதிருந்துவந்தார் ௬௯

அரியமாதவர்முத்தசங் கையர்தந்துறவைப்
பரிவுபொங்கியேதோத்திரம் பண்ணுவார்போல
விரியிராவிடைக்குக்குடம் புள்ளினமெல்லாம்
பெரிதுகூவினசிலம்பின பிரிந்ததுகங்குல். ௭௰

பழுதகன்றிலாப் பரசமயாந்தகாரங்கண்
முழுதகன்றிடச்சைவமா முளரிகண்மலரத்
தொழுபதாம்புயத் தண்டநாயகக்கதிர்தோன்றிற்
றெழுமினென்பபோ லாலயந்தொறுஞ்சங்கமியம்ப. ௭௧

ஐயமுத்தசங்கையர்தன் மாயையிடைங்கா
துய்யுமாற்றினையுணர்ந்தஞ் சிபுருத்திரகணிகை
பையவேங்கையொழிந்தவப் பான்மைபோற்குமுதச்
செய்யமென்மலர்த்திரளெலாஞ் செவ்விபோய்க்குவிந்த

முற்றுமெய்த்தவர்முத்தசங் கையரொனுமுனிவர்
வெற்றிவேல்விழியாருட னிருப்பினும்விருப்பஞ்
சற்றுமில்லராந்தன்மைக்குச் சான்றியாமென்றே
யுற்றநேயத்தினிற்றல்போற் பகலவனுதித்தான். ௨௩

தண்டநாயகர் தவநெறிப்பத்தியுந்தயாவு
மண்டர்கோனிடத்தவர்பெற்ற வருளுமுற்றறிந்து
கண்டபேருளங்களிப்புற முகமலர்ந்ததும்போல்
வண்டகன்றிலாப்பங்கய மலரொலாமலர்ந்த. ௨௪

காலையெய்தியகாலையின் முத்தசங்கையர்தாஞ்
சீலநந்திகண்முன்னனைத் தினிதுரைசெய்வா
ரேலவெனனுடனிராத் திரிவந்தறிந்திலையே
நீலகண்டனேவல்லன மடந்தையினெறியை. ௨௫

என்னைசொல்லுவ னிரவெலாந்துஞ்சுதலின்றி
யுன்னையுன்னினன் சிவார்ச்சனைக்காலையினுவந்து
முன்னைநல்வினையுள்ளவ ரந்தமென்மொழியா
ளன்னையஞ்செறிசிவார்ச்சனை யனையினையணைவார். ௨௬

கண்டனன்பலதவத்தனை யிப்படிகாணேன்
வெண்டருங்கண்டிமென் சடைபொன்னனவிபூதி
மண்டிறுஞ்சகலாங்கிகளபி னமம்மடந்தை •
கொண்டவேடங்க ளவள்பரிசனருமக்குறியால். ௬௭

இனையவாமுத்தசங்கைய ரிசைத்திடவிருந்தோ
ரனைவருஞ்சிரித்தார்ந்தனர் நந்திகளன்பான்
முனையினண்பிஞன்முறுவல்செய் தானையேமுன்னிப்
பினையறிந்திலார் பெருமையைப்பேசரிரென்றார். ௬௮

முத்தசங்கையர் புராணம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௫௬௨.

---

௨

திருச்சிற்றம்பலம்.

---*---

முத்தசங்கையர் புராண

வசனம்.

ஸ்ரீவசவதேவரிடத்துத் தோழமையுள்ளவர், லிங்கநிஷ்டாபரர், முத்தசங்கையரென்பவர் உலகவிகார மொன்றுமறியாதவர், அநேக விடஜங்கமர் வசவதேவரிடத்துவந்து வேண்டும் பொருளுடனே வஸ்திராபரணங்களையும் வாசனைத்திரவியங்களையும் வாங்கிச் செல்லுதலைக்கண்டு இவர்கள் சிவார்ச்சனைக்குரிய பொருள்களைப் பெற்றுக்கொண்டு மாதரிடத்துச்சென்று அத்தவங்களை யிரவிற்புரிவார்போலும் யாமுமிவ்வாறு புரிதல்

வேண்டுமென்றுகருதி வசவதேவரிடத்துச்சென்று இச்சங்கம ர்போல் யாமும் மாதரிடத்துச்சென்று தவம்புரிய விச்சித்தே ம், அதற்குவேண்டு முபகரணங்கண் முற்றுந் தருவீரென்று ரைக்க, அவருமவ்வாறே வேண்டும் பொருண்முதலிய சாதன ங்களைப் பரிசனங்களிடத்துக்கொடுத்து ஒருகணிகைவீட் டிச்ச ங்கமரை யடைவிப்பீரென் றுஞ்ஞாபிக்க, அவருமவ்வாறே அ ழைத்துக்கொண்டுபோய் விட்டனர். அவ்வேசியரும் எதிர்செ ன்றழைத்துச்சென்று பாதங்களைவிளக்கி யத்தீர்த்தயருந்தி அ டைக்காய்த் திருநீறுவைத்து வணங்கியுபசரித்துத் தமது பஞ்ச ணையிற்சேர்க்க, அதுகண்ட முத்தசங்கையர் இந்ததிவ்யபுஷ்பா லங்காரசயனம் எமது சிவபெருமானுக் கருச்சிக்கும் பீடஸ்தா னமென்று நினைத்து இதனைநெருங்க யாமருகரல்லோமென்று பக்கத்தோர் கம்பளமிட்டு அதிலிருந்தனர். அக்கணிகை மதன லீலைக் கெவ்விதத்துள்ளாக்கவு மக்குறிப்பொன்றுமறியாது இவ் வேசையையுந் தவமுடையாராகநினைத்து நீவிர் சடைதரியாம ல்.உருத்திராக்ஷமணியாமல் திருநீறுதரிக்காமல் கச்சட்டமுடிக் காமல் உடல்முழுதும் ஆடைகொண்டு மறைத்தகாரணம் யா தென்ன, வேசை யிவர் மோக்ஷகாமியென்றறிந்து யாம் சௌரி மதஞ்சார்ந்தவராதலால் அதற்கேற்ப விக்கோலங்கொண்டனம். எமதுதேகத்தைத் தம்மைப்போல்வாராய ஜங்கமர் காணலாம ன்றி பவிகளானோர் காண்டல்கூடாதாதலால் இவ்வா றுடையான் மறைந்தனமென்ன, முத்தசங்கையரு மிவர் அநாதியான சத்தி ச்சின்னமுடையவரென்று நம்பி மிகவு மவரிடத்தன்புவைத்து அவர்க்குத்தா மளவற்ற வுபசாரங்களைச்செய்து அக்கணிகையு மவள தேவற்பெண்களு முடனிருந் தேவல்செய்ய இரவுமுழு துஞ் சிவபூஜைசெய்து விடியற்காலத்தெழுந்து வசவதேவனைக்

கண்டு நேற்றிராத்திரிபூஜையில் நீருமுடனில்லாததனாற் குறையாகமுடிந்தது.

அம்மங்கையார்போற் றவமுடையாரை யிதுபரியந்தம் நாமெவ்விடத்துங் கண்டறியோம் என்று சொல்லவே அங்கிருந்தவர் யாவருஞ்சிரித்தனர். இவர்பத்திக்கிரங்கி வணங்கி யதிசயித்துத் தாமும் மனமகிழ்ந்து புன்முறுவல்கொண்டிருந்து சிவத்தியானமொன்றல்லது வேறறியாதது பெருமை வாக்கு மனங்கட் கருமையுள்ளதென் றிருந்தனர்.

முத்தசங்கையார் புராணவசனம்
முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## பசுபதிநாயனார் புராணம்.

இன்னவாறுநந்திகேசரினிதுரைக்குமெல்லையின்
மன்னுசென்னவசவதேவர் மாமலாநாடியே
நன்னெடுங்கரங்குவித்து நம்பனன்பின்மிக்கார்
முன்னருந்தவத்தோர்முறைமையானதென்னென. ௧

சோதிசோதிதுற்றகண்ணர் துய்யதாரகைக்குழா
மேதுமுற்றுணர்ந்திடா திருத்தல்போலவெம்பிரான்
மீதிலன்புளோர்களெண்ணின் மிக்கலோகவிதிகளா
னீதியொன்றுமின்மையென்று நிச்சயித்துரைத்திடார்.

பித்தாபாலரொப்பர்நூனர் பேசிலென்றுசெப்பவே
முத்தரித்தவத்தர்போல முன்னுமுள்ளரோவென
வித்தவத்தர்போலனந்த னென்னவெங்கணந்தியா
ரொத்தசென்னவசவராசையர்க்குரைத்ததோதுவாம்.௩

அரனிடத்திலளவினைய ரஞ்செழுத்தினெஞ்சினார்
தனைவிளங்கவந்தவெய் யனூனொனுந்தலத்தினா
விரகிலாதமெய்த்தவத் தர்வீரசைவவிதியினா
ருரமுலாவுளத்தர்பாசு பதிகளென்றொருத்தனர்· ௪

ஓரிடத்துவீரசைவ வுத்தமத்தர்கூடியே
பாராயித்தனதிகநூல் படித்திருக்குமெல்லையின்
வாரியைக்கடைந்தபோது வந்தெழுந்துவந்தமா
கோரமுற்றகார்விடம் பரந்தறக்கொதிக்குநாள். ௫

அஞ்சிவானரசுரர்கூடி யபயமபயமபயமென்
றெஞ்சியோடுமெல்லையி னெழுந்தவெய்யவிடமெலா
நஞ்சிதென்றெணுமலத்த னுண்டசொன்னவிற்றலு
நெஞ்சுபாசுபதிகளா ரழிந்தருண்டனீனவராய். ௬

என்னவென்னசொல்லுமால மெம்பிரானயின்றதெ, னன்னசெய்தி மெய்கொலுள்ள தறையுமென்னவவர்க ளு, மன்னவுள்ளதென்னவே மயங்கிமண்ணின்மேல்வி ழுந், தொன்னலார்கொல் விண்ணனொன் றுலைந்துநைந் துருத்தெழா. ௭

விடமருந்துகென்றொருத்தர் வேண்டிலொன்றி யுண்ப
ரோ, மடமணைந்துளோருமால மனமிசைந்துகொள்வ
ரோ, திடமிருந்தகாளமுண்டுசெர்த்தபேசொணைந்துமோ,
ரடமிதைத்திருப்புமந் திங்கள்வல்லரார்கொலோ. ௮

புக்கவாலமந்தவேலை யிற்புறப்படுத்தமெய்
யொக்கலாகவருகிருந்து ளோர்களில்லையானதே
திக்கெனக்குநீயலாது தேவரில்லையென்செய்கே
னிக்கணத்தினஞ்சுமிழ்ந்தெனக்கிநஞ்செயெம்பிரான். ௯

ஆலமுண்டபோதுதேவி யருகிருந்திலையோ
சாலவேணியுற்றகங்கை தானுமொத்திருப்பதே
ஞாலவோலநந்திகேச ருற்றசுற்றமல்லவோ
வேலனானறிந்ததுண் டெனிற்றவிர்ப்பனென்செய்கேன்

இந்தநூலையிந்தமாத வத்தர்தாமிசைப்பதேன்
றக்திமாமுகத்தர்வேலர் தந்தையன்பிலார்கொலோ
பந்தரானவீரபத்தி ராதிபல்கணங்கணீர்
வந்துகையிலும்பறித் தெறிந்திலீர்மறந்திரோ. ௰௧

இவ்விடந்தலைக்கொள்கின்ற வேலையிற்புகுந்துநீ
ரவ்விடத்துநன்மைசெய்த லன்பதன்றதற்குமுன்
வவ்வியையர்தாளிலே வணங்கியோர்மருந்தளித்
தெவ்விதத்தெனுந்திருப்பு மென்சொலுக்கிரங்கியே.

தீயதத்திதொன்றையுந் திருப்பிலத்தனெம்பிரா
னையுமற்றனந்தநா ளிருப்பனருமில்லையே
நாயகன்விடத்தையுண்ண நானிருக்கிலேனெனப்
போயிருங்கடற்குதிப்ப னென்றுபோதுபோதிலே. ௰௩

தேவதேவன்விடையின்மீது தேவிபங்கனெய்தியே
பூவின்மாரிவிண்ணுளோர் பொழிந்துகைகுவிக்கவே
யாவன்மீதுசிவகணத்த ரரவெனுஞ்சொலொலியுட
னைவதொன்றுணக்கித்தக் கேளித்துமென்னலும். ௰௪

பாசுபதிகளீசர்தாள் பணிந்துநின்றுபகருவார்
தேசவிறைவநீயயின்ற தீயவாலமொத்தியே
நாசமணையிலென்னசெய்வ னஞ்சையிங்குமிழ்ந்திடி
னுசிலாவரமெனக் களித்ததொக்குமென்றலும். ௰௫

முத்தனெம்பிரான்மகிழ்ந்து முறுவல்செய்துநாடியே
பத்தவிந்தவாலநா முமிழ்ந்திடிற்பாரந்துமண்
மெத்தவெந்துவாளிறந்து விடுமிதெம்மிடத்துமே
லொத்திருந்துபோவதன்றி யொன்றுமின்றெமக்கென.

கண்டமுற்றகடுவிழிந்து கடுகிலென்னசெய்குவே
னண்டநாதநம்பகில்ல னவியங்கழிப்பனென்
றெண்டியங்குமன்பர்சொல்ல வெம்பிரானிரங்கியா
முண்டநஞ்சிழிந்திடாது நங்களத்திலுழியலால். ௰௭

நம்பலாதபோதுநம்ம டித்தலத்துநண்ணியே
யெம்பெருங்களத்தினஞ்சு சிழிந்திடாதுபார்த்திரொன்
றும்பர்கோன்வலத்துடைக்கணுற்றநண்பில்வைத்தன
னம்பரத்தர்மாரிபோ லலர்க்கைகொண்டுவீசினார். ௰அ

கங்கைவேணிகொண்டநஞ்சு கண்டம்விட் டிழிந்திடா
தங்கரன்மடித்தலத் தமர்ந்துநாடுமன்பரா
மெங்கள்பாசுபதிகளாரி லங்குமேன்மைதன்னையார்
சங்கைசெய்துரைக்கவல்லர் தம்பிரானையன்றியே. ௰கூ

பசுபதிநாயனார் புராணம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௫௫க.

உ

திருச்சிற்றம்பலம்.

பசுபதிநாயனார்புராண

வசனம்.

ஒருதினம் ப்ரஸாதமே திருமேனியாயுள்ள சென்னவசவ தேவர் தமதுமாமன் ஸ்ரீவசவதேவரைநோக்கி தவமூடையாரொல்லா மேழையராயினகாரண மென்னையென்றுகேட்க, உலகத்தில் சூர்யோதயங்கண்டவர் கண்களுக்கு நக்ஷத்திரவொளி தோற்றாது, அதுபோல சிவதர்சனம்பண்ணுந் தவமுள்ளார் உலகத்துப்பொருளை யெப்போதும்விரும்பார். பித்தர்போலவும் பாலர்

கள்போலவும் ஞானிகளிருப்பரோன்று சொல்ல, இவர்போலும் ஞானிகள் முற்காலத்துமுளரோவென்று சென்னவசவதேவர் வினவ, இவர்போ லனந்தஞானிகள் உண்டு அவரிலொருவர் பசுபதிநாயனாரென்பவர், வெய்யலூரென்னும் திருத்தலத்தையுடையவர், வீரசைவாசாரமுள்ளவர், இவர் வீரசைவ உத்தமர்கள்கூடி சிவாகமமுதலிய நூல்களைப் படிக்குங்காலத்தில் திருப்பாற்கடலில் கோரமான வாலகாலவிஷமுண்டாய் எங்கும்பரவிக் கொடுமையைச்செய்ய அக்காலத்துத் தேவாசுரர் முதலாயினோர் நடுங்கிச் சிவபெருமானிடத்து அபயம் அபயமென்று அடையுமிடத்து கிருபாமூர்த்தியாகிய சிவபெருமான் அக்கொடியவிஷத்தை லோகரக்ஷணார்த்தமாகத் தாமுண்டனர் என்றுசொல்ல, அதைக்கேட்டு மருண்டசிந்தையுள்ளவராய் என்சொன்னீர் என்சொன்னீர் எமது சிவபெருமான் விடமுண்டாரென்பது உண்மையோ சொல்லுங்களென்றுசொல்ல, அஃதுள்ளதேயென றவர்கள்சொல்ல, அப்போது பசுபதியார் மண்மேல் மயங்கிவிழுந்து பின்னருமெழுந்து கோபாவேசமுள்ளவராய் இத் தேவர்யாவருஞ் சத்துருக்களோ ஒருவர் விஷத்தையருந்தச்சொல்லினுல் அறிவில்லாதவருஞ் சமாதானிக்கார், கொடியவிஷத்தையுண் டிறந்தவ ரெவ்வளவுபே ரிவ்வுலகத்துண்டு, இதைத்திருப்பு மந்திரவாதிக ளெவரிருக்கின்றார், விஷம்பிறந்தகாலத்துச் சுற்றமாயுள்ளவ ரொருவருமில்லாராயினர். ஸ்வாமி சிவபெருமானே உம்மையன்றி யெமக்கும் வேறுதிக்கில்லை, ஆதலா லிந்தக்ஷணமே நீருண்டவிஷத்தை யுமிழ்ந்தருளவேண்டும், அவ்விஷமுண்டபோது உமாதேவியார் அருகிலிருந்ததில்லையோ, கங்காதேவியாரும் ஒத்திருந்ததுண்டோ, நந்திகேசுரருமக்குச் சுற்றத்தாரன்றோ; நானறிந்தேனாயி னுடனேதவிர்ப்பேன், இந்தநூலை யித்த

வழுடையார் படித்தன்றோ இக்கெடுதி கேட்கலாயிற்று. விநாய கர் கந்தரிருவரும் தமதுதந்தையாரிடத் தன்பில்லாதவரோ, வீ ரபத்திராதிகணங்களே நீங்களாவது அவ்விஷத்தைவாங்கி யெ றியாதிருந்தீர், இவ்விஷந் தலைகேறுமுன்னேதானே எவ்வித த்தாலாவது திரும்பும்விதத்தை என்னிடத் திரக்கத்தாலாவது செய்யுங்கள், இபபோதுநேரிட்ட தத்துநீங்கினல் எமதுசிவபெ ருமா னின்னும் வெகுகாலம் ஆயுளோடிருப்பர் என்று பலவாறு கூறி இவ்வாபத்தைநீக்குவா ரொருவருமில்லாமையால் நானினி யுயிரோடிரேன் சமுத்திரத்தில்விழுந் திறப்பேனென் றெழுந்து செல்ல, அப்போது தேவதேவராகிய சிவபெருமான் விருஷபா ரூடராகத் தேவர்கள் புஷ்பமாரிபொழிய சிவகணஙகளெல்லாம ஹரஹரவென்று ஸதோத்திரங்களபணண எழுந்தருளி ஓ பசுப தியே யுனக்காகவேண்டுவ தெதுவானலு மதனைககேளென்று சொல்ல, அபபோது பசுபதியார் சிவபெருமானது திருவடிகளி ல்வணங்கி ஸவாமி தமது கிருபாநோக்கத்தால் யாதொருசஞ்ச லமுமெனக்கில்லை, தமது கண்டத்துவிளங்கும் விஷத்தால்வரு ங்கெடுதிக்கே வருந்துகிறேன் அதை யுமிழ்ந்தீராயின் அபபோ தே என்சஞ்சலமொழிந்தது என்றுசொல்ல, அபபோது பரம சிவமும் மனமகிழ்ந்து பக்தனே, நீசொல்வதுசரியே இதையுமி ழ்ந்தா லப்போதே யுலகத்தை நாசம்பண்ணும், ஆகாயமு முடி வையடையும், இந்தவிஷ மெம்மிடத்தொத்திருப்பதன்றிக் கொ டுமைசெய்யாது, ஆதலால் நாணிறக்கமாட்டேன் நீயும் பயப்ப டவேண்டிய காரணமில்லையென்றுசொல்ல, ஸ்வாமி கண்டத்தி லிருக்கும்விஷம் உள்ளேசெல்லமாட்டாதென்று என்னனிச்சய ம், அப்படிபோனல் நானுமுடனே யிறந்துவிடுவேன் என்று பசுபதியார்சொல்ல, அவ்வாறு உனக்கு நம்பிக்கையில்லாதிருக்

மானால் எமது மடியிலிருந்து எப்போதும் பார்த்திருப்பாயென்று கடாக்ஷித்தனர். பசுபதிநாயனாரும் விஷமிறங்காதபடி மடியிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தனர். இப்படிக்கொத்த அன்புள்ள பசுபதிநாயனாரது பெருமையைச் சொல்லவேண்டுமானால் பரமசிவமே சொல்லவேண்டும் என்று சொல்லியருளினார்.

பசுபதிநாயனார் புராணவசன
முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

—*—

## கோட்கூச்சவ்வை புராணம்.

—*—

தாரணிபுகழுங்கோனா டென்னுமத்தலத்தில்வாழுஞ்
சீரணிசைவவேந்தர் சிவதேவசரணனென்னும்
பேரினாரவர்பயந்த பேதையர்கோட்கூச்சவ்வை
யேரிளம்பருவமின்னா ரிவர்செயலியம்பலுற்றாம். ௧

செந்நெறியினராமந்தச் சிவதேவ சரணனென்பார், நன்
னெறியாயதம்மூர் நம்பாபோகேசர்க்கான்பாற், றன்ன
ருநேயத்தாலே துகளறத்தினநிவேதித், தென்னையாளு
டையாய்காப்பாயென் றுநின்றிறைஞ்சியேத்தி. ௨

ஒழுகுமந்நாளிலோர்நாளும்பர்கோன்கருமமாகச், செழு
விதோராநகர்க்குச்செல்வார் சிறியதம்மகளைநோக்கி, வழு

விலெந்தம்பிராற்கிவ்வள்ளத்திலிந்தப்பாலைப், பழுதிலா
தமுதுசெய்யப் பண்ணுவாய்தினமும்பாவாய். ௩

அன்னையேயுனக்குநற்சிற் ருடையுமங்கைச்சங்குங்
கன்னமாரோலையும்பொற் கடகமுங்கனகப்பொட்டு
மின்னுமம்பாவையுநின் பிறற்குமோதிரமுங்கொண்டிங்
குன்னைவந்தணைவோனாளை யுண்மைநீயொன்றுமஞ்சேல்.

பாலைநம்பிராற்குககாயச்சிப் பரிவினன்னிவேதஞ்செ
ய்வாய், காலமொன்றிடவேயென்றுசென்றனர்கள்ளியா
ர்தா, மேலவப்படியோர்வள்ளத் தினிதுறப்பெய்துகை
க்கொண், டாலமுண்டருள்வாராகோயிலணைந்தவாமுன்
வைத்தன்பால். ரு

குடித்திபாலையவென்று கூறிமுன்குலவுநண்பால்
அடிக்கடிபுபசரிப்பா ராகவுமருந்தாராகி
நெடித்திருப்பதனைக்கண்டு நேசநன்னெஞ்சிறலே
யெடுத்திருகையிலேந்தி யேணையாவிப்பால்வேண்டாய்.

செல்லப்பால்காய்ந்ததின்றோ செழுமணமின்றோவா
றிற், றில்லையோபசிதானின்றோ திரிந்ததோகண்டாரொ
ன்றோ, வல்லதான்றபமென்றோ வறிவிலேன்றந்ததனெ
ன்றோ, சொல்லுற்றேடில்லையென்றோ தூவட்டில்விள
க்கேனென்றோ.

தண்ணெனவாறிற்றென்றோ தண்ணீர்கூடியபாலெ
ன்றோ, வண்ணியாக்களித்தேனென்றோ வரவுநான்றா
ழ்த்தேனென்றோ, வொண்ணெய்கூடியதில் லென்றோ
வோடிமுன்கொணர்ந்தேனென்றோ,வெண்ணியித்தனை
யும்வேண்டா வென்பதோபருகாதென்னீ. ௮

பாலுடன்சற்றுச்சோறு பழங்கலந்தில்லேனென்றோ
சாலவேயினியதேனற் சர்க்கரைபண்ணியாரங்
கோலவெம்மனையிலுண்டுகொணரவோகோவினெய்தா
ன், மேலுறுகுடத்தினுண்டுதருகவோவிருப்பேதன்றி. ௯

என்னையன்குருக்களுளை யெழின்மயேசுராநற்பூசை
நன்னெய்பாலுடனளிப்ப னுனையழைத்துப்போவன்
பின்னையேனன்னையப்பன் பெரிதவறேங்காய்தந்தார்
முன்னுனக்கிடுவெளிப்பான்முந்திநீயின்றுன்மற்றும். ௰

நாளையென்றந்தைதாயார் நற்பொன்மோதிரஞ்சிலம்பு
தோளுறுங்கானன்முத்தின் றாழ்வடந்துலங்கும்பாவை
நீளொளிசிற்றிற்றொட்டிற் றருவரின்னினைகளெல்லாங்
கேளுனக்களிப்பனிப்பால் குடாமுனமருந்துகென்று.

இன்னநான்றந்தபாலை யின்றுநீகுடியாயேலென்
றந்தைதாய்கேட்கிலென்னைச் சாம்படியடிப்பரந்தோ
வந்தவாறியாமுன்ன மருந்துவாயெனவணங்கி
நொந்தழும்வட்டிற்பாலை நோக்குறித்தனையுநோக்கும்,

திரும்பவுமிறைஞ்சியேங்குந் தேம்புநின் றழுந்திகைக்குங்
கரங்களைநெரித்திரங்குங் கானிலங்கோட்டுங்கண்ணீ
ரரும்பினைத்துடைக்குமிவ்வா றுருகுமிப்பேதையன்பை
விரும்பியங்கிருந்தபாலை விளைந்தானமுதுசெய்தான்.

இம்முறைகன்னியார்பா லிறைவற்குநிவேதஞ்செய்து
தம்மனமகிழுநாளிற் றயருந்தந்தையாருஞ்
செம்மையாங்கருமமுற்றிச் சென்றவூர்நின்றுமீள்வா
ரம்மையோர்பாகர்கோயி லருகுறவணையுமங்கண். ௰சு

கோதிலாக்கோட்கூச்சவ்வை கொடியிடைபாகர்க்கா
ன்பா, லாதரவுடனிவேதித் தங்கையின்வெறுங்கிண்ண
ங்கொண், டேதியங்கொளச்செல்வாளை யுன்னிநற்றந்தை
யார்கண், டதென்னதம்பிரான்பா லென்செய்தாய் பா
வியென்று. ௰ரு

எங்குநீசென்றாய்வட்டிற் கினியபாலேதுமின்றி
யங்கையிற்றருவதேதங் கார்க்குணவளித்தாயந்தோ
மங்குறக்கவிழ்த்திட்டாயோ மருவித்தானருந்தியப்பாற்
பங்கமாக்கினையோவென்னே பாவிநீபகர்வாயென்ன.

இல்லைநீசொன்னவாறே யிந்தவள்ளம்விளக்கி, நல்ல
பானிறைத்துச்சென்று நம்பன்முன் வைத்திறைஞ்சிச்,
சொல்லினன்குடிப்பாயென்று தொழுதுநின்றழுதேனு

ண்டான், வல்லிநீசெல்கென்றென்கை வட்டிலேததந்தா
ன்வந்தேன். ௰௭

என்றுகன்னிகையாசொல்லச் சிவதேவரொழுந்துவெம்
பின்றுசாதித்தல்பாரீர் நீலிபோலென்னவையா [பி
மன்றுளார்பாலருந்தன் மாயமீதறிவோமென்று
பின்றைநாட்டம்மடத்து ளமுதையவ்வட்டிற்பெய்து.

அரிவையாகோட்கூசசவ்வையாகையிறகொடுத்துவா
வென்றெரிபுறுசாதந்தாமுனசெனறிருநதியிஙகழுதுசெ
ய்வி, யுரியசினபத்திகாண்பனெனறலுமுவந்துமுன்போ
ற், பரிவினுற்பாலைவைத்துப்பாவையாருபசரிப்பார். ௰௯

பெண்ணிளம்பேதையாதம பெரியநற்பத்திநேயந்,
திண்ணிமையுலகாகாணத் தெரிவிப்பான் செங்கணேற்
றூர், தண்ணிறை பாலருந்தாத் தன்மைய ராயிருந்தார்,
கண்ணிணைப்பிசைந்துபோதக கலுழ்ந்துகன்னிகையார்
சொல்வார். ௨௰

இன்றுநீபாலருந்தேனென்பதென்னெனவருந்தி, யொ
னறியனென்னலிற்பா லுனக்கையசெரித்ததின்றே, வன்
றியிங்கென்னைக்கொல்ல வகத்தினிற் குறித்தாய்கொல்
லோ, வென்றலுஞ் சிவதேவைய ரொரியென வெகுண்
டெழுந்து. ௨௧

தேவியோர்பாகன்பாலைச் சிந்தித்துத்தீண்டார்ன்பாரான்
பாவிநீயெம்பிரான்றன் பருகினனெனப்பகர்ந்தா
யாவிநீயிழந்தாய்சென்னி யரிவனென்றடார்ந்துசெல்லக்
காவியேர்விழியாளஞ்சிக் கதறியேயபயமென்று. ௨௨

ஐயநின்னபயனானென் றத்தர்பாலலறியோடுஞ்
செய்யமான்சிகழிபற்றிச் சிவதேவரீர்க்கும்போது
தையலாடந்தபாலைத் தம்பிரானமுதுசெய்தா
ருய்யநீமதுமார்வத் துறுமினென்றுவந்துவைத்தார்.

இச்செயல்கண்டருண்டு சிவதேவரிளகுநெஞ்சா, னிச்ச
யாச்சரியமெய்தி நின்றனர் நிமலர்மார்பின், கொச்சை
மான்சிகழிதோன்றுங் குறியிறைற்குவலயத்தோர், நச்சி
யேகொப்பிலிங்கமெனவின்றுநவிலாநிற்பார். ௨௪

கோட்கூச்சவ்வை புராணம்

முற்றிற்று.

---

ஆகதிருவிருத்தம் - ௱எ௫.

உ

திருச்சிற்றம்பலம்.

# கோட்கூச்சவ்வை புராண வசனம்.

திருக்கோளூரென்னுந் திவ்யஸ்தலத்திலிருந்த சிவதேவசரணரென்பவரது திருமகளார் கோட்கூச்சவ்வையென்னும் நாமதேயமுள்ளவர்.

இவர்தந்தையார் நியமமாகத் தினமும் அவ்வூரிற் போகேசரென்றுசொல்லுஞ் சிவபெருமானுக்குப பசுவின்பால்கொண்டு நிவேதித்துவருவார். சிவகைங்கரியநிமித்தம ஒரூருக்குச்செல்லக் கருதி தமதுமகளார் பேதைபபருவமுள்ள கோட்கூச்சவ்வையாரைநோக்கி தினமும் நைவேத்தியஞ் செய்வதுபோல பசுவிலுண்டாகும் பாலமுதைச் சிவபெருமானுக்குத் தவறாமல் நிவேதித்துவருவாய் நினதுதாயும் யானும் அருகிலிருக்கு மூர்க்குச்சென்று வரும்போது உனக்குச் சிற்றாடை வளையல் காதுக்குப்பொன்னோலை கடகம் நெற்றிப்பொட்டு விளையாட மரப்பாவைகள் கைக்குமோதிரம் இவைவாங்கிக்கொண்டு வருவோம் பயப்படாதிருப்பாயென்று சொல்லிப் போயினர்.

கோட்கூச்சவையாரு மப்படியே நியமந்தவறாமல் பாலைக் கறப்பித்துக் காய்ச்சி ஒருபாத்திரத்தி லெடுத்துச்சென்று சிவபெருமானது திருமுன்பாகக் கொண்டுவைத்து ஸ்வாமி போகேசரே இப்பாலை நீருண்ணக்கடவீரென் றன்போடநேக வுபசாரங்களைச்சொல்லி நெடுநாழிகையாயுஞ் சிவபெருமா னஃதருந்தாமை கண்டு அப்பாலை இரண்டுகையிலுமெடுத்து முகத்தளவா யேந்திக்கொண்டு ஸ்வாமி இப்பாலை யேன் நீரருந்தா

திருக்கின்றீர் இப்பால் செவ்விதாகக்காய்ந்து பக்குவப்படவில்
லையோ செழிய வாசமில்லையோ சூடாகவிருக்கின்றதோ உம
க்குப்பசியில்லையோ முறிந்துவிட்டதோ திருஷ்டிதோஷப்பட்
டதென்று நினைக்கிறீரோ குறைவாகவிருக்கிறதென்றோ விதி
விலக்கறியாத வென்னாற் கொணர்ந்துவரப்பட்ட தென்றோ பாலி
லேடில்லாதிருக்கின்றதென்றோ இப்பாத்திரம் விளக்காததென்
று நினைத்தீரோ மிகவுமாறித் தணணென்றிருக்கதோ தண்ணீர்
கலந்தபாலென்றோ என்றோழிகளுக்குக்கொடுத்தமிச்சமென்றை
யமோ அல்லது நான் வரதாமசப்பட்டதென்றோ செய்யுஞ்சே
ர்த்துகொண்டுவரவில்லையென்றோ ஓடிக்கொணர்ந்தே னென
றோ இவ்வாறுநினைத்து வேண்டாதிருக்கின்றீரோ, அல்லது அ
ப்பாலுடன் சிறிது சோறும் பழமுங் கலக்கவில்லையென்றோ இ
ன்னமும் இனியதேன் சருக்கரை பண்ணியாரவகைகள் எம
து வீட்டில் நிரம்ப விருக்கின்றது பசுவினது செய்யுங்குடங்
களி னிறைந்திருக்கின்றது எமது பிதாவின்பட்டத்தில் மஹேச
வர பூஜை நடக்கப்போகிறது அதற்குரியவையு மழைத்துக்கொ
ண்டுபோவேன் எனது தாய் தந்தைக ளூர்க்குப்போகும்போது
அவல தேங்கா யிரண்டுமெனக்குத் தந்துபோயினர். இப்பாலை
யிப்போது முன்னேயுண்டால் பின் அவற்றையுந்தருவேன் இ
னி யென்றாய்தந்தையர் கொண்டுவரப்போகிற முத்துமாலை
மோதிரங் கடகம் முதலியவாபரணங்களெல்லா முமக்குச்சிறிது
தருவேன் இப்பால் கெடாதமுன்னமே அருந்தல்வேண்டும் நீ
ரருந்தாதுவிட்டால் எனது தாய்தந்தைகளென்னைப்புடைப்பர்
அவர் வரவுக்குமுன் நீரிப்பாலை யருந்துவீர் என்று வணங்கி
மிகவும் வருத்தமுற்று அழுது பாலையும்பார்த்துச் சிவபெரு
மானது முகத்தையும்பார்த்துத் தன்னையும்பார்த்து மீட்டும்

வணங்கி யேங்கித் தேம்பித்திகைத்துக் கைகளைநெரித்து இரங்குவார் கண்ணீரையுர்துடைப்பார் இவ்வாறானகோலத்துட னிவாதன்மையைக்கண்ட சிவபெருமான் அப்பாலை யமுதுசெய்தருளினார். இதைககண்ட கோட்கூச்சவ்வையாரும் மனமகிழ்ந்து திரும்பிச் செல்லுங்காலத்து ஊர்க்குச்சென்ற தாய் தந்தையரிருவருங் கோயிலுககருகேவர அவ்விடத்தே வெறும்வள்ளத்தைக் கையில்வைத்துககொண்டிருந்த தமதுமகளைக்கணடு தாயே பாலையன்றி வள்ளத்தோடுவருங் காரணமென்னென்றுகேட்க சிவபெருமா னுண்டனரென்று கோட்கூச்சவையாருஞ்சொல்லத் தந்தையாரும் பலவாறுகோபித்து மனம்வருந்தி வீட்டிற்சென்றிருந்து மறுநாளுஞ் சிவபெருமானுக்குச் செலுத்தும்பாலைத் தமது மகளாரிடத்தளிப்பித் தாமும் மறைவிற்சென்றிருக்க மகளாருஞ் சுவாமியினிடத்துவைத்து நேற்றையதினம்போலவே வருந்த இதெல்லாங்கேட்டிருந்த தந்தையாரும் இது முடியாதகாரியமென்று கோபித்து விரைந்துசென் றுயிர்த்தண்டமுஞ் செய்யககருத அப்போது மகளாருங் கூக்குரலிட்டு அலறிச் சிவபெருமானிடத்துச் செல்ல, தந்தையாருங் கூந்தலைப்பற்றி யிழுககச் சிவபெருமானு மத்தருணத் தபபாலையெடுத்துண்டு பெணணே நீ பயபபடவேணடுவதுமில்லை உன் றாய்தந்தைகளிடத்துச் செல்லவேண்டியதுமில்லை நமது மார்பத்திலே யெப்போது மிருககக்கடவாயென் றருளிச்செய்தனர்.

இதைக்கண்ட சிவதேவசரணரும் மனமகிழ்ந் தாச்சரியமடைந்திருந்தனா. இக்காரணத்தா லிவ்வுலகத்துள்ளவரின்னமும் அவ்விலிங்கத்தைக் கொபபிலிங்கமென்று சொல்வர் என்று சென்னவசவதேவர்க்கு ஸ்ரீபசவதேவரருளிச்செய்தனர்.

கோட்கூச்சவ்வைபுராணவசன முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

—*—

## அம்மவை யென்னும்
## பெச்சமாதேவியார் புராணம்.

அண்ணலிடஞ்சேர்கோட்கூச் சவ்வையாரன்றிமற்று
மெண்ணிலிவரொருமடவா ரேழையன்பினின்மிக்கார்
கண்ணுதலையிட் டலிங்கக் காதலின்றலருச்சிக்கும்
பெண்ணினல்லாரிவர்திருப்பேர்பெச்சமகாதேவியார். க

ஏழைமையாற்றம்பிராற் கெழின்மனையார்மக்கண்மற்று
ங், தாழடிமைத் திறம்படைத்துந் தாயிலாத் தன்மைய
னென், றூழுமனத்துயரிஞ லாரிருந்தெநன்னையின்றி,
வாழுமக்கள்சுகமென்ன வெனநினைந்துமயங்குவார். உ

பெண்டகையாம்பேதைசோ பெச்சமாதேவியர்க்கு, ம
ண்டருநற்சிவநேச மனத்தகத்துவளர்தலா, லண்டர்பி
ரான்றிருவருளா லாருயிர்க்காரியமாகக், கொண்டகொ
ண்டதிருக்கோலங் குறித்திரங்கிக்கூறுவார். ௩

அன்னையின்றிவளர்ந்ததெவ்வா றையாநீபிறந்ததற்பி
னன்னையுன்னையிளங்குழவி யாகவைத்துமரித்தாளோ
வன்னையிருந்தாற்பொல்லா வதனுடுக்குமாடலெவ [ன்.
னன்னையிருந்தாலெலும்பாபரணனெனுமவத்தொனியே

அன்னையிருந்தாற்பாம்புன் னுகமுறப்பொருந்தாளே
யன்னையிருந்தாற்சுடுகாட் டாடிவரப்பாராளே
யன்னையிருந்தாற்பேய்க்கூட் டத்திலுறவிசையாளே
யன்னையிருந்தாலால மருந்தாமலகற்றுவளே. ௫

தாயிருந்தாற்றுயிலியேன் சத்தநான்கேளேனே
தாயிருந்தாற்சடைகட்டித் தவம்புகுதப் பொருந்தாளே
தாயிருந்தாற்பிச்சையன்னந் தனையருந்தவொட்டாளே
தாயிருந்தால்வேடனெச்சிற்றசையுணுங்காற்றவிப்பாளே

தாயுளதேலுடம்பெல்லாஞ் சாம்பரேனிறைந்திருக்குந்
தாய்முலைப்பால்வெண்ணெயெண்ணெய் தனையருந்திக்
குளிப்பாட்டித்,தாய்வளவாதிவ்வாறு தான்வளர்ந்ததிரு
மேனி,தாயுளதேலெவ்வாறுதருக்கிவளர்ந்தோங்குமோ.

வதுவையுடனேன்புநன்னாள் வந்தக்காணீராட்டிப்
புதியமஞ்சட் காப்பணிந்து புத்தாடை புனைந்துடுத்தி
விதமுறுநன் பணிபூட்டி விழியாரமிகப்பார்த்திங்
கிதமுறுநல்லமுதூட் டி யெடுத்தணைப்பாரில்லையே. ௮

என்செய்கோநாமேனு மினிததாயாயிருப்பமென
மின்செய்புநுண்ணிடையார் மிகவிரும்பினைத்தளவின்
முன்செய்யவடிவொழிந்து மோகமகவுருவானுன்
றன்செய்யநேயாமனந் தனக்கிசைந்ததம்பிரான். ௯

ஆதலினற்பெச்சமா தேவியாரம்மனையாய
மாதனங்கண்மிகச்சுரந்து மனமகிழ்ந்தேயமுதூட்டிப்
பேதமறத்தவம்பண்ணிப் பெற்றபிள்ளையெனவுவந்து
காதலினற்காணுக்கண் கண்டார்போற்களிகூர்ந்து. ம

இரண்டுருவினும்பரனை யிருத்தியயனறியாத, சிரந்தனி
லெண்ணெயைத்தேய்த்துச்செய்யமூக்கினைநீவிப், பரந்
தகண்ணிலெண்ணெய்சற்றும்படாதவகைபார்த்தன் பா
ற், சுரந்தமுலைமேலொழுகத் தூயசெவித்துணையுருவி.

உரமுதரங்களிற்றேய்த்தேயொண்சிரமெல்லெனவொத
திக், கரமொடுமாலறியாதகாலிரண்டுங்கரத்துருவி, யர
வணிநீங்கியவுடல மானதெலாந்தைவந்து, பொருநம
னையுதைத்தவுள்ளம் புயப்பதமெல்லெனவருடி. மஉ

எண்ணெய்விடுந்திரவியங்க ளிட்டிதத்திற்றேயத்து
வெந்நீர், தண்ணெனுநீர்க்கலந்துகரந் தான்பொறுக்கத்
தொட்டுப்பார்த், தண்ணறிருமுடிமிசையி னள்ளியள்
ளித்தப்பியபி, னுண்ணெகிழன்பினினீர்வாய் மூக்குரு
துகந்தாட்டி. மங

அரிசனந்தந்துளைத்தெழிலா ராகமெலாந்தரித்துநீர்
பெரியநண்பாலாட்டியபின் பெருவிழிகண்மூக்குந்தி
யுரிமையினலூதியுகி ருறுமழுக்குமேல்வாங்கி
யரியகண்ணேநணையாம லந்நீர்சூழ்வரவிறைதடே. மச

நிலத்துமிந்துவிரற்றேய்த்து நெற்றியிலொண்டிலகமிட்
டு, நலத்தவுலைத்தலைத்துவெந்த நன்னீறுநுதற்சாத்தி, வ
லக்கைகொடுசிரங்கழுத்துவளையாமல்வயிறுரத்,தல
த்திலணைத்திருசுடராந் தண்விழிக்கஞ்சனமெழுதி. ௰௫

திருநுதன்மேல்விழியதெனச் செய்பசுட்டிசேர்த்தார்த்
விரலினிதுமோதிரங்கள் மிகச்சாத்திவிருப்பினு [து
லணாவடங்காப்பணிந்துபல கறைவீக்கியாராமொன்
றிருமறைகேட்பார்செவிக ளின்பமுறத்தாலாட்டி. ௰௬

அருத்திமுலையெண்ணெயமுக் கறக்கழுவிவிழுங்கவி
ட்டுச், சிரித்தருளமுகமசைத்துச் சிரிப்பெழுப்பிநகைத்
ததற்பின், றரிப்பருமன்பினின்மகிழ்ந்து தாருமுத்தமெ
னக்கேட்டங், கிருக்கொடுநான்மறையிருக்கு மெழிற்றி
ருவாய்முத்தமிட்டே. ௰௭

மடித்தலத்துநீங்காமல் வைத்திருந்தென் வாழ்முத
லென், றடிக்கமலங்களைக்காவி யனவிழியிலணைத்தேந்
தி, முடித்தலத்துஞ்சேர்த்தெனது முழுமுதலேயென
த்தழுவிப், பிடித்தநண்பாற்பிறவாத பிள்ளைவளர்த்திடு
ம்போதின். ௰௮

பெண்ணணங்காம்பெச்சமா தேவியார்பேதையன்பி
ன், றிண்ணிமையை யுலகோர்க்குத் தெரிவிக்கத்திரிவி
ழியார், வெண்ணெயுணார்பால்பருகார் மெய்த்தாயா மு

லையருந்தார், கண்ணயரார்பிணிகொண்டு கலங்குமகப்
போலிருந்தார். ௰௬

அச்சமுற்றுப்பெச்சமா தேவியாமம்மனையா, ரிச்செய
லென்பாவியென யாவர்கண்ணேறெய்திற்றே, பச்சை
வெண்ணெய் பால்செரியாப் பான்மையோ வெனப்பசி
யாற், றுச்சவனக்கறிக்குற்றஞ் சூழ்ந்ததோதோன்றலே.

முன்னேவினையென்னைவந்து மூடிற்றேகெட்டேனே
யுன்னையிந்தநோய்சூழ வுற்றுப்பார்த்திருக்கவோ
வென்னசெய்கேனையனே யென்றுபெரிதுயிர்த்தேங்கிப்
பின்னயர்ந்துமிகத்தளர்ந்துபிள்ளையைப்பார்த்தரற்றியே

உலையுமனத்தாலுதரந்தட்டிப்பார்த்தோவென்று, முலை
யருந்தாதோவென்றுமோகத்தாற்கொடுத்தழுதும், தலை
கவிழ்ந்ததோவென்றுந் தழுவியெடுத்துறவயர்ந்து, நிலை
யெனக்காரினியென்று நின்றுமுகத் தறைந்தறைந்தும்.

இந்தவெந்நோய்முற்றிவிட்டா லென்செயுமோ விதற்கு
முன, மந்தவெனதாவியினை மாய்ப்பனெனமனந்துணி
ந்து, கந்தரத்திற்படைவைத்துக் கனன்றரியக்கண்ணுத
லா, ரந்தவுருவேபழைய வாகமாய்முன்னின்றே. ௨௩

மெய்ச்சினனுனினையம்ம வேண்டியகேளளிப்பமெனப்
பெச்சமாதேவியார் பேசுவார்பெருமானி

னச்சிலுற்றநோயகன்ற வவ்வளவேபோதுமற்றே
ரிச்சையிலேநீசுகமேயிருக்கவெனக்கிச்சையென்றாள் ௨௪

நம்மவைநீயிருத்தலினு னம்மையேனேய்சேரு
மிம்மையினிலுனக்குநித்த மினிதளித்தேமெம்மைநீ
செம்மையினல்வளர்த்தெடுத்த செய்தியினனீநமக்கு
மம்மவைகாணெனவுரைத்தங்கருஞ்சோதியாயினரா ௨௫

பெச்சமாதேவியார புராணம்

முற்றிறறு.

ஆகதிருவிருத்தம - ௬00.

---

உ

திருசசிறறமபலம.

பெசசமாதேவியார புராண

வசனம்.

கோட்கூச்சவையாரன்றிப் பெண்ணுவாரில் பெச்சமாதே வியாரென்பவரொருவர் இஷ்டலிங்க பூஜையைச்செய்பவர்.

சிவபெருமானுக்கு அடிமைகளும் மக்களும் மனைவியருமெல்லாமிருந்தும தாயில்லாத குலறையுடையவரென்று வருந்துநெஞ்சினராய் எவரிருந்தும் பயனென்ன தாயில்லாதபோது சுகமில்லாததாகவேண்டும் என்று மனத்திலன்பு மிகுந்து பக்தானுக்ரஹ ரூபமாய் அவர்கொண்ட திருமேனியைக்குறித்து ஸ்வாமி நீர் தாயில்லாமலெவ்வாறு வளர்ந்தீர் அல்லது நீர் பிறந்

தவுடனே தாயும விட் டிறந்தனளோ தாயொருத்தி யிருந்தா
ல் தோலாடை தரிக்கவேண்டுவதென்ன எலும்பாபரணந் தரிக்
கவேண்டுவதென்ன உன்மேனியெல்லாம் பாம்புகள் சூழ்ந்தி
ருக்கச் சகிப்பளோ சுடுகாட்டிற்சென்று நிருத்தமிட வொப்
புவளோ பேய்க்கூட்டத்திற் செல்லவிடுவளோ விஷமுண்டகா
லத்துப பார்த்திருப்பளோ தாயிலியென்னும் பேருமக்கு வரு
வானேன் பிச்சையெடுத்துண்ணுறுவானேன் வேடனெச்சி லுண்ண
ச்சகித்திருக்கமாட்டாள் தலைமயிர் சடையாகவுந் தவசுகோல
ங்கொள்ளவும் பார்த்திருப்பளோ திருமேனிமுழுதுஞ் சாம்ப
லாக விருக்கவேண்டிய காரணமென்ன தாயொருத்தியிருந்து
வளர்க்காமலே யுமதுதிருமேனி யிவ்வளவழகாக விருக்குமபோ
து தாயினது ரக்ஷணத்திலிருந்து வளர்வீராயின எவ்வளவு
வொளியுடையவரா யிருப்பீரோ, கல்யாணம் நோன்புமுதலிய
சுபதினங்கள் வருங்காலத்து நீராட்டி மஞ்சட்காப்புசாத்திப் பு
தியவாடைதரித்து ஆபரணங்களையும்பூட்டிப பார்த்து மகிழ்ந்
து அமுதூட்டி யெடுத்தணைப்பவ ரொருவருமில்லையே இதற்
கு என்னசெய்வோம், அல்லது இத்தருணம் நாமாவது தாயா
கவிருந் திச்செயல்களைச்செய்வோமா வென்று பெச்சவையா
மனமுருகி நினைத்தமாத்திரத்தில் சர்வகாருண்யராகிய சிவபெ
ருமான் ஒருகுழந்தைத் திருக்கோலங்கொண்டு கிடந்துவாய்வி
ட்டழுதனர். அதற்கேற்பப் பெச்சவையார்க்குந் தாய்க்குமு
லைப்பால் சுரப்பதுபோலச் சுரந்து பெருகி வழிந்தது அக்குழந்
தையைப் பெச்சவையுங் கண்ணில்லாதவர் கண்பெற்றதுபோ
ல மகிழ்ந்தெடுத்துப் பஞ்சகவ்யத்தையூட்டித் தமது இரண்டு
தொடைகளினிடமாகக்கிடத்திப் பிரமதேவனுமறியாத வக்குழந்
தையின் சிரத்தி லெண்ணெய்க்காப்புச்சாத்தி நாசியையுந் தட

விக் கண்களி லெண்ணெய்படாதவண்ணஞ் செவிகளையுமுருவி மார்பிலும் வயிற்றிலுந்தேய்த்துக் கைகளையுந் திருமாலுமறியாத கால்களையுமுருவிப் பின் திருமேனிமுழுது மெண்ணெய்சாத்தி எமனையுதைத்தவுள்ளங்காலையும் மிருதுவாகத்தடவி எண்ணெய்போக்குந் திரவியங்களாற்றேய்த்துக் கைபொறுக்கத்தக்கவெந்நீர்கொண்டு குளிப்பாட்டிப் பின் நலங்குப்பொடிகளா லலங்கரித்ததனையுங்கழுவிப பின் திருவொற்றுடையாலொற்றிக காது நாசிமுதலிய ஸ்தானங்களில் நீரறவூதிக கண்ணேறு வாராமல் நீரால் வலமாகச்சுழவிறைத்து நிலத்திற்றேய்த்த மண்பொட்டிமிட்டுத் திருநீறுசாத்திக் கண்களுக்கு மையெழுதி நெற்றியிற் சுட்டியென்னு மணியையுந் தொங்கவிட்டு மற்றைய வாபரணங்களையுந்தரித்து முலையமுதூண்பித்துத் தொட்டிலி லிட்டுத் தாலாட்டி முத்தமிட்டு மடியில்வைத்து இவ்வாறு வளர்க்கும போது சிவபெருமான் இப்பெச்சலையாரது பேரன்பை உலகத்து வெளிப்படுத்துங் கருத்துடையவராய்ப் பால் வெண்ணெய் முதலியன வருந்தாமலுந் தூங்காமலு மழுதவண்ணமாகப் பிணிகொண்ட தொரு குழந்தைபோற் கோலங்காட்டினர்.

இதுகண்ட பெச்சமாதேவியாரும் நடுநடுங்கிப் பாவியேனுடைய தீவினை யிவ்வாறு மூண்டதென்று சகல துன்பங்களையு மடைந்து இக்குழந்தை யினிப்பிழையாது நானும் அதற்குமுன்னேதானே பிராணனைவிடுவேன் என்று ஒரு கத்தியையெடுத்துத் தமது கண்டத்தில் வைத்தரியுஞ் சமயத்தில் சிவபெருமான் முன்போலவே திருக்கோலங் கொண்டுநின்று பெச்சலையே உன தன்பை மிகவும் மெச்சினோமாதலால் நீ விரும்பி யவற்றைக் கேளென் றருள்செய்ய, பெச்சமாதேவியாரும்

பெச்சமாதேவியார் புராணவசனம்.

ஸ்வாமி உமது குழந்தைக் கோலத்துக்கண்ட நோய்போனதே யெனக்குப் போதும் உமது திருமேனி சுகமாயிருக்கவேண்டும் என்றுசொல்லச் சிவனும் நீ நமக்குத் தாயானபோதே எமக்கொரு பிணியும்வாராது உனக்குமதனு லம்மனையென்றுபெயருண் டென்று சொல்லிச் சோதிவடிவாயினர்.

பெச்சமாதேவியார் புராண வசன

முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

---

## கலியநாயனார் புராணம்.

---

மருவில்செய்தியேழையன்பர் மற்றுநன்றொருத்தனு
ரறையுமஞ்செழுத்தலா லணைந்திலாதநாவினர்
பிறைமுடித்தநித்தனிச்சை பெருகுகின்றநெறியதா
முறைமைகண்டுகலியனென்று மொழியுநாமமுற்றுளார்.

நல்லசீலர்துய்யசைவர் கலியர்மற்றோர்நற்பதி
செல்லவேணுமென்றெழுந்து செல்லுகின்றவதியிலே
வல்லிபாகர்கோயிலின்றி மாவனத்துவைகல்கண்
டொல்லையோடிநீடுதுக்க முற்றநெஞ்சராயரோ. உ

அணிந்துமுன் பணிந்தெழுந் தணைத்துநெஞ்சகங்கரைந்
திணைந்தநேயராயுயிர்த் திரண்டுகண்களொழுகுநீர்
தணிந்துவீழவேதளர்ந்து சங்கையற்றதுன்பராய்த்
துணிந்துகைகுவித்திரங்கி நின்றருண்டுசொல்லுவார்.௩

தக்கன்வேள்விசெற்றபோது தம்முனைந்துதேவர்தா
மிக்ககுற்றமொன்றுசெய்யின் மேவியார்விலக்குவா
ரிக்கன்மேனிகட்டதற்கவ் விக்கனென்றுசெய்யினு
னக்கனென்னசெய்குவன்சொலையனேயெனத்தொழா.

வேதனஞ்சிரந்துணித்த வெம்பகைக்கவன்சீருடர்ந்
தேதமொன்றுசெய்யினு னிறப்பன்மெய்யதெம்பிரான்
பாதமொனறினுலுதைக்க வன்றலந்தபகையமன்
றீதுசெய்கிலென்செய்கே னெனத்தியங்குசித்தராய். ௫

மிகைத்தநாரசிங்கன்மேனி வீயகீபிளந்தவப்
பகைக்கவன்செறுத்துடன்று பற்றிலென்னசெய்குவே
னகைத்துமுப்புரங்கள்சுட்ட னடியந்தவழியுளோ
ருகைத்துவந்தடர்க்கிலென்ன வுத்தரங்களோதுவேன்.

அந்தகாசுரற்பிளந்த வப்பகைக்கவ்வழியுளோர்
வந்தடர்க்கிலவரையான்வதைக்கவெண்ணில்வல்லனோ
முந்துசக்கரத்தினன் முடிந்தவச்சலந்தர
னந்தவர்க்கர்வந்துறுக்கி லையவென்னசெய்குவேன். எ

வலியமுன்னுரித்தவந்த வாரணப்பழிக்குமப்
புலியிறும்பழிக்குமிப் புனத்துயானைபுலிகணீ
மெலியவொன்று செய்யின்யார் விலக்குவார்விளைந்தெ
னக், கலியர்நைந்திரங்கியே கலுழ்ந்துநின்றுகழறுவார்.

நம்மினுஞ்சிறுத்தமானி டர்க்குநம்பதத்தினுஞ்
செம்மைசேர்பதங்களைச் சிவன்கொடுப்பதேனெனத்
தம்முளேவெறுத்திருக்கு மண்டர்நீதனித்துநின்
வெம்மைசெய்வினையவென்னசெய்வனென்றுவிம்மியே

மடப்பமாமலைப்பிறந்த மயிலிருத்தல்கண்டிலேன்
றிடத்துமாதவத்தர்பூசை செய்தசெய்திகாண்கிலே
னெடுத்தொருத்தரொன்சிரத் திருத்திலிக்கணத்திலே
யடுத்தவெங்களூரிலால யஞ்சமைத்துமாற்றுகேன். ௰

நினைத்திடாதவகையெலா நினைக்கிலாவதென்னெனா
வினைப்பகைத்திறங்கள்வல்ல மெய்ச்சகாயரின்றியே
யெனைத்துமொன்றுமெண்ணிடா திருக்குநந்தமீசனே
முனைத்தனத்தனுகுமென்றுகலியர்நின்றுமுன்னியேமிக

ஆடுமையர்தம்மைவிட் டகன்றிடாதிருந்துதந்
தேடுமாதனங்களுஞ் செழுமணித்திறங்களு
மாடுகன்றுமடிமையான வகையுமற்றுமுளவெலாங்
கூடுமன்பிலிட்டரற்கொ ராலயங்குயிற்றுவார். ௰௨

ஆனகொற்பகமொடத்த மண்டபமமைத்தபின்
வானமெட்டுகோபுர மதிற்புறத்திலகழ்சமைத்
தீனமற்றவாயில்கட் கிருங்கபாடமிட்டரோ
சேனைசுற்றுமுத்திகைச்சிதைப்புறாதவகையெலாம். ௰௩

செய்தபின்புகோயிலுட் செழுஞ்சலங்கொள்கூவல்கண்
டையர்துய்யவழ்திலுக் களக்குநெல்லுழுட்செறித்
துய்யநல்லபூமரங்க ளொத்தவன்பின்வைத்தரன்
பொய்யலாததுய்யபூசை நாடொறும்புரிந்துளார். ௰௪

தம்முடன்றமக்கிதத்த தன்மையாரைநேடியே
யெம்முடன்சலிப்பதற் றிபங்கவல்லபேர்களாய்
வம்மினென்றுநம்மையாளும் வள்ளலார்மதிற்புறஞ்
செம்மினின்றிராப்பகற் சினேகமிக்கசித்தராய். ௰௫

மதிற்புறங்கடந்துசத்து ருக்கடம்மதத்திலுங்
கதத்திலுங்கடக்கொணாத காவலாளராகியே
குதிப்பர்நிற்பரார்ப்பரிப்பர் கொக்கரிப்பர்தம்மனத்
திதத்தவன்பினித்திற மியற்றுநாள்கள்சில்செலா. ௰௬

அளவிலாததனமெலா மமர்ந்திடுசிமந்தர்கட்
குளபதாதிகட்குநாளு முதவலாலுறும்பொருள்
சிலவதாகிமுன்னுளோர் சிதைந்துபோயுமத்தர்தம்
வளநிலாவுகோயில்காவல் வழுவிலாதவகையராய். ௰௭

வே று.

தொனிமிகுத்தமணிகளைசூழக்கட்டிச் சுரிகையொ ருகரத்தெடுத்துச் சோதிப்பந்தம், புனிதமுறுகரத்தேந் திப் பிறவிவேங்கைப் புலிவேட்டையாடுவார் போலக் கொண்டே, நனிமணியிலேசைகணிரின் கணினதென் ன நற்கரத்தின்சுரிகைகலின் கலினதென்ன, வனுதின முங்கலியனாரிரவதெல்லா மத்தார்திருவாலயத்துளன்பா ற்காப்பார். ௰அ

பலரிருந்துகாப்பதெனவொருவர்தாமே பலகாலுமா ள்வாரியேறிப்பார்ப்பார், சிலதினமிப்படிசெல்லக் கலிய னார்தாந் திருக்கரத்திற்பந்தத்துக்கெண்ணெய்கொள்ள, நலபொருளொன்றின்றியணி யாடையெல்லா நற்பொரு ளுக்கீந்ததுவுஞ்செல்லபின்பங், குலரும்விறகினைப்பொ றுக்கிச்சுளுந்தாச்சுட்டவ் வொளியினாற்சிலவிரவங்குவந் துகாத்தார். ௰கூ

ஆலயத்தையாமகன்றிந் தனத்துக்கேகி லையர்க்குத் தனியெனத்தாமனையிற்சாத்துஞ், சேலையுடன்றலைவாச ங்கொளுத்திநோக்கிச் சென்றதற்பின்னென்றுமிலாச்செய லராகி, வேலைவிடமுண்டபிரான்கோயில்காக்கும்விருப் பினாற்றலைமயிரைமேன்முடிந்து, கோலமுறுப்பந்தமெ னக்கொளுத்தியீசன் கோயில்வலம்வந்தன்பாற்குலவும் போதில். உ௰

வெந்துமயிரங்கிகபாலத்தைமேவி விரவுறவும்விமலர்
பத்திவிலங்காராகிச், சிந்தைமகிழ்ந்தாலிக்குங்கலியனார்த
ஞ் செய்யதுய்யமனத்துறுதிச்செயலேயெல்லாங், கந்தவி
தழிச்சடையார்திருவுளத்தாற்கண்டுலகர்க்கிவர்தன்மை
காட்ட வேண்டி, யுந்துமழவிடையின்மேலுமையுந்தாமு
முருகுசிவகலியர்முனமுவந்துபோந்து. ௨௧

வேறு.

சடையணி கங்கையாளுநஞ் சந்திரத்துண்டுங் கண்ட
த், தடைவுறுநீலவொலத் தழகுடன்மழுமான்கையும், பு
டை பெயர்கருணைநோக்கும் பொருந்துவார்தம்மேற்பே
ரன், புடையராங் கலியர்தம்மை யுனக்குவேண்டியதே
தென்றார். ௨௨

என்றலும்பணிந்தெழுந்தங் கெனக்குவேண்டியதாமி
ன்ப, மொன்றுவிண்ணப்பஞ்செய்கே னுறுமடித்தேவ
ர்போலத், துன்றுமிவ்வனத்திராமற் றூயநின்கயிலாய
த்தே, யின்றிவண்கணங்களோடுஞ் செல்லுதும்வாவா
வென்றார். ௨௩

உருகினின்றிவ்விண்ணப்ப முரைக்குங்கலியனார்மு
னரியபூவிமானந்தோன்ற வதனிடையாருமத்த
னிருமைசேர்கோயிறுனுங் கலியருமேறித்தேவர்
மருமலர்விழிக்கணங்கள்வாழ்த்தவண்கயிலைபுக்கார். ௨௪

அத்தனையழைக்கச்சென்றார் கயிலையிலன்பரொல்லா
மத்தனைநிலயத்தோடே கலியனாரழைத்துக்கொண்டே
யத்தமாவிமானமேறிக் கயிலையிலணைந்தாரொன்றே
யத்தலோகத்தோர்மண்ணோ ரதிசயமுற்றாரார்த்தார்.

கலியநாயனார் புராணம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௬௨௫.

---

உ

திருச்சிற்றம்பலம்.

---

கலியநாயனார் புராண

வசனம்.

பஞ்சாக்ஷரஜெபபராயுள்ளவர், சிவபத்தியே வடிவமாயுள்ளவர், கலியரென்னுந் திருநாமமுள்ளவர், இவர் தமது நகரத்தினின்றும் வேற்றுநகரத்துச் செல்லுகையில் வழியிலொருகாட்டிற் சிவலிங்கமொன்றுகண்டு விரைந் தருகாகச்சென்று துக்கமுற்றுப் பணிந்தெழுந்து சிவலிங்கத்தை யணைத்துக்கொண்டு மனமுருகிப் பெருமூச்செறிந்து இரண்டுகண்களினும் நீர்பெருகத்தளர்ந்தளவற்ற துன்பத்தமூர்த்தி ஸ்வாமி யிக்காட்டிற் றனித்திருப்பின் உமது பகைவர்களாகிய திரிபுராதிகள் இயமன் காமன் ஜலந்தரன் பிரமன் நரசிங்கன் அந்தகாசுரன் முதலான வநேக ருண்டா யிருத்தலால் அவராவது அவர் வழிவந்தவராவது கண்டு உம்மைப்பழிவாங்க வெண்ணங்கொண்டால் இத்தனிமைக்கெவர் காவலாவர் முன்னந் தாருகா வனத்து

ள்ள ரிஷிகளால் ஏவப்பட்ட யானையையும் புலியையு முரித்து
யபோர்த் திடையிலுந்தரித்தீர் அதுசெய்தி யிக்காட்டி லுள்ள
யானை புலிகளுக்குத்தெரிந்தால் சாதி யபிமானத்தா லும்மைப்
பகைத்துவருமே நானிதற் கென்ன செய்வேனென்று வருந்தி
இப்போ தெனசிரத்தி லாராவது தூக்கிவைத்தா லெம்மூர்க்கு
கொண்டுபோ யாலயமொன்று கட்டி யதில் வைப்பேன் இதெ
ல்லா நினைத்து முடியாதகாரியம இக்கடவுள் இப்பகைகட்கஞ்
சாதவராய் ஒருவர் சகாயத்தையும் வேண்டாதவராகையா லிவ்
வனத்திற்றிடசித்தத்துட னிருக்கின்றா ஆதலால் நாம் பயப்
படவேண்டிய தொன்றுமில்லை யென்று நிச்சயித்து தமது நில
ம் நீ வீடு வாயில் ஆடு மாடு அணிகள்முதலிய போகவஸ்து
க்களை திரவியமாக்கி கையிலிருந்த மற்றைய பொருள்களையுங்
கொண்டு சிவாலயத் திருப்பணிசெய்து சிவலிங்காதி பிரதிஷ்
டையுஞ்செய்வித்து உற்சவாதிகளுஞ் செய்வித்து நித்தியநைமி
த்திய பூஜைகள் விதிவத்தாய் நடக்கும்படி தக்க குருக்கள்மா
ரையும் பிரார்த்தித்து தமக்குரிய மித்திரரோடு தாமுமரோகவா
யுரங்களுடனே காவலாகவு மிருந்தார், சிறிது பொருட்குறை
வால் மற்றையா வாராது நிற்க இராத்திரிகாலங்களில தீபங்
தங்கள் கொளுத்திக் கொண்டு காத்திருந்தனர் விலைகொடுத்து
எண்ணெய்வாங்கச் சத்தியில்லாத காலத்தி விறகாற் பந்தங்க
ட்டி யெரித்தனர். அதுவுங்கூடாத வொருதினத்தில் தமது
தலைமயிரைப் பந்தமாகக்கட்டிக் கொளுத்திப் பிரகாசிக்கச்செய்
து தமது கபாலத்திற் றீப்பற்றிக் கொதித்தெரியவும் கலங்காத
சித்தமுள்ளவரா யானந்தமடைந்து துதித்து நிற்குங் கலிய
நாயனாரது பத்திமையை யுலகத்து வெளிப்படுத்த வேண்டி வி
ருஷபாரூடராகப் பிரத்தியக்ஷமாய உனக்குவேண்டும்வரத்தைக்

கேளென்றருள்செய்ய கலியநாயனாரும் வணங்கி யெழுந்தான ந்தத்திலமூர்த்தி ஸ்வாமி யவ்வாறே விண்ணப்பஞ்செய்வேன் இ ந்தக்காட்டில் ஏழைத் தேவர்போலிராது கைலையிற் சென்றி ருப்போம் என்று சொல்ல அப்போது சிவாநுக்ரஹத்தால் அ வ்விடத்தொரு புஷ்பக விமானந்தோன்ற அந்த விமானத்தில் சிவபெருமானும் பரிவாரதேவதைகளும் கலியநாயனாரும் அவ ர்கட்டுவித்த திருக்கோயிலும் ஏறித் திருக்கைலாயத்திற்சென் றனர். இதைக்கண்ட மண்ணுலகத்தோர் விண்ணுலகத்தோ ரெல்லாம் பேரானந்த வாச்சரிய மடைந்தனர்.

கலியநாயனார் புராணவசனம்

முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

—*—

## நமித்தண்டிநாயனார் புராணம்.

---

அவ்வழிசேர்கலியர்சிவத் தணைந்ததற்பினவனைப்போற்
செவ்வியராமேழையன்பர் சிவநேயத்ததிகனார்
வவ்வியதமிட்டலிங்க வடிவமலான்மற்றறியா
ரிவ்வழிசேர்நமித்தண்டி யடிகளெனுமெழிற்பெயரார்.௧

இக்கடல்சூழ்வையகத்தோ ரொழிற்பதியிற்றிருவெழுச்சி த்,தக்கவிழாத்தெரிசிக்கக்ராமமணைந்துதாண்டவஞ்செய்

விக்கிரகங்கண்டென்ன வியாதியோவெனவஞ்சாப்
புக்கரனைப்பூசிக்கும் பூசுரனைவினவுவார். உ

பரமனடிக்கோடியதென்பாதமொன்றங்கெடுப்பதுவெ
ன், றனையிடையொன்றூன்றியதென் றண்கரமுன்வீசி
யதென், விரிசடைகளுன்றதுவென்விழியிமையாதிருப்
பதுவென், பெரியபொல்லாவாதமெங்கள்பெருமானைப்
பிணித்ததோ. ௩

இப்பொழுதேயிவ்வாத மேகமருந்தில்லையூற்
செப்பமுறுந்திருமேனிக் கென்னுமோதெரியாதே
யப்பனெங்கள் பிரான்முடியு மற்பஞ்சாய்த் திருந்ததை
யோ,விப்பிறவிப்பிணிநீங்கவினையமருந்தேதென்றார். ச

இவர்மிகவுமேழையன்ப ரெனவறிந்துசிவமறையோன்,
கவலைதருமிவ்வாதங் கடுகவிடுமருந்துண்டு, நவநிதியம்
போதவென்கை நல்குதிரேலென்றளவி, லுவகையினுற்
றமதுசெல்வ முள்ளவெலாங்கொணர்ந்தளித்தார். ரு

எனையாள்வான்பிணியின்றுநின்றுவிட்டால்யானுமெ
ன்றன், மனையாளுமக்களுநின் வழியடிமையெனவண
ங்க, வினையேதுவேதியனவ் வெறுக்கைமுற்றுங்கைக்
கொண்டு, நினைவாரமகிழ்ந்திதுந னேர்த்திமருந்தெண்
ணையென்று. சு

உய்யவந்தநமித்தண்டி யுடையர்கையிற்கொடுத்தகன்றா
ன், செய்யசித்தமகிழ்ந்தன்பர்தேவாபிரான்மருங்கணைந்
து,மெய்யதெல்லாநிறையவிட்டு விருப்பினான்மிகவருட
த், தையல்பங்கன்மெய்வாதந் தவிராமற்றளர்ந்தயர்வார்.

அந்தோநின்றிருமேனிக் கணைவதேனிவ்வாத, மெந்தா
யானென்செய்கேனெனமுகத்திலறைந்துகொண்டு, மு
ந்தாவலாலழுது மோகத்தால்விழுந்துபுரண், டிந்தாயா
னென்னுயிராமாய்த் திறக்கின்றேனெனவெழுந்து. ௮

கழுத்தினிடைப்படைவைத்துக் கடுகவரிந்திடும்பொழு
து, மழுக்கரத்தார்மதிப்பிளவும் வானதியுமாசுணமுஞ்,
செழித்தசடைமுடியுநெற்றிச்செய்யகண்ணுஞ்சிறுநகை
யு, முழுக்காளகந்தரமு மாகவந்துமுன்னின்றே. ௯

நில்லுநில்லுகழுத்தரியனின்னைநன்றாயாமகிழ்ந்தே, மெ
ல்லையற்றநேயத்தா யேதுனக்குவேண்டியதா, னல்லது
கேளளிப்பமெனநமித்தண்டியார்வணங்கிச், சொல்லு
மிகத்தழுதழுத்துத் தொழுதுநின்றுசொற்றயாவார். ௰

எனக்கொன்றுமிச்சையிலை யெம்பெருமானின்னுடைய
வனப்பொன்றுந்திருமேனி வாதத்தால்வளைந்ததெலா
முணக்கின்றுகுணமாகி யொண்மைபெற்றாற்போதுமெ
ன, வினைக்கஞ்சுநமித்தண்டி மெய்யன்பர்விளம்புதலும்.

வாதமலநடக்கிநுயாம் வையகத்தைதையைந்தொழிலா
னீதிதாநிறுத்துகின்ற நிருத்தங்காணீயறியென்
றுதாவாலெம்பெருமா னருணடமாடலையறைவான்
பூதலமும்பாதலமும் பொன்னுலகும்பவுரிகொள்ள. ௰௨

அரிபிரமராதிவிண்ணோ ரனைவோருமரகரெனப்
பரிபுரத்தின்றொனிபுவனம் பதினாலுஞ்செவிடுபட
வுரியவுமைகைத்தாள முறமுழக்கவுயிர்ப்பினாற்
றரணியெட்டுக்கிரிசேடன் றலைபுரட்டியலையவே. ௰௩

சடைமுடியின்மதிவெதும்பித் தண்ணமுதந்தாழ்ந்து
தலைத், தொடைமிசையின்வீழவுயிர் தோன்றியவாதோ
த்திரஞ்செய், திடையறமுன்முறையிடயா மெழினட
மாடுதல்புரிவே, மடையுமவாக்கேதுவா மெனக்கேட்ட
ங்கருளுவேம் ௰௪

ஐந்தொழிலாந்தாண்டவத்தை யன்பாறிந்தாலிப்பா
ரிந்தநிலைநாட்டியந்தி னியல்பிதெனவறிவித்தே
நந்தநமித்தண்டிகளை நம்பர்விமானத்தேற்றி
வந்துறுநங்கயிலையென மகிழ்ந்துகொடுமன்னினார். ௰௫

நமித்தண்டிநாயனார் புராணம்
முற்றிற்று.
ஏழைமாதவச்சருக்க முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௯௪௦.

திருச்சிற்றம்பலம்.

## நமித்தண்டிநாயனார்புராண வசனம்.

நமித்தண்டிநாயனாரென்பவர் ஏழையன்பரிலொருவர், சிவ
பத்தியி லக்ரகண்யர். இஷ்டலிங்கபூஜாபரர், எங்குமுள்ள சிவா
லயங்கடோறுஞ்சென்று திருவிழாவி லுற்சவத்திருக்கோலந் த
ரிசிக்கும் நியமமுள்ளவர் ஒருதின மொரு சிவஸ்தலத்தில் ந
டேசராது உற்சவகாலத்திற் சென்று தெரிசித்து தமதேழை
யன்பு காரணமாக இந்நடேசப்பெருமானுக்கேதோவியாதி யுண்
டென்று சங்கித்து அவ்வாலயத்தருச் சகரிலொருவனை யழை
த்து ஸ்வாமி யருச்சகரே இக்கடவுளுக்கு இடைவளைந்திருக்கி
றது ஒருகாலுயர்ந்திருககிறது ஒருகை வீசியவண்ணமாக விரு
க்கிறது முகத்திலுஞ்சமமான பார்வையில்லை சடைகளு மவிழ்
ந்தசைகின்றன முடியுஞ்சாய்ந்திருக்கின்றது இந்நோய் எதனா
ல் நீங்குமென்று கேழ்க்க அச்சிவப்பிராமணரு மிவரை யேழை
யன்பரென்று தெரிந்து அவரிடத்தநேகம் பொருளைப் பற்றிக்
கொண்டு தைலமொன்று கையிற்கொடுத்திதனாற் றீருமென்று
சொல்ல நமித்தண்டியாரு மதனைவாங்கிச்சிவபெருமானது தி
ருமேனி முற்றுஞ் சாத்தி யுருவியுந் தீராமைகண்டு ஸ்வாமி யிவ்
வாதநோயுமக்கா வரவேண்டும் நானென்செய்வே னென்று மு
கத்திலறைந்துகொண்டு அழுது விழுந்து புரண்டு இப்போது
நானுயிரை மாய்ப்பேனென்று கத்தியையெடுத்துத்தமது கழுத்
தில்வைத்தறுககுஞ் சமயத்தில் சிவபெருமான் நில்லு நில்லுஎன்
னுஞ் சொல்லுடனே ப்ரத்யக்ஷமாய் உனக்கு வேண்டுமே வர

த்தைக்கேளென் றருளிச்செய்ய நமிநந்தியாரு மமது தி ருமேனியிலிவ்வாதப பிணிநீங்கிற லதுபோதுமெனச்சிவபெரு மானு மிதுவாதநோயன்று பஞ்சகிருத்திய வடிவமென் றருளிச் செய்து ஒருபுஷ்பக விமானத்தேற்றிக கைலைக்கு வருவாயெ ன்றழைத்துச் சென்றருளினார்.

நமிநந்தியடிநாயனார் புராணவசனம்

முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கூட்ட சருககம்.

சகளேசமாதிராசையா புராணம்.

---

துறந்த மேதகனேபோற்றிசோதிமெய்த்தகனேபோ ற்றி, கறுதநதபாதகனென்போற்றி கைககொள்வித்தக னேபோறறி, யறத்தாசாதகனேபோற்றி யருட்கொள்வ ந்தகனேபோற்றி,மறந்தாபேதகனேபோற்றி வசவபோ தகனேபோற்றி.. க

பத்தருட் பத்தராவார் பரமமாயேசர்தம்மு
ணித்தமாயேசராவார் நேயநற்சரணாதம்பான்
மெத்துமெய்ச்சரணராவார் வேந்தருள்வேந்தராவா
ரொத்தமாபெரியோர்தம்முளுயாதரும்பெரியோராவார்

பரமனைவிரும்பாரதம்மைப் பரிசியார்பண்பான்மிக்கார்
விரவியநாதகீத வீணைநற்பரதம்வல்லார்
திரமறைமுடிவறிந்தார் சித்தாந்தந்தெரிந்துவல்லா
ரரியவில்வாழ்க்கையிச்சை யற்றுளார்போலிருப்பார். ௩

இயமமாநியமமாதி யெண்வகையோகம்வல்லார்
கமையுளார்கருணைமிக்கார் கனத்தநற்சரித்திரத்தா
ரமைதருமிசைபடைத்தா ரணிமையினம்பையென்னுஞ்
சமமிலாத்தலத்தார்தம்போ சகளேசமாதிராசா. ௪

மேதினிபுரப்பார்துய்ய விதரணவித்தையுள்ளம்
போதவேபடைத்துவாழ்வார் புனிதநற்குருவிலிங்கத்
தாதரமிக்கபத்தி யன்பினாலதிகராகி
யோதுநலுபசாரங்க ளளவிலவுவந்துசெய்வார். ௫

அடிக்கடிபெரியோர்தம்மை யன்பினாலகலாதேத்திக்
கடிப்பலமலர்நீர்கொண்டு காதலாற்றம்மகத்து
நெடிக்கிலாதருச்சித்துன்னி நிமலனைத்துதித்துமற்றும்
பிடித்ததண்டிகையின்முப்பத் திரண்டிராகம்பிணித்தே

நேரத்திற்கேற்றராக நித்தாதஞ்சகளேசர்க்கே
யாரத்தாம்பாடிமற்று மகமகிழ்ந்தந்தவாறு
சீருற்றகவுரிவீணை யிராவணவீணைசெய்ய
மேருக்கொள்கரத்தான்வைகும்வெள்ளியங்கயிலைவீணை

அம்பரவீணைமற்று மருந்திறற்பிஞுகிவீணை
நம்புசாரங்கவீணை நச்சுகச்சப்பவீணை
யெம்பிரான்மாதிராச ரினியராகங்களாலே
தம்பிரான்சகளேசன்சீர் தாழ்வறநவிற்றிநாளும். அ

நல்லவரதிசயிக்கு நாளிலில்வாழ்க்கையிச்சை
யில்லராயுலகாளின்ப மில்லராமிவரோர்நாளின்
மல்லிராசையமொன்றோர் மன்னவருலகங்காத்தீ
தல்லலென்றகன்றுசித்த னரும்பருப்பதத்தணைந்தே. ௯

அங்கணிச்சலத்தராகி யானந்தமோகராகித், துங்கவில்
லஞ்சூழ்காவிற் றுணிந்துறுமல்லிராசர், தங்கருத்ததிக
பத்தித் தன்மையுஞ்சமாதியோகம், பொங்கலுஞ்சிவா
னுபோகம் பொருந்தலுங்குணமும்பண்பும். ௰

வந்துமாபெரியோர்சொல்ல மகிழ்ந்துநம்மாதிராசர்
சிந்தையிலன்பாய்க்கேளாத் தேசத்திலாசையின்றி
யந்தமாம்யோகிதன்னை யரும்பெருந்தவத்தினனை
யெந்தநாட்கண்டவன்றா ளியான்வழிபடுவேனென்று.

அப்பருப்பதத்தையுன்னி யஞ்சலிசெய்துபோற்றி
செப்பருமாதிராசர் செப்புவார்கேதாரத்தி
லொப்பினீர்பருகிற்காசி யுற்றிறந்திடிலாமுத்தி
யிப்பெருந்தவம்வருத்த மெளியதன்றென்னவெண்ணி.

அன்னகர்ச்சிகரங்கண்டார்க் கவ்வயின்முத்தியாகு
மென்னல்சத்தியமாமந்தவெழிற்கிரியடுத்துப்பார்ப்போ
மன்னுபுண்ணியத்திலக்க மட்டிலையாதலாலே [ர்
முன்னியத்தலத்துவாழ்வோர் முக்கணராவரன்றே. ௰௩

மிக்கநற்றீர்த்தங்கட்கும் விண்ணவர்முனிவோர்கட்குந்
தக்கமாதானமாகிச் சாதகசித்தராஞேர்
பக்கமானவையளித்துப் பணிந்தமானிடருக்கன்பா
லக்கணத்தின்பநல்கும் பருப்பதத்தளவார்சொல்வார்.

வந்தகத்தியன்புடைக்க மண்ணுள்வீழ்ந்ததுபுதைந்து
விந்தியமந்தரந்தான் விண்டுவின்கரத்தானின்ற
தந்திவானிறத்தோனெந்தை யங்கைவில்லாய்த்துமேரு
வுந்தரிக்கஞ்சிமுன்னீ ரொளித்ததுமைநாகந்தான். ௰௫

வருநதிகங்கைகொய்ய மாவியவந்தங்குன்றிப்
பெருகிலாதாதவன்றன் பெருகுவெங்கிரணத்தாலே
சொரிபனிசுவறித்தோன்று மிமையமல்லாதுதோன்று
திரவியான்விளங்குமல்லா திருள்கொளுமுதயவோங்கல்

வந்துதனுதரம்புக்க தினகரன்கிரணமாற்றி
யந்தருங்கயலஞ்செற்ற தத்தமனஞ்சேரோங்க
லெந்தையையொருநாட்டாங்க மானதோத்ரமிளைத்த
துந்துதன்மணியின்குற்ற முரோகணைத்திரியகற்று. ௰௭

இப்படிமலைகட்கொவ்வோ ரேதமுண்டெந்தையார்வா
ழுப்பருப்பதத்தையொப்ப தாங்கிரியில்லென்றேத்திச்
செப்பருமாதிராசர் சிரத்தையாலெழுந்திறைஞ்சி
யொப்பருங்கிரீந்திரத்தை யுறுவனெனன்னவுன்னி.௰அ

திருப்பருப்பதத்தைச்சேர்ந்து செய்யமல்லையர்தாளைக்
கருத்துறக்காண்பேனென்னுங் காதலான்மாதிராசர்
விருப்புடன்சென்றுவெற்பின் மிக்கமாதீர்த்தத்துள்ளுந்
தெருட்டருந்தானத்துள்ளுஞ் செய்யமாநதிகளுள்ளும்.

மங்கலகிரிதுர்க்கத்தும் வனதுர்க்கஞ்சலதுர்க்கத்தும்
பொங்கிருமுழைகளுள்ளும்பொலிதரும்பிலங்களுள்ளு
சங்கையில்படிகமேம வச்சிரச்சயிலத்துள்ளுங் [ஞ்
கொங்குலாங்கிரியுட்டொன்று வனசரர்குறிச்சியுள்ளும்.

பாதலவுழைகளுள்ளும் பஞ்சலோகக்குன்றத்துஞ்
சீதமார்பரிசவேதித் திரளினுந்தெரிசித்தோர்க்கு
நீதியாமுத்திநல்கு நிலயத்துமலர்வனத்துஞ்
சோதிசேரிந்துகாந்த நவமணித்தொகைக்குன்றத்தும்.

உரகமாவிலங்குபுட்க ளுறைவிடத்துள்ளுமோங்கற்
சரிவுகளிடிந்துவீழுஞ் சாரினுந்தங்கித்தங்கிக்
காமுறுமிலிங்கபூசை காதலிற்செய்துவாழ்த்தி
வாமுறுவில்லமோங்கு வனங்களைச்சமீபமான. ௨௨

கண்டிகைநகத்துங்கண்டி தருசிலைக்கணங்களுள்ளும்
வெண்டிருநீற்றுவெற்புத் தருச்சிலைமிகுமிடத்து
மொண்டருமிலிங்கவோங்கன் மரஞ்சிலைசெடிகளுள்ளு
ம்,புண்டரநுதன்மாயேசர்போலுமாகிரிகளுள்ளும்.உ௩

சங்கமம்போலுந்தாருக் கொடிபுதற்றலங்கடோறு, மிங்
கிதந்தம்முட்பேசுங் கிரிகொடிப்புதல்கடோறுந், தங்க
ளிலிதங்கள்பேசுந் துணைமலர்த்தருக்கடோறும், பொங்
கெரிபோலவிண்ணிற் பொருந்துமாவனங்கடோறும்.

நடிக்குமாகிரியினங்க ணற்கொடிசெடியிடத்து
நடிக்குமாவிலங்குபுட்க ணஞ்சராவிடங்களெங்கு
நடித்தெழுசிலையினங்க ணண்ணினவிலங்கண்முற்று
நடித்துயர்தருவினங்கணணியுறுந்தலங்களெல்லாம்.உ௫

பாடுமங்கிரிமரங்கள் பலகொடிநெருங்கிடத்தும்
பாடுநீண்மிருகம்வண்டு பற்றறுப்பலவிடத்தும்
பாடுமொண்சிலைகண்மந்தி பல்லரிதங்கிடத்தும்
பாடுமாகிரியினங்கள் பறவைகணெருங்கிடத்தும். உ௬

மின்னெறிகாட்டப்பாலு மின்னெறிபுட்கட்பாலு
மின்னெறிவாலுகங்கண் மிக்கெழுகுவையின்பாலு
மின்னெறிநதியினங்கண் மேவுதீர்த்தத்தின்பாலு
மின்னெறிபலநீரோங்கன் மரஞ்செடிமேவும்பாலும்.

பலநிறத்தருவின்பாலும் பலநிறக்கொடிசூழ்பாலும்
பலநிறப்புதலின்பாலும் பலநிறச்சிலைசேர்பாலும்
பலவுருப்பாதவங்கள் பல பலபணைக்கும்பாலும்
பலவுருக்கொடியினங்கள் செடியினம்படரும்பாலும்.

கேசரத்தருவின்பாலுங் கேசரச்சிலையின்பாலும்
பேசுறிற்கேசரஞ்சேர் பெருங்கொடிசெடியின்பாலு
மாசிலாமிருகஞ்சுபர் மணிமரச்சயிலப்பாலுந்
தேசுலாம்பறவைபோலுந்திரண்மரப்பொதும்பர்பாலும்

ஒளிவிடும்பறவைபோலுமொண்மையாமோங்கற்பாலுந்
தெளிதருந்தேவர்போலும் பாதவச்சினையின்பாலுங்
குளிர்நிழற்றிரும்பாத்தாருச் சிலைகளின்குழுவின்பாலும்
வளர்நிழலின்றிநிற்கு மரமலையினத்தின்பாலும். ௩௰

தூரத்தினிழலாய்த்தோன்றுந்தோகைமாமலையின்பாலு
ஞ்,சேரப்போய்ப்பார்ப்போர்க்கெல்லாந் தினமொருவடி
வாய்த்தோன்றும், பாரப்பூதரத்தின்பாலும்பாதவத்திர
ளின்பாலுஞ்,சீருற்றமாதிராசர்மல்விராசையனைத்தேடா

மரங்களைமரங்களேறி மரங்கள்சேவிக்கவாழும், பெரு
ந்தருவினத்தைப்பார்த்தும் பிரியத்தினேறிப்பார்ப்போ
ர், நெருங்குலகனைத்துங்காண நிற்கின்றதருக்கள்பார்த்
தும்,பொருந்திலப்படியேநிற்கும்பொருப்பினமலையை
ப்பார்த்தும். ௩௨

ஓரிடமுன்னியேறிலவ்விடத்துய்க்கும்வெற்பைத்,தே
ரிலப்படியேசேர்க்குந் திரண்மரக்குழுவைப்பார்த்துஞ்,
சாருருவுடையோரேறிற் றமைக்காணுத்தருவைப்பார்த்
துஞ், சூரியன்போலத்தோன்றிச் சோமனுந்தருவைப்
பார்த்தும். ௩௩

பாதிமாமிருகமாயும் பாதிமாமலையதாயும், பூதரம்பாதி
யுள்ளோர்பாதியாய்ப்பொருந்தும்வெற்பை, மேதருவே
லைதோறும் வெவ்வேறுபழுத்துவீழுங், கோதிலாமரத்
தைவெட்டிற்கூடுமாசெடியைப்பார்த்தும். ௩௪

தூரவேயெடுத்துப்போடிற்றொடர்ந்துவந்தவ்விடத்தை
சேருமாகல்லைவெய்யோன் செறிந்தெழிலெழுந்துவீழிற்
பாரிடையடங்குந்தாருப் பகுதியைப்பரிவாற் பார்த்துஞ்
சூரியனெழிலவ்வாறேதோன்றிவீழ்கிரியைப்பார்த்தும்.

நாற்றிசைக்கொம்பிலேறி நாடுங்காற்கயிலாயத்து
நாற்றிசைவாயிருேன்று நல்லமாமரங்கள்பார்த்து
நாற்றிசைச்சிகரமேறி நாடுங்கால்வெள்ளிவெற்பி
னாற்றிசைத்துவாரத்தோடு புரந்தெரிநகங்கள்பார்த்தும்.

மீதுறுமாந்தர்தம்மை மிக்கபாதாளகங்கை
கோதறவாட்டுவிக்குங் கோத்திரந்தருக்கள்பார்த்து
மாதரவுடனேசேரி னறுபத்தெட்டானதீர்த்த
மீதிதுவென்னக்காட்டு மினக்கிரிதருக்கள்பார்த்தும்.

ஒண்ணறையொன் றுரிஞ்சித்தோன் றுமொளியெரியதனை
ல்வேகு, முன்றிகழ்மரயபோய்வேறே முளைத்தெழுதரு
க்கள்பார்த்து, மின்றியுஞ்சிதமிஞ்சு மிடையிருள்வெயி
லைத்தம்பாற், சென்றபோக்கொிக்குந்தாருக் குழுஉக்கிரி
த்திரளைப்பார்த்தும். ௩௮

வெயின்மிகும்போதுதமபான் மேவினோர்விரும்பத்திங்
கள், பயிலவேசெய்யுமோஙகற்பகுதிபன்மரங்கள்பார்த்
து, மயிலுறும்பாலாறேறி யருஞ்சுனைபருவிபார்த்துங்,
சயிரநிறைதடாகஙகூடந் தண்சுனைநதிகள்பார்த்தும்.

நெய்யுறுமருவியாறு சுனைநதி நின்றுபார்த்தும், பைய
வேமாநிராசா பலவில்லவனம்புகுந்து, பொய்யில்பொ
ன்கிரிமரங்கள் கொடிசெடிவிலஙகுடபுட்கள், செய்யவம்
மணநதுக்கோயில் செறியும்பாலனைத்தும பார்ததும்.

நவமணியினங்கள்போலு நாஙகணணணிப்பாரத்து
நவமணியினங்கள்போலு நறுங்கொடிசெடிகள்பார்தது
நவமணியினஙகள்போலு நாற்பதம்புட்கள்பார்த்து
நவமணியினங்களபோலு நன்மலாத்தருக்கள்பார்த்தும்

ஒருமுதலாகிப்பல்வே றுற்றபல்கொடிகள்பார்த்து, மரு
வொடுவாயுமிங்க மந்தரம்விளங்கல்பாரத்தும், பரிவின
ன்னீர்தெளித்துப் பணியுமாமழையைப்பார்த்துந், தரு
வினமலராற்கோலஞ் சமைக்குமந்தகைமைபார்த்தும்.

வந்துசங்கரனையாட்டு மஞ்சனத்தீர்த்தம்பார்த்துஞ்
சந்தனந்தினமுஞ்சாத்துஞ் சந்தனத்தருக்கள்பார்த்துங்
கொந்தலர்தந்துசாத்து மலர்வனக்குழுக்கள்பார்த்து
மந்தருந்தூபங்காட்டு மருந்தூபமரங்கள்பார்த்தும். ௪௰௩

தீபம்பரற்குக்காட்டுந் திரண்மணியரவுபார்த்து
மேவுநற்பலநிவேதம் விரும்பிச்செய்தருக்கள்பார்த்து
மாவலொலடைக்காயேற்று மம்மரக்கொடிகள்பார்த்துந்
தாவரமாதிராசர் தருக்கியேசெலுங்கான்மற்றும். ௪௰௪

பாதவவரவென்றேத்திப் பாதவம்பலவிறைஞ்சுங்
கோதிலாத்தருவிலிங்கங் குலவிடங்குறுகிப்பார்த்துந்
தீதறும்பறவைமன்ன வெனச்சொலிச்செய்யபுட்கள்
பூதலமுறவிறைஞ்சும் புள்ளிலிங்கங்கள்பார்த்தும். ௪௰௫

மிருகமன்னவவென்றேத்தி விரும்பியேயிறைஞ்சநாளுந்
தெரிதருமிருகலிங்கஞ் சேரிடஞ்சென்றுபார்த்து
முரகவல்லபவென்றேத்தி யுரகங்கள்பணியநாளும்
வரமருளுரகலிங்க மன்னிடமகிழ்ந்துபார்த்தும். ௪௰௬

அளிக்குலமன்னவென்றே யரியினமிறைஞ்சியேத்த
வெளிப்படுமளியிலிங்க மேவிடம்விரும்பிப்பார்த்துந்
தெளிந்தநீர்மன்னவென் றுசெழுஞ்சலமிறைஞ்சநாளுங்
களிக்குநற்சலலிங்கத்தைக் காதலிற்சென்றுபார்த்தும்.

சவரவல்லபமென்றேத்திச் சவராகளிறைஞ்சநாளுந்
தவறைவரமளிக்குஞ் சவரலிங்கங்கள்பார்த்தும்
விபுதவல்லபமென்றேத்தி விபுதர்களிறைஞ்சநாளு
மவர்களுக்கினிமைநல்கு மமரலிங்கங்கள்பார்த்தும். ௪௮

மலையெனப்புற்றுமூடி மறையுமாதவனைப்பார்த்து,மலை
மரமுடிந்தாரு வெனவுறுந்தவனைப்பார்த்துஞ், சிலையெ
னசசிலைமேன்மூடிச செறியுமாதவனைப்பார்த்துந், தொ
லைவிலாமயிர்மேன்மூடித்தோன்றலாதவனைப்பார்த்தும்

பரமயோகத்தாற்காட்ட ப் பான்மையாந் தவனைப்பார்த்
சிரநிலமூன்றிக்கைகால் சேணிடைநீட்டிவாயுப் [துஞ்
பருகுமாதவனைப்பார்த்தும் பாதவங்குட்டமொன்றே
தனையிடையூன்றிநின்றுசலிப்பிலமாதவனைப்பார்த்தும்.

பரந்தபஞ்சாங்கியூடே பற்றுமாதவனைப்பார்த்து
முரந்தரவோடொற்றி னுற்றிருயகளமமிழ்ந்த
நிரந்தரமகிழ்ந்துநிற்கு நிதத்யாதவனைப்பார்த்து
மருந்துநீர்த்துளிவாலூகத்தமையுமாதவனைப்பார்த்தும்

மரங்களையயங்கேட்கவளைந்திடும்பலங்களுண்டும்,பெ
ருங்கிரிவணங்கிநல்கும் பெருமரத்தேனையின்று, மிருந்
துமாதவங்கள்செய்வோ ரிடங்களிற்சென்று பார்த்துந்,
திருத்துநற்ரலகிரீடை செய்யுங்கந்திருவர்ப்பார்த்தும்.

செய்யநற்சிவார்ச்சனாவற் சித்தனைப்பார்த்துந்தேவர்
தையலாருடனேயாடுஞ் சமுகங்கடம்மைப்பார்த்து
முய்யநீரமினார்க ளூறுபிலங்களைநேர்பார்த்தும்
பையரவுலகராடும் பாதலமுழைகள்பார்த்தும். ருங

கரியரிபுண்டரீகங் கரடிகண்முதலாயுள்ள
தெரிவருமிருகந்தம்முட் செறிபகையொழிந்துசேரு
முரிமையைமாதிராச ருகந்துபார்த்துயர்ந்துவில்ல
விரிவனந்தன்னைப்பார்த்து மிகமனமுருகிப்போற்றி.

மெய்த்தவமல்லிராசர் மேவிடமேதென்றெண்ணி
யத்தகைவில்லஞ்சூழு மருவனமனைத்துந்தேடி
முத்தராமாதிராசர் முறைமையையறிவாமென்னுஞ்
சித்தராயத்தவத்தர் திருவுள்ளத்துன்னித்தேர்ந்து. ருரு

வேறு.

நல்லதோர்பெரு வடிவினைநண்ணிமுனடுவே
மல்லன்மாமலைதொடங்கி விண்ணளவதாய்வளர்ந்து
தொல்லைதீற்றருங் கிரியதோசோதிமாயமோ
வெல்லையற்றருத்திராக்க மாமரம்படரியல்போ. ருசு

கோரசம்புவின்வடிவமோ குறித்துயாமொருகா
லோரிடத்திலுஞ் சொல்லொணாதென்னவுணர்ந்து
தீரமாதிராசையர்தாஞ் சென்னியேதென்று
தேரவேணுமென்றுண்டு மூன்றியங்கியுந்தெரியார். ருஎ

பத்திதப்பினம் பதமுனந்தேடிலாதென்னுஞ்
சித்தமுற்றயர்ந் த்னுதினஞ்செம்பதந்தேடி
யத்திறத்தினி லேயிரண்டாண்டுழன்றறியார்
முத்தவிப்படி யடியனேமுனிவதோமுறைமை. ௫௮

உன்பெருந்திருவடி வினையீதெனவுன்னி
யென்பெரும்படியறிவிலு லறிதரவெளிதோ
நின்பெருந்திரு வருளினுனின்பதங்காட்டென்
றன்புடன்றுதித்தொருதிங்கள்பணிந்தெழாதழவே. ௫௯

மெல்லவேதிருமுறுவல் செய்தருண்மிகுநோக்கான்
மல்லிகார்ச்சுனயோகர்முன் வடிவினைமாற்றி
நல்லதந்திருவுருவினைக கொண்டுமுனண்ணி
யல்லனீயறவவ்வடி வானமென்றறையா ௬௰

சரணநீயினியெழுகெனத் தன்னிருகரத்தா
லருளின்மாதிராசையனை யெடுத்துகந்தணையாப்
பரமபததியானம்மை யிக்கிரிமிசைப்பார்க்க
வுரமிகுந்தவஞ்செய்தனை வருதியென்றுவப்பால். ௬௧

தன்சிநேகநற்ற வாச்சிரமங்கொடுசொர்ந்து
நன்சிவாசனனை வேளையிற்சேடமுநல்கிப்
பின்சிவானுபவத்துனை யெருகவேகாட்டி
முன்சிறுநிகைவைத்திருந் தினியனமொழிவார். ௬௨

இன்னரீதனாமீதினிற் சிலதினமிருந்து
பன்னருந்தவஞ்செய்தலா னம்மிடம்பலியா
தொன்னலத்தினுற் செல்செனமல்லிகார்ச்சுனர்மு
னன்னலம்பெறப்பணிந்தெழுந்தழுதன்பினவில்வார்.

பிறவிமாமிடியாயினோர் பெருநிதிகண்டா
லுறவினுற்கொள்வரல்லது விடுவரோவுன்ற
னிறைவயானின்று கண்டினிமண்செலேனென்ன
வறவன்மென்னகை தன்னினனன்றெனவறைந்தே. ௬௪

பத்தர்நன்னிதியாகிய பரமன்மாதிராசர்
சித்தமொப்பயாந்திட்டமிட் டகற்றுமென்றே
மெத்துமோர்கருவேனிழன் மெல்லெனக்கொடுபோ
யத்தலத்தினிலிருவெனமறைந்தொராயனைப்போல். ௬௫

வே று.

முருட்டுவன்காலினிட்ட மொய்த்தவார்ச்செருப்புஞ் சுற்று, மிருட்கொள்கம்பளமேலார்த்த விருங்கயிற்றனை யுமாடு, வெருட்டுதிண்கோலோர்கையும் வெறுங்கட மொருகரத்து, மருட்டுறுவிழியுங்கோணல் வதனமும் பாசிப்பல்லும். ௬௬

தடித்ததிண்காதுங்கட்டைத் தாடியும்பருத்தமூக்கு
மெடுத்தகோல்பின்னிறுத்தி யதனிடைச்சார்ந்தோர்கா
மடித்தொருகாலினின்று வலக்காநுதற்கவித்தே [லே
யடிக்கடியாடுபொர்க்கு மக்கமுமதட்டுவாயும். ௬௭

கொடுமைசேர்பரசினேடுங் கூர்முடங்கணிமருங்கு, மு
டையராய்நாய்விளிக்கு முனையராயுள்வளைந்து, செடி
தொறுமேயுமாட்டைத் திரட்டிவந்திவரிருக்கு, நெடிய
மாவேலின்கொம்பை ஞெமிர்த்துமை தின்னவிட்டார்.

விட்டிடமாதிராசர் வெகுண்டியாமிருக்குநீழ, விட்டமா
மரத்தைவெட்டி யிப்படிநிழற்கெடுத்தாய், மட்டறுகா
ட்டினிந்த மரமலாதிலேயோசொல்லாய், துட்டனீகட்
டன்முட்டன் றுசசனன்மதத்தாய்கொல்லோ ௬௬

பாவிநீயிடையாவுன்னைப் பதறியான்சபிப்பனென்று
ரோவமிலாய்ராகு மிருடியாசிரித்துச்சொல்வார்
கோவிநீநன்றுநன்று கோபியேபாவியல்லா
லுவினல்வெம்மைசொல்ல நாணலன்பாவியென்று. ௭௰

கோபமேவதைக்குங்கூற்றங் கோபமேதுன்பமூலங்,
கோபமேதிருவையோட்டுங் கோபமேகுணத்தைக்கொ
ல்லுங், கோபமேநிந்தையேது கோபமேகொடுஞ்சொற்
கூட்டுங், கோபமேநரகஞ்சேர்க்குங் கோபமேகொடுமை
யாமால். ௭௧

சலமெனுந்திரையாற்றுய்ய தவமரக்கலஞ்சாயாதோ, சல
மெனும்வெயிலானெஞ்சத் தாமரைதான்கன்றுதோ, சல
மெனுநெருப்பாலெல்லாத் தருமமும் பொடியாகாதோ,
சலமெனுங்காற்றுன்ஞானத் தருவினஞ்சாய்ந்திறுதோ.

ஞானமேலீடோவுன்ற னல்லவதானக்கல்வி
யானவாங்காரந்தானோ வருந்தவத்தகந்தைதானோ
நீநல்லனல்லன்கோப நெஞ்சினனீயிருக்கக
கானமிங்கிதனுள்வேறு கருதினன்னிழல்களின்றோ.௭௩

நல்லனீசாந்தமேவு நற்றவருன்னைப்போல
வில்லையிக்கிரியின்மேவு மிருந்தவர்தம்முளெல்லா
மொல்லையினெல்லாமற்ற வுனக்கிந்நிழலினாசை
யெல்லையற்றிருந்ததென்றுற்றெளிவுதானெளியதன்றே.

நேசமாய்த்தீயில்வீழு நேரிழைபுடுத்துச்செல்லும்
வாசமாரழல்வேமென்றுமனத்திடைமதித்தல்போன்று
கூசுதலின்றிச்சாகக் குறித்தவள்கூபம்வீழ்ந்தங்
காசையாற்றெப்பர்தேடு மறிவுபோலாய்த்துன்னாசை.

மருளெனக்கிலையுலகளை வாங்கிவாவிளையவென்றன்
சிரமிசைசுற்றவென்போர் செய்திபோற்சன்னாசஞ்செ
யொருமறையோன்றன்வாழ்வையொருவன்கையொப்பி
த்தேகு,மருமயல்போலுமுன்றனாசையையறையுங்காலை

கடுவிசைபெருகுமாற்றின் கரடிகம்பளமதென்று
முடுகிநீந்திப்பிடித்த மூடனையதுதான்பற்றி
யடுதலிற்கனாயிருந்தோர தனைநீவிடுவிடென்ன
விடுகினும்விடாதென்செய்கேனெனறவன்வீழ்ந்தபோல

விட்ட வன்றனையுமாசை விடுகிலாக்காலமானு
லொட்டுமோநன்றாய்நீங்கவுனக்கியாமுரைப்பதென்னுந்
தொட்டதோரிருப்புலக்கை சூதினூற்றுணிக்கத்தப்பி
லெட்டருமளவதேனுந் தோல்விகாணெனவுரைப்பார்.

நாணியேயாசையெல்லா நழுவினோர்திரும்பப்பற்றி
னுணியாய்ப்பற்றுஞ்சென்மத் தருவினையெனத்தவத்தர்
பேணியங்குரைத்துமுன்னைப்பெருகருள்வடிவங்காட்ட
பாணியாற்றொழுதிறைஞ்சிப்பரவிமுன்வெள்கிநின்றார்.

அதிகதுக்கத்தராகி யஞ்சிமெய்நடுங்கவென்பாற்
கதிநெறியில்லைநீதிக் கருத்தில்லைப்பத்தியில்லை
மதியின்மெய்ச்சாந்தமில்லையதமுளேனெங்குற்றேனின்
விதிசகளேசவென்னை விடுங்கொலோ விடாதேயையா.

கருமமுள்ளளவுமந்தக் கருமத்திற்கேற்பசெய்து
திரியுமதன்றியென்றுஞ் சிவனருள்சிந்தியாது
நிருமலநெறியாகாது நீண்டவாதரவாற்காயை
மாநுவியேகொய்தாற்றுய்ய மதுரமென்கனியாகாதால்.

பரதபோதனனேபோற்றி பத்தர்பாக்கியமேபோற்றி
சரணநின்சரணையல்லாற் சார்விலேனென்றுநின்ற
வரமுறும்மாதிராசர் மனங்கொளுமிரக்கநோக்கி
யருளுறுமல்விராச ரன்பினைத்துகந்து. அ௨

அஞ்சநீவேண்டாந்துக்கத் தழுந்துதலொழிவாயற்ப
நெஞ்சிலடையகந்தையுள்ளோர் நம்மிடைநிற்கொணாகா
ணஞ்சொனீகேளேனென்று நவின்றதாலிவ்விகற்ப
விஞ்சையாஞ்செய்தோமென்று மல்லிராசையர்விளம்ப.

மன்பரன்கருணையாலே வந்தவன்வசவராச
னென்பவன்பத்தியென்னு மிரும்பொருணிறுந்தவேண்
துன்பமண்ணகலநம்பாற்றோன்றினன்சுகானுபூதி [டித்
யன்புனக்கவன்றனாலேயாகுநீயவன்கண்செல்வாய். ௮௪

வாசிவாசாரவாரி வைகியேசரிப்பாயென்ற
னானருளாற்பதிற்றைந் தாண்டுகளாறுநூறாண்டு
தனையிடைவசவேசன்பாற் றங்கிப்பினுமழைக்கப்
பரிவினாலெம்பால்வந்தைம் பதுவருடங்கள்சென்று.

ஆகநிற்கெழுநூறாண்டி னந்தத்திலன்றிமுத்தித்
தாகமுண்டாகாதிங்ஙன் றருவதேதேனுங்கேட்பா
யீகநாஞ்சொல்வாயென்ன மாதிராசையரிரங்கி
யோகராமல்லிராசர்க் குறப்பணிந்துரைக்குகின்றார்.

திருவையிச்சிப்பனென்னிற் பிறர்திரியாயுவென்னி
லருளுறுமாயாரூப மண்டர்போகங்கள்வேண்டுந்
தரமலவனித்தத்தாலே தாழ்விலாமுத்தியென்னிற்
பரமனற்பதவியாகும் பற்றிலேனென்றுமென்று. ௮௭

ஐயமுற்றுணர்வாரீர மகத்துளாயத்தனேயென்
றுய்யமண்மீதுநன்று யுறப்பணிந்தெழாதமுன்னஞ்
செய்யநற்கல்லியாணச் செழுநகர்நந்தியாரா
மெய்யர்பான்மாதிராசர் விரைந்துமுன்னிற்கநோக்கா.

கூடலசங்கமேச னென்னவேகுலவிநோக்கா
நீடவட்டாங்கமாக நேசத்தாற்பணிந்துபோற்றித்
தாடலைமீதுசாத்திச் சகளேசமாதிராசர்
சீடராம்வசவராச னென்னநற்சேவைசெய்யா. ௮௯

நறசிவலிங்கபூசை நண்பராயகத்துமுள்ளு
மற்புகத்துடனேசெய்தங் கானந்தவமுதமார்ந்து
சிற்குணமாதிராசர் தேடரும்பத்தரான
பொற்புறுநந்திகேசர் பொருவறவெங்குநாளின். ௯௰

சகளேசமாதிராசையர் புராணம்

முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௭௯௰.

உ

திருச்சிற்றம்பலம்.

## சகளேசமாதிராசையர் புராண

## வசனம்.

திருவம்பை யென்னுந் திவ்வியஸ்தலத்தை யுடையவர்
சிவநேய மில்லாதவனைப் பிணமென்று நினைத்துப் பரிசிக்கவ
ஞ்சித் தூரத்திற் செல்பவர் பரதசாஸ்திரங்களிலும் வீணைவா
த்தியங்களிலும் வல்லவர், வேதாகமமுடிவை நன்றாகவறிந்தவர்
யோகமார்க்கத்திற் பயிர்ச்சியுள்ளவர், இல்வாழ்க்கைப் பற்றில்
லாதவர், போதுமான கீர்த்தியையுடையவர், சகளேசமாதிராச
னென்னுந் திருநாமமுள்ளவர், உலகத்தையாளப்பட்டவர், இவர்
குருலிங்க ஜங்கமபத்திமிகுந்து சிரத்தையோடுபூசித்து அநேக
உபசாரங்களைச்செய்பவர் சிவபூஜைமுடித்துப பூஜாந்தத்தில்
கௌரிவீணை கைலாசவீணை இராவணவீணை பினாகிவீணை கச்
சபவீணைமுதலிய வநேகம் பேதமுள்ள வீணைவாத்தியங்களிற்
காலத்துககுத்தக்க ராகங்களையிசைத்துச் சகளேசனென்னுஞ் சி
வபெருமானுடைய கீர்த்தியைப்பாடுவாராய் இல்வாழ்க்கையை
முற்றத் துறந்து ராஜ்யபாரத்திலு மிச்சையற்றனர். இவர் இ
படியிருக்குநாளில் மல்லிராசையனென்னு மரசனொருவ உல
கத்தைநெடுநாளாண்டு இது அல்லலுள்ளதென்று அவ்வரசா
ட்சியைவிட்டுநீங்கி சிவஸ்தலங்களிற்சிறந்த பருப்பதத்தைய
டைந்து நிச்சலசித்தராய்ச் சிவானந்தமேலிட்டு ஒருவில்வவனத்
தில் தனித்துத்தவஞ்செய்யுமவரது பத்தித்தன்மையையும் சமா
தி சாமர்த்தியத்தையும் சிவானுபோகத்தையும் தபஸ்விகள் ப
லர்வந்து சொல்லக்கேட்டு பேரானந்தமடைந்து அவரது பாதங்

களை யெப்போதுகாண்பமென்னு மேக்கமுடையவராய் பருப்ப தமலையையடைந்து அங்குள்ள தெய்வீகங்களைக்கண்டுமகிழ்ந்து மல்லிராஜர் தவஞ்செய்யும் வில்வவனத்தையுங்கண்டு அதிகமகிழ்ச்சியோடு அவரைத்தேடும்போது அவரு மாதிரா சையரது முறைமையை யறிவோமென்று தமதுதிருவுள்ளத்திலெண்ணி மலைமுதலாகாயமுள்ளளவும் விசுவரூபமொன் றெடுத்துப் பிரமிக்கும்படி நின்றார். அநேகவருஷகாலந்தேடியும் அவரது அடிமுடியைக்காணுமல் இளைத்துவருந்தி ஸ்வாமி மல்லிராஜரோ யுமது விசுவரூபத்தைச் சிற்றறிவையுடைய வெளியேனறியவல்லனே, உமது திருவருளா லும்மைத்தெரிசிக்க வருள்செய்வீரென்று தண்டாகாரமாகப் பூமியிற்பணிந் தவ்வாறே ஒருமாதம்வரையி லெழாதுகிடந்தழவே அப்போதுமல்லிராஜரும் அருண்மேற்கொண்டு இதுதான் எம்முடைய வடிவமென்று தமது சுபாவவடிவத்தோ டெதிர்நின் றினி யெழுந்திருப்பீரொன்று தமது ஸ்ரீஹஸ்தங்களா லெடுத்தணைத்து அழைத்துக்கொண்டுபோய்த் தமதாச்சிரமத்திற் சென்று சிவநைவேத்தியசேஷத்தைக்கொடுத்தருந்தச்செய்து இவர்க்கனுக்ரகிக்கக்கருதி மாதிராசனை ஒரு வேலமரத்தடியி லிருக்கச்செய்து மறைந்துபோய் ஒரிடையனைப்போல் வடிவமெடுத்து ஆட்டின் மந்தையைச் சாய்த்துவந்து மாதிராஜரிருந்த கருவேலமரத்தை யொடித்துத்தள்ள மாதிராஜர்க்குக் கோபமுண்டாக அதுமூலமாக அக்கோபத்தைத்தணித்து ஞானத்தைப்போதித்துத் தமதுதிருவுருவை யதாப்பிரகாரந்தெரிவிக்க, அப்போது மாதிராசரும் நாணமடைந்து அதிதுக்கிதராய் நடுநடுங்கி ஒன் றுந்தெரியாத அபக்குவனையாள்வதற் கிதுசமயமென் றிரக்கமுற்றுநிற்க, மாதிராஜரே நீர் அஞ்சவேண்டுவதில்லை துக்கத்தினின்று மொழிவீர், சிறிதா

யினும் அகந்தையுள்ளவர் எமதுமுன்னே நிற்கக்கூடாது உம தபக்குவநிமித்தமாகவே இந்தவித்தையைக்காட்டினோம் என்றருள்செய்து அன்பர்க்கருணிமித்தமாகச் சிவானுக்கிரஹத்தாற் பூமியி லவதரித்தவராகிய ஸ்ரீநந்திகேசுவரரிடத்தில் ௬௦௦ ௵ சென்றிருந்தால் பின்பு நாமழைப்போம் அப்போது நம்மிடத்தில்வந்து ஐம்பதுவருஷமிருந் தானபின் சிவானுக்கிரஹத்தால் இப்போது சென்றவயதோடு ஆக ௵ - ௭௦௦, இந்தவருஷம் எழுநூற்றினந்தத்திலன்றி உமக்கு மோக்ஷத்திலிச்சையுண்டாகமாட்டாது வேறொருவிஷயத்தி லிச்சையுண்டாமாயின் அவ்வாறே தருவோமென்றுசொல்ல, மாதிராஜரு மற்றொன்றினுமிச்சையில்லாதவராய்ப் பூமியில் தண்டாகாரமாய் நமஸ்கரித்து எழுந்திருக்கு முன்னமேதானே கல்லியாணபுரத்தில் ஸ்ரீவசவதேவர்க்கு எதிரில்நிற்க, வசவதேவரும் வணங்கி யிவரோ குருவாகிய கூடலசங்கமேசரொன்று பாவித்துப் பத்திபண்ணிக்கொண்டு மாதிராஜருந் தாமுமாக இருக்குநாளில்,

சகளேசமாதிராசையர் புராணவசனம்
முற்றிற்று.

---

உ
திருச்சிற்றம்பலம்.

—*—

## சிக்கமாதையர்புராணம்.

---

திண்ணியகாலனைத் தீக்கண்மீதிலே
மண்ணினையிறைத்தவன் வாய்மடித்தயன்
பண்ணியவிதியினைப் பறித்துமாயையின்
கண்ணியையறுத்தநற் கருத்தராயரோ. ௧

யாணிடர்தமக்குறும் வருடநூறெனத்
தானுலகுறைப்பதைத் தவிர்க்கவல்லரா
யீனமதுறும்வய தேழுநூறதா
யானுகந்தேறுவார்க் கதிகநண்பராய். உ

முப்பொழுதருச்சனை முயலுநெஞ்சரா
யெய்ப்பறுநிட்டரா யிலிங்கசங்கமந்
தொப்பருநேயரா யுற்றபத்திசெய்
தப்பருமகிழ்ச்சியா மமுதருந்தியே. ௩

தத்துவஞானராய்ச் சரணராகியங்
கித்திறஞ்சரித்திவ ரியலுநாளிலே
யுத்தமபத்தரா யுண்மைநீங்கலாச்
சித்தரோரன்பர்போ சிக்கமாதையா. ௪

மருவுதமனைவியு மகனுந்தாமுமா
யருளுறுமாதிரா சையராந்தவ
ரிருகழலனுதின மிறைஞ்சுஞ்செய்தியே
கருதருமுயிருநங் கதியுமென்றரோ. ௫

உன்னியநெஞ்சரா யுற்றதந்தொழி
லன்னிலைவருபொரு ளற்பமாயினுந்
துன்னியதாயினுந் துக்கநற்சுக
மன்னியல்பின்றிநீண் மகிழ்ச்சிபொங்கியே. ௬

தங்தொழில்சாயினுந் தவறுசேரினு
மங்தருமாதிரா சையர்சேவைமேற்
சிங்தையுநேயராய்ச் செய்யுநாளிலே
பொங்தனவுடலினைப் போட்டகன்றனர். எ

அவரிடமனைவியா ரந்தவாக்கையைச்
சிவதவர்பாதநற் றீர்த்தத்தாட்டியொண்
டவளவெண்பொடியினைத் தணியச்சாத்தியே
துவளுநெஞ்சில்லராய்த் துணிந்ததூயமையால். அ

தக்கநல்லணையொடு சாயத்திருத்தியே
யக்குறியயலவ ரறிவுறாமலே
மிக்கதஞ்சிவார்ச்சனை விரும்புமெல்லையின்
றொக்குறுசமாதியைத் தொட்டுமோசையால். கூ

துஞ்சியவம்மகன் றுணுக்கெனத்தெளிந்
தஞ்சியீதென்னதா னன்னையெம்மையன்
பஞ்சணையொன்றியோர் பகர்வுங்காண்கிலேன்
வெஞ்சமெம்முட னுளவெலாம்விளம்புவாய். ய

ஐயனம்முடையர்க ளருகென்போகிலன்
செய்யநற்சிவார்ச்சனை செய்யுமெல்லையின்
கையுறவகமுழ மிக்கருமமென்னதா
னய்யநம்பரர்க்குநல் லூற்றம்வேண்டியோ. யக

உன்னுடன்கோப மென்றொருதினத்தினி
னின்னுடன்வெம்மைநா னிகழ்ந்ததாயினும்
பின்னுடன் றீர்வணிப் பெற்றியின்றியு
மென்றொடும்பேசில னென்னையன்னையே. ௰௨

வேளையிற்சிவார்ச்சனை விரும்புங்காலையி
ளொருதாயொன்றுநீ யமைத்திலாய்கொலோ
நாளுநின்சீலநீ ணன்மைகுன்றியோ
தாளுறத்தவத்தர்பாத றாழ்ந்திலாய்கொலோ. ௰௩

திருமெழுக்கிடுகையிற் செந்துசெத்ததோ
வொருபுடைகோமய முறறதில்லையோ
வருமைசேராங்கநல் லாலயத்தழ
கொருவியேயிடையிடை யூனமானதோ. ௰௪

விஞ்சியவுமழுக்கலம் விளக்கிலாய்கொலோ
மஞ்சனசாலையின் மலினமுற்றதோ
வஞ்சிநீவிந்திகை யழுக்கலுத்திடா
தெஞ்சியாசரணையி னிழிவுவந்ததோ. ௰௫

வத்திரங்கொண்டுநீர் வடித்திலாய்கொலோ
சுத்திநற்கந்தநீ துவளவைத்தியோ
யொத்திராதக்கதை யொடிந்திருந்ததோ
கொத்தலர்புழுக்கடி கூடியுற்றதோ. ௰௬

எடுத்தநற்றூப தீபார்த்திபின்மணம்
படைத்தொளியொன்றுபோற் பரவிற்றில்லையோ
சுடர்த்தருவிளக்கினைத் தூண்டிலாமலே
கெடுத்தனையோவிதென் கிளர்த்தியன்னையே. ௰எ

பரமன்முன்னமுதுநீ படைக்குங்காலையின்
முரலுநின்ஞசியின் மூசசனைந்ததோ
வரனருஞ்சேடமோ டருத்திலாதன
விரவிநீபடைத்தியோ விளம்புகன்னையே. ௰அ

உற்றதோமூவித வுதகமொன்றொடொன்
றெற்றெனவழைத்ததற் கென்னென்றில்லையோ
சற்றுநீயையன்முன் சாற்றிடாதவிக்
குற்றமேனின்றெடேன் கூறிலான்சொலாய். ௰௯

ஐயநின் சினத்தினை யாறுகென்றியாங்
கைதொழுதின்சொலாற காலின்வீழ்ந்திடின்
வெய்யதன்வெகுட்சிபோய் விரும்பிப்பேசுவன்
செய்குதுமிச்செயல் செய்தியன்னையே. உ௰

பரமனற்சேடமேன் பசியிலார்கிலன்
றிரநமதுடையர்பால் சென்றென்சேர்கிலன்
கரமலர்பற்றியான் கசிந்தழைக்கவோ
வுளாயெனவன்னேதா ஞெண்டுணைக்கையால். உக

பற்றிமுன்வாங்கிநீ பத்தரிற்றெறு
முற்றவாசிவார்ச்சனை யுரையையூன்றியே
கற்றனையல்லது கருத்திலாயெனச்
சொற்றியிவ்வேதிகை தொட்டிலுன்னையன் ௨௨

சினமொழிந்துன்னுடன் செப்புமையநீ
நனவொழிசித்திரை நண்ணுகென்றுளங்
கனிவுறத்தலைவனைக் கண்டுநககபின்
முனமுறுஞ்செய்திதான் முயலுங்காலையின். ௨௩

புதல்வனுட் புறப்படாப் புறத்துவாயிலின்
கதவினைத்திறந்துளங் கலங்கிமுன்புதா
ஙிதமுறத்தந்தைபி னேகும்வீதிபோய்
மதமுறுத்தவத்தரா மாதிராசர்முன். ௨௪

அன்புடன்வணங்கினின் றையவையகே
ளென்பிதாவென்னையோ வேதும்பேசிலான்
முன்பெனதன்னைபான் முனிவிலாதவன்
வன்புறுசினந்துடன் மவுனமாகியே. ௨௫

நீற்றினைநுதல்புய நிறையச்சாந்தியே
நேற்றுநீயளித்தமெ னீளத்தூசினை
மேம்மரித்தலைபின்மேன் மேவிப்பேர்கலான்
சீற்றமுற்றென்றன்மேற் சினைகமெண்ணலான். ௨௬

அன்னைநற்சிவார்ச்சனை யகத்தைக்கொட்டினா
னென்னையோவகழ்ந்துமண் ணெடுக்குகின்றனள்
பின்னைவேறொருவராற் பிணக்குத்தீர்கலா
னுன்னையானழைக்கவிங் கோடிவந்தனன். ௨௭

நேற்றளவென்னைநன் னேசநெஞ்சுடன்
காற்றுடைமீதினுங் காத்தினுங்கொடு
போற்றியின்சொல்லினாற் புறத்துமீதுற
வேற்றுகந்தணைத்தெனை யிருகணொற்றியே. ௨௮

விட்டபினெங்குநான் மேவினும்முடன்
மட்டறுமன்பினால் வாலலிங்கவா
விட்டமேவாவென தெந்தைவாவெனக்
கட்டிமார்பணைத்திரு கண்ணதென்னவே. ௨௯

சிறியவென்சிகையினைச் சிக்கறுத்தொரு
குறியதோர்கயிற்றினாற் கூட்டியார்த்துமெய்
யுறுதுகளறத்துடைத் துவந்துபார்த்தபி
னிறையவேநெற்றியி னீறுபூசுவன். ௩௰

மருவியஞ்செழுத்தினை மைந்தவென்பனா
னுரைசெயுங்குதலைகேட் டுவந்துமோந்துநீ
யருள்வசவேசுர னகத்திற்றொண்டனே
சுரிகைநற்சவுண்டையன் றொழும்புத்தாதனே. ௩௧

துந்துய்ய வறுசுவையும்படைத்ததிகபத்தியாலே, வந்த
னைசெய்தாகமத்திற்பத்தர்நாவின் மகிழ்ந்துண்பேமெனு
மின்றன்வாக்கினாலே, பந்தமிலன்பர்களுவினமுதுசெய்
வாய் பரமவெனச்சவுண்டையர்பகர்ந்தங்கம்மா. ௬

அன்புடன்மாயேசரொராமமருங்காலை யத்தலிங்கமரு
ச்சிப்பானமர்ந்திருந்து, முன்புறுமஞ்சனமாட்டா முன்
னநெஞ்சின் முதுமகிழ்வாமஞ்சனத்தைமுழுதுமாட்டி,
நண்புனிதமலர்சாத்தாமுந்தவுள்ள நளினமலரினைச்சாத்
திநாறுந்தூப, மின்புறநல்காமுதலேயந்தரங்க விருங்கா
ணைவாதனையையினிதாலீந்து. ௭

ஒளிதிகழ்திபார்த்திபணிமாமுமுன்ன முள்ளறிவாஞ்
சோதியினை யுவப்பாலேற்றித், தெளியுமறுசுவையமுத
ஞ்செலுத்தாமுந்தத் திகழ்தருமான்மாவையிலே யிந்து
ப்பின்னும், களிகொண்மனமுருகியுடற் சேட்டையெல்
லாங் கழன்றுலிங்கச்சோதியினைக் கண்டுகொண்டு, நளி
னமுகமலரவரும்பரமானந்த நல்லமுதுண்டுண்டுசுவை
நயத்தானையா. ௮

வேறு.

நற்சுகாகரத்தின்வீழ்ந்துநலம்பெறமூழ்கிமூழ்கித்
தற்சுகவந்தரங்கத்தன்மையாஞ்சோதிதன்னைச்
சிற்சுகப்பிராணலிங்கத்திர்ங்கரமொன்றச்சேர்த்தங்
கற்சனைபுரிந்துதுய்யவமுதுசெய்விப்பாராகி. ௯

தொட்டுநற்றுணிவினாலேசுரிகையையுறையின்வாங்கி
யடலுறவலப்பால்வைத்திவ்வமுதினையமுதுசெய்யா
விடிலுயிர்துறப்பேனென்றுமெய்விரதத்தராகித்
திடமுடனமுதுசெய்யுந்திறமுன்பின்றெரிந்திருந்து. ௮

கையினாலிதத்துநல்லகறியமுதமுதனைத்துஞ்
செய்யதமன்பினாலேதிரட்டிமுன்னென்றென்றாக
வையநீயமுதுசெய்யென்றடிக்கடிதரவேற்றற்று
வெய்யவெப்பசியர்போலவிருப்பினாலமுதுசெய்து. ௯

மிக்கலிங்கத்திற்சேடமெய்த்தவர்சேடமெல்லாம்
பக்கமொன்றிடமுக்காலம்பரிவினாலருந்திவாழுந்
தக்கசீர்ச்சவுண்டதேவர்பெரும்புகழ்நாணியெங்கும்
புக்கபின்னவனைநல்லோர்புகழ்ந்தவாபுகலலுற்றேன். ௧௦

உறுநெறியபயன்முன்னாளைழுக்கரர்க்கமுதுசெய்ய
மறுவிலாவசனத்துக்கொண்வாலியவரிசிமுன்னாற்
றறுபதின்கலங்கறிக்காமிளகுமுக்கலமளந்து
நறுவியநெய்பால்சீனிநறுங்கனிமிகவுநல்கி. ௧௧

அளப்பருஞ்சிறப்புநல்கியரியபொற்றளிகையெல்லாம்
வளப்பமெய்துறப்படைத்துமறையவர்மந்திரங்க
னுளப்பரிவுடனங்கோதவுயர்திணைக்கப்பாணிற்குந் [ம்.
துளக்கமிலன்பிற்சோழன்கண்களிற்றென்றும்வண்ண

கையினாற்படைத்திருந்தகறியமுதரும்பாகுஞி
யையனார்கடித்துறிஞ்சிக்குடித்தமுதன்றுசெய்யுந்
துய்யநல்லோலைசோழன் றனைச்செவிமகிழ்ந்துகேட்
வையகர்சொலவறிந்தேமன்றியுமற்றோரன்பர். [டல்

பரிவின்மாநிராசசென்னர்பசித்திருந்தருந்துங்கூழி
னரியவின்பாற்பரர்க்கென்றுரைத்திடவவரொண்ணுவே
யரியபொற்கலமாயுண்டதமுதமாயயின்றோமென்று [ம்.
சுரிகுழல்பாகர்வாக்குத்தொனித்ததென்றுரைப்பர்மற்று

வீரசோளவ்வையென்றுமென்கொடிதாக்காராமத்
தேரியறனையறிந்தன்றிநந்தரும்பிட்டிற்கேற்கச்
சேருநற்றிரவியந்தான்சேர்த்திருந்தருந்துங்காலை
நேரிலாமதுரநாவினிகழ்ந்தலாணிமலர்க்கென்று. ௧௫

அஞ்சியப்பிட்டைநல்லவதிகவத்திரத்தான்மூடி
விஞ்சியவிஞ்சிக்கோயில்வீமேசர்க்கமுதுசெய்ய
வஞ்சிசெலுத்திவாவென்றளித்திடவாங்கிச்சென்று
நஞ்சினிதுண்டார்கோயினண்ணிமுனையந்துநின்று. ௧௬

என்னமைதேவரீர்க்கிப்பிட்டினையினிதளிக்கச்
சொன்னதாற் கொணர்ந்தேனென்னச் சோமசேகரன்ற
னன்னயப்புடனேவாங்கிநண்பினுவுதராமார [ன்கையால்
முன்னமுதுண்டானென்றுமுதறிவுடையோர்சொல்வார்

வேறு.

இன்றுசுரிகைச் சவுண்டைய ரினியவமுதம்பிடிபிடி
யா, யென்றுமன்பாற் றரத்தரமு ணுமையோர்பாகரேற்
றேற்றுத், துன்றுபசிகொண்டவர்போலச்சுவைத்தாரெ
ன்றுதவத்தோர்கள், நன்றுதுதிப்பக்கலியாணநகர்க்குளி
ருந்துநயந்திடுநாள். ௧௮

சுரிகைச்சவுண்டையர் புராணம்
முற்றிற்று.
ஆக திருவிருத்தம் - ௧௪௨௭.

---

உ

திருச்சிற்றம்பலம்.

சுரிகைச்சவுண்டையர் புராண.

வசனம்.

உலகத்தில் நகரநாயகமாகவிளங்குகின்ற கலியாணநகரத்தி லெழுந்தருளிய ஸ்ரீவசவதேவர்துதிருக்கூட்டத்தில் தலைமையாக விளங்குமவர், சுரிகைச்சவுண்டைய ரென்னும் அபிதானமுடையவர், இஷ்டலிங்கார்ச்சனைமுதலிய வெகுவிதவிரதங்கைவந்தவர், இரதிஷ்டைகளாலும் தமது பரமாசாரியனை நற்குருவிருலும் ஜங்கமபூஜைசெய்து, ஜவகையமுதும் அறுசுவைப் பதார்த்தங்களும் படைத்து வணங்கி, தமது இஷ்டலிங்கபூஜையிலும் விளைந்து இலிங்கத்தைநோக்கி சுவாமி சிவபெருமானே, கேவலத்தில் கிடக்கதியாகக்கிடந்த உயிர்கள் சுதிபடையவேண்டி திருவாய்மலர்ந்தருளிய காமிகாதியாகமங்களில் பத்தர்களது நாவினிடமாகநின்று மகிழ்ந்து புசிப்போமென்றருளிய திருவாக்கால் இப்போது தாமும் பத்தர்களுண்பதுபோலவே புசிக்கவேண்டுமெ

ன்று பிரார்த்தித்து, அந்த வீரமாஹேசுவரர் திருக்கூட்டமத்தியில் இஷ்டலிங்கத்தைப் பூசிப்பான்றொடங்கி, பகிர்யாகமாகிய புறப்பூஜையைத் திருமஞ்சனமுதலிய திருவியங்களாற்செய்து முன்பாகவே அந்தர்யாகமாகிய மானசிகபூஜையைச் செய்வான்றொடங்கி தமது மனமகிழ்ச்சியே திருமஞ்சனமாக வாட்டி, உள்ளமே தாமரைமலராகச் சாத்தி, அந்தக்கரணங்களின் வாசனையே தூபமாகப் புகைத்து, உள்ளறிவே நீராஞ்சனமாக வேர்த்தி, ஆத்மாவே நைவேத்தியமாக நிவேதித்து, மனநெக்குருகி உடலமைசைவறவிருந்து சோதிமயமான லிங்கத்தை யகமுகத்திற் றரிசித்துக்கொண்டு முகமலர்ச்சியோடிருந்து பரமானந்தமாகிய வமுதத்தையுண்டு, அச்சுவையையப்புடன் சித்சுகசமுத்திரத்திலழுந்திப் பின்னர் அவ்வந்தரங்கச்சோதிலிங்கத்தைத் தமது கரலிங்கத்தில் ஆவாகித் தெழுந்தருளப்பண்ணி பகிர்யாகமாகிய புறத்திப்பூஜையையும் ஸாங்கமாகப்பண்ணிப் பின் திவ்வியமான வறுசுவைக்கறியமுதோடுகூடிய திருவமுதுந் திருமுன்னர்ப்படைத்து, வைராக்கியங்காரணமாகத் தமது ஹஸ்தத்திலிருந்த வுடைவாளை யுறையினின்றுங்கழற்றித் தமக்கு வலப்புறத்தில் வைத்துக்கொண்டு சுவாமி எளியேன்படைத்த வித்திருவமுதைப் புசித்தருளாவிடின் இப்போதே இச்சுரிகையாலுயிர்துறப்பேனென்று உறுதிமொழிந் திரங்கிநிற்க, அப்போது அடியர்துயர்பொறுக்கவியாத வெம்பெருமான் அருளுஞ்செவ்வியுஞ் சிறிதுணர்ந்து அப்போது சிறிதலருந் தாமரைப்புதுமலர்போல் சிறிது முகமலர்ச்சியுடனிருந்து மஹாநைவேத்தியத்தையுஞ்சாகபாகவகைகளையும் முறைதவறாது இனியசொற்களோடு ஒன்றொன்றாக வெடுத்தெடுத்து நிவேதிக்க, சிவலிங்கப்பெருமானும் தமது ஸ்ரீஹஸ்தங்களால் வாங்கிவாங்கி வெய்யபசியாளிகள்போ

ல விளைந்து விருப்பத்தோடுபுசித்தனர். அதுகண்ட சவுண்டையரும் நமது இஷ்டலிங்கத்துக்குச் சித்தித்ததென்று அளவற்றவானந்தத்தில்மூழ்கிப் பின்னர் இலிங்கசேவையும் பக்தசேவையுமென்றுமிருவகை ப்ரசாதங்களையும்புசித்து வாழ்ந்தனர். இவரது புகழ் திரிலோகங்களிலும் பரவிற்று.

பின்னர் அங்கிருந்த பெரியோர்சொல்வர், முற்காலத்துச் சோழராஜன் ஒருநாமித்திக விசேஷதினத்தில் ப்ரபூதஜலிங் என்று திவ்யசிவாகமங்களில் விசேஷித்துக்கூறுந் திருப்பாவாடைநைவேத்தியஞ் செய்வித்தற்பொருட்டு வெள்ளிய சம்பாவரிசி முந்நூற்றறுபதுகலமும், அதற்கொத்த கறிவகைகளுக்கும், அதற்குதவியாகும்படி மிளகுமுக்கலமும், திவ்வியமான [illegible] பால் சருக்கரைகளும், பலரசவர்க்கங்களும், கனிவகைகளும், அடைக்காயமுதும் பூசிக்கின்றமறையவரிடத்துக்கொடுக்க, அவரும்வாங்கி யவ்வாறே திருவமுதமைத்து அந்நிவேதனமெல்லாம் சிவபெருமானது சன்னிதியிற்படைத்து வேதாகமமந்திரங்களை பூஜகர் உள்ளப்பரிவுடனுச்சரிக்க,திரைக்குப்புறத்திருந்துருகுகின்ற சோழராஜனதுபேரன்பைக்கண்டு அவனதுகண்களிலுந்தோன்றும்படி படைத்திருந்த கறிகளுடன் அன்னபானாதிகளையும் சிவபெருமான்புசித்தவோசையைக்காதுறக்கேட்டும் நேராகத்தரிசித்தும் மகிழ்ச்சியடைந்தனனென்று பெரியோர்சொல்லக்கேட்டோம், அன்றியும் மாதிராஜசென்னனென்னும் ஜங்கமமூர்த்திகளொருவர் பசியினால்வாடி அப்போதுகிடைத்த கூழமுதத்துண்டான ருசியினின்பத்தால் இது சிவப்பிரீதியென்று சொல்லவே அப்பொழுது அவரதுகலமே பொற்பாத்திரமாகவும் உண்ணுங்கூழே தேவாமிர்தமாகவும் புசித்தனமென்று சிவபெருமானது திருவாக்கு அசரீரியாய் யாவராலுங் கேட்கப்பட்ட

றென்று பெரியோர்சொல்லக் கேட்டோம், அன்றியும் வீரசோளவ்வையென்னும் ஒருசிலபக்ஷத்தை பல வாசத்திரவியங்களும் ரசங்களுஞ்சேர்த்துப் பிட்டமுது அமைத்து தாமருந்துங்காலத்து அது எண்ணைத்துக்குமேலான திவ்வியருசியைத்தர, இது சிவப்ரீதியென்று அப்பிட்டமுதை வஸ்திரத்தால்மூடி தன் பெண்ணின்கையிற்கொடுத்து இதை நமது கடவுளாகிய பீமேசுவரர்க்கு நிவேதித்துவாவென்று சொல்ல, அப்பெண்ணும் அப்படியேவாங்கிச்சென்று பீமேசுவரர் சந்நிதியிற் கொணர்ந்துவைத்து எனது தாயார் இப்பிட்டமுதைத் தேவரீருக் கமுதுசெய்விக்கச் சொன்னதுகாரணமாகக் கொணர்ந்தேன் சுவாமியென்று விஞ்ஞாபிக்க, அப்போது சிவபெருமான் கையாரவெடுத்து நாவாரவுண்டாரென்று பெரியோர்சொல்லக் கேட்டோம், இப்போது இந்தச் சுரிகைச்சவுண்டையர் இருவமுதைப் பிடிபிடியா யெடுத்துத்தர சிவபெருமான் வெய்யபசியர்போல அவற்றையெல்லாம் வாங்கிவாங்கியுண்டு சுவைத்தனனென்று புகழும்படி, கலியாணநகரத்தில் எழுந்தருளியிருந்தனர்.

சுரிகைச்சவுண்டையர் புராணவசன
முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## தெலுங்கச்சோமையர் புராணம்.

---

திருமலன்பாதமல்லானினையலார்மற்றோரன்பர்
பெருமலமூன்றுஞ்சேரார்சங்கமப்பிரியமுள்ளார்
தருமநன்னேயமிக்கார்தாழ்விலாச்சிவாசாரத்தார்
துரிதர்பாலுறார்தெலுங்கச் சோமையனென்னும்பேரார்.

கலியுகமிலையொன்றில்லார்கருதுருத்திரரோவென்று
மிலையுளார்பரமானந்தமித்தினைநீங்கலாதார்
நலகுணமணிபிறக்குமற்கடல்விடயநாடா
ரிலகுதிவ்வியசரீரமொன்றுலகேத்தப்பெற்றார். ௨

புவனபாவனராயத்தன்பூசனைதவத்தோர்பூசை
யவதாரந்தன்னிற்றம்மையறியலாதவிழ்ந்தவிழ்ந்து
நவமிறைகல்வியாணநன்னகரிவர்வாணாளின்
சிவனுறைபருப்பதப்பாற்சிவானந்தமொன்றோரன்பர். ௩

சாற்றருந்தவம்பொருந்திச்சமாதியோகத்தராகிக்
காற்றருநகங்கணீண்டுகாசினியுறப்பரந்து
மேற்றிகழ்கானங்கண்டுவெள்ளிவெண்கொடிகள்போன்
நீற்றுமெய்மறையரோமநிறையவேர்வீழ்ந்திருக்க. ௪

இத்தவர்க்கினியசீடரிவனைவிட்டேகாராகிப்
பத்திமோகத்தான்மூலபலமதுண்டிருக்குநாளின்
மெத்துகாந்தருவர்தங்கண்மெல்லியலாருந்தாமு
மத்தருவனத்தில்வந்தங்கன்பினாலாடுவாராய். ௫

சத்தியமுனிவர்வாழுந்தபோவனஞ்சார்ந்தவர்க்கண்
டுத்தமவெள்ளிவல்லியொழுங்குகொள்புதலோகல்லோ
வத்திறக்கொடிபல்கல்லன்றாந்தருப்பன்னங்காணே
ணித்திரைகொள்ளும்பொல்லா நெடுமுதுகரடியென்றார்.

இப்படிகேசரத்தாரியம்பியசொல்லையைய
ரொப்பியசீடர்களெவவர்களையுன்றிப்பார்த்து
வெப்பமாங்கோபமெய்திவீணையீர்காணீர்கொல்லோ
செப்பருந்தவத்தோரெங்கள் சிவானந்தமுனிவர்தேகம்.

அருமையானந்தமேனியதனைநீரவமதித்துக்
கருமைசேர்கரடியென்றகடியவிப்பாவத்தாலே
பொருவிலாக்கேசரம்போய்ப்பூதலம்புகுந்திப்பொல்லா
மிருகமாயுழலுமென்றுசபித்தபின்வீணையோர்கள். ௮

அஞ்சிவந்தடியில்வீழ்ந்தின்றடியரோமவைருணத்தால்
வெஞ்சநீர்கொண்டுசெய்தமிக்கசாபம்போமென்னா
ணெஞ்சுவந்தருள்வீரென்னநீர்கலியாணைஞ்சூழ்ந்த
மஞ்சணிவனத்திற்சென்றுவன்னியமாகிச்சின்றார். ௬

சரித்தபினவ்வனத்தோர் தவத்தர்சோமையரென்பார்
தெரித்தலோகங்களுய்வான்செனித்தவர்கையினம்பான்
மரிக்கிவிச்சாபநீங்குமற்றுநன்முத்திசேர்வீர்
விரித்தவிம்மாற்றமெய்யென் றுரைக்கவம்மிருகமானார்.

சென்றருங்கல்லியாணத்திருநகர்ச்சமீபக்காட்டிற்
றுன்றியங்கியங்கித்துய்யசோமையர்வரவுபார்த்து
நின்றிரங்கிடுநாளையர்நிமலர்சோமையர்பூசைக்
கின்றுமென்மலரெடுப்பமென்றந்தவனத்திற்சென்றார்.

செம்மலர்கொய்யும்போதத்திரண்மிருகங்கள்கண்டு
சொம்மையரிவராமென்றுசூழ்ந்துறநெருங்கிநின்றங்
கம்மறவிலங்கிலொன்றெம்மையன்கையினாலே
வெம்முடலொழிந்தானீங்குமெங்கள்சாபந்தானென்று.

சாபமதனைந்தவாற்றைத்தங்கண்முன்சனனந்தன்னை
யேவமதறமுன்கூறியிரங்கியேயிறைஞ்சிநின்று
நீபலதினமாவேட்டைநினைந்தமைக்கொல்லையாயின்
கோபமொன்றில்லாய்முத்திகூடுவெங்கூடுங்காலே. ௧௩

நிதிமணிவிமானமேறிநீயுநீணிலமுங்காண
வதிகமாநதிகொள்வேணியத்தனங்கயிலைசேர்வே
மிதுவுமெங்களைச்சபித்தமுனிவரரிசைத்தவாய்மை [ன.
கதியெமக்கருள்வாய்விண்ணோர்வணங்குநற்கழலாயென்

ஐயர்சோமையரச்சொற் றையமுற்றறிவானோக்கிப், பொய்யலவெனத்தெளிந்தேயவைகண்முன்பொருந்தப் பேசிச்,செய்யதஞ்சிவார்ச்சனைக்காஞ்செழுமலர்கொண்டுசென்று, மெய்யர்தம்மடத்திருந்து மற்றைநாள்வேட்டைசெல்வார். ௧௫

பச்சையொன்குப்பாயத்தைப் பசிதமெய்ப்புறவேசாத்தி
யச்செழுந்தூசுசென்னியார்த்தங்கைச்சிலையம்பேந்தி
முச்சுமவ்வனத்தைநோக்கிமுனிவிலாமுனிவர்வேட்டை
நச்சுவாராகப்புக்கார்நல்விலங்கினமுஞ்சூழ்ந்த. ௧௬

வில்வினையேற்றிப்போசைமிகவெழநாணெறிந்து
கொல்லுமாசரந்தெரிந்துகொண்டெழுவிலங்கினங்கள்
வல்லெனத்தம்மேற்செல்லவாளியொன்றொன்றிலொவ்
சல்லியமுதல்விலங்குசாய்ந்தவணிறந்தவாறே. [வோர்

வீணையர்வடிவமெய்திமெய்யர்சோமையர்தாளில்
நீணிலமுறப்பணிந்துநிற்கமேதினிவிமானஞ்
சேணிடைத்தோன்றவேறித் திருக்கயிலாயஞ்சென்றார்
மாணயமுனிவர்பார்த்தார்வனசரர்மகிழ்ந்துகண்டார்.

கண்டவர்காட்நொயுங்கயிலையிற்சென்றதிந்த
வண்டவர்பெருமையென்றார்மற்றுளசாபமாக்கண்
மிண்டியவனத்துவேடர்விடுங்கணைக்ககப்படாதித்
திண்டவர்கரத்தினாலே தினஞ்செத்தப்படியேசெல்ல.

அப்பெருவனத்துவேடரதிசயித்தெங்கையப்பிற்
றப்பியித்தவத்தரம்புதனக்கெதிர்நிற்பதென்றே
செப்பியிவ்விலங்கினங்கள்சென்றவாறென்றேவாரு
மொப்பிலம்முனிவர்தாமேவல்லதொன்றுனாப்பராகி. ௨0

பூவுருத்திராமிந்தப்பொருவிலாமுனிவரம்பிற்
சாவதென்வீணையோராய்த்தமனியவிமானத்தேறி
மேவருங்கயிலாயத்தின்மேவலெனிவ்வாறெல்லாந் [ர்.
காவலன்விச்சலன்பாற்கழறுதுமெனப்போய்ச்சொன்ன

விச்சலன்வரவதேவர்விச்சலபுரியோரெல்லா
மச்செயலறியவந்தாரவர்முனமந்தவாறே
யிச்சையம்பெறமேற்செல்லுங்கிரியைதிருபன்கண்டு
நச்சினான்றெழுதுநின்றானந்தனைவிலாதிற்பார். ௨௨

குருபதசேவையென்னுங்கோலகற்சரிகையாலே
மருவுமில்வாழ்க்கையிச்சைமனைவியைமாயச்செய்தும்
பரவுபிரிக்கமென்னும்பாரவெங்குந்தத்தாலே
கருமமாஞ்சராசரங்கள்கலங்கியங்கிறக்கச்செய்தும். ௨௩

ஈசனல்லானையாகுமெழிற்றருப்பரசினாலே
பாசவாதனைகளென்னும்பகர்புலிக்கணம்படுத்தும்
தேசுறுஞானமானசெய்யகட்கத்தினாலே
ஆசையஞ்ஞானவெய்யவடவிமேதியையடர்த்தும். ௨௪

துய்யநற்கிரியையென்னுஞ்சுடர்தருவாளினாலே
மையல்கொண்மாயாபேதவன்கலம்பினையறுத்து
முய்யநற்றியானவிட்டியொன்றினுமொழியாசன்மக்
கையுடைக்கரிகளங்கள்கட்டறக்காழ்ச்செற்றும். ௨௫

வீரமெய்ப்பத்தியென்னுமிக்ககட்டாரியாலே
யாரவெங்காமமாதியாயவெண்சினத்தைக்காய்ந்து
நேரில்சத்தியமதாகுநெடுங்கலைதவிடாமனின்று
பாரிலேடணைகளாயபாம்பினம்படவடித்தும். ௨௬

நேயநீள்சமயாசாரநெடியதோர்மரத்தாற்பாவத்
தீயகோணையைவீழ்த்துஞ் சிவனருட்சினேகமென்னுஞ்
சாயகஞ்சிலைகொண்டோடித் தாவுமிந்தியப்புள்ளெய்து
மேயநற்காட்சிவேலாற்றக்கசியங்கள்வீழ்த்தும். ௨௭

இம்முறைமாயாரூபமெனைத்தையும்வென்றதீரச்
சொம்மையர்க்கிதுவோபார மென்னவேதுதித்திறைஞ்
தம்மிலேமகிழ்ந்திருந்தார்தண்டநாயகர்கல்யாணத் [சித்
தம்முறைநீங்காராகிச்சொம்மையரருளால்வாழ்ந்தார்.

தெலுங்கச்சோமையர் புராணம்
முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம் - ௧௧௫௫.

---

உ

திருச்சிற்றம்பலம்.

தெலுங்கச்சோமையர் புராண

வசனம்.

தெலுங்கச்சோமையர் சிற்கனராகிய சிவபெருமானே சர்வகர்த்தாவென்னும்பொருட் டெளிவுடையர், மலமூன்றுமொழிந்தவர், ஜங்கமமூர்த்திகளிடத் தன்புடையர், தருமநேயர், சிவாசாரமுடையர், துரிதராகிய பாபிகளிடத் தெக்காலத்து நெருங்காதவர், இவைபோல்வன வின்னு நற்குணநற்செய்கைக ளனைத்துமுடையர், இவர் சிவபூஜைஜங்கமபூஜைகளைச் செய்யும்பொழுது அளவற்ற வானந்தத்தின்மூழ்கித் தம்மைமறந்து மகிழ்ச்சிமிகுதியோடு கலியாணநகரத்தில் வாழ்ந்திருக்குநாளில்.

சர்வகாரணராகிய சிவபெருமான்வீற்றிருக்குந் திருஸ்தலங்களிலொன்றாகிய பருப்பதமலையென்னும் ஸ்ரீசைலபர்வதச்சாரலில் சிவானந்தமுனிவர் தவத்திற்றொடங்கி சமாதியினின்று அவர்கைகால்களில் நகங்கள்வளர்ந்து அம்மலைச்சாரல் முற்றும் படர, மயிர்கள் மிகவளர்ந்து விபூதியைத் தூளனஞ்செய்திருக்கும் அவரது மெய்முற்றும்மறைக்க, இவர்சிஷ்ராகிய அநேகமுனிவர் கந்தமூலங்களையும் கனிகளையும் புசித்துக்கொண்டு அருகிற் பத்தியோடு பணிவிடைநோக்கியிருக்க வாழுநாளில்;

ஆகாயமார்க்கத்தில் கந்திருவர்கள் தமது மகளிருடன்சென்று அம்மலைச்சாரலில் விளையாடக்கருதி அம்முனிவரது தபோவனத்திலுற்று அவரைக்கண்டு இன்னவுருவமென் றறிதற்கரிதாய் இஃதியாது வெள்ளிக்கொடிகள் ஒழுங்குபெறப்படர்ந்த புதரோ, அன்றிக் கற்பாறையோ, இவ்விரண்டுமல்ல அன்றி மரமென்போமாயின் இலைகளையுங்காணோம், ஆதலால் கண்ணுறங்குமொரு பொல்லாத கரடியென்னுமிருகமே இதிலையமில்லையென்றார். இவ்வாறுகூறிய பலமொழிகளையுங் கேட்டிருந்த சிஷியர்களாகிய முனிவர்கள் அவரை யூன்றிப்பார்த்து மிகக்கோபித்து எம்மையர் சிவானந்தமுனிவரது திருமேனியைக்கண்டு அவமதி செய்து கரடியென்றபாபத்தால் உமது கந்திருவமேனிகெட்டு நீர்கற்பித்துரைத்த கரடியுருவமேதாங்கிப் பூமியில் வனங்களில் உழலக்கடவீர் என்றுசபித்தனர். பின் அக்கந்திருவரும் நடுங்கியம்முனிவர் திருவடிகளில்வீழ்ந்து சுவாமி முனிவர்களே எமது தெரியாமையே காரணமாகத் தம்மிடத்து இச்சகித்தற்கரிய கொடியசாபத்தை யேற்றனம், இது விமோசனமாகுநாள் எந்நாள் ப்ரதிசாபமும் வகுத்துரைக்க வேண்டுமென்று பிரார்த்திக்க,

மிருகண்டமுனிவர் இரக்கத்தால் சந்திருவர்களே, நீங்கள் கலியாணபுரிக்கைச்சூழ்ந்த வாரணியத்தில் மிருகங்களாக சிவரான்சன்னிதியில் அவ்வனத்தில் சோமையனென்றொருமுனிவர் உலகாண்மை காரணமாக ஜனித்தவர், அவர்சையனைப்பாலனிப்பிராயின் இச்சாபங்கிய மேல் முத்தியையுடைவீர்க ளாவீர்கள், அவருமப்படியே அசூக்கொன்று கலியாண நகரத்தைச்சூழ்ந்த வனத்திற் சஞ்சரித்துக்கொண்டு சோமையர் வரவுக் கெதிர்பார்த்திருக்கும்போது, சோமையர் ஆத்மார்த்தபூஜைக்கு மலர்கொய்தல்வேண்டிச்செல்ல, அப்போ இம்மிருகங்க ளவனைக்கண்டு இவரே சோமையரென்னும் பிரஞ்ஞையுடனெருங்கி அவற்றிலொரு மிருகமானது சோமையரைப் பார்த்துத் தமக்குற்ற சாபத்தின் காரணங்களைச்சொல்லி உமது ஸ்ரீ ஹஸ்தங்களால் எமதுதேகங்களொழியுமாயின் எங்கட்குச் சாபவிமோசனமுண்டாம், முத்தியையுமடைவேமென்றுசொல்லி இரங்கி வணங்கிநின்று எம்மைச்சபித்த முனிவாரு மிவ்வாறு பரிசாபம் வகுத்தனர். ஆதலால் எமக்கு நற்கதி யருள்வீரென்ன; சோமையரும் அச்சொற்கள் சத்தியமென்று தமது ஞானநோக்கத்தாற் கண்டுணர்ந்து அம்மிருகங்கட்கு அநுகூலமாக நயந்தேதிர்மொழிந்து பின் மலர்கொய்துசென்று அன்றுதினஞ் சிவாராதனையைமுடித்து மடத்திலிருந்து, மறுநாள் மிருகவேட்டைக் குச்செல்வாராய் தமதுதிருமேனிமுற்றும் விபூதியையுத்தூளித்து, பச்சைநிறச் சட்டையொன்று மேலேசாத்தி, அம்மாதிரியான மற்றொருவஸ்திரத்தால் தலைச்சாத்துமணிந்து, கைகளிலம்பும்வில்லுமேந்தி அவ்வனத்திற் சென்றனர். அம்மிருகங்களும் நெருங்கிச்சூழ்ந்தன. அப்போது முனிவர் வில்லிலவ்வானைத்து நாணையேற்றியெறிந்து குணத்தொனிகாட்டிக் கொல்லும் பகுதிய

வாய பாணங்களையேந்தி மிருகங்கள்மேற்செல்ல, மிருகங்களு
மெதிர்த்து முனிவர்மேற்செல்ல, முனிவர் ஒவ்வொருபாணங்க
ளினுல் ஒவ்வொரு மிருகங்களையுமெய்ய, அந்த பாணப்ரயோகங்
களால் அம்மிருகங்களெல்லா மிறந்து உடனே முன்னைய கந்தி
ருவவடிவத்தை யடைந்து சோமையர் திருவடிகளிற் பணிந்துநி
ன்று ஆகாயத்தில்வந்திருந்த தேவவிமானத்திலேறி ஸ்ரீமஹாகை
லாசம்போய்ச் சேர்ந்தன. அவ்வனத்தி லிதுகண்ட முனிவர்க
ளும் வேடர்களு மதிசயித்தனர். பின் வேடர் தங்களம்புக்ககப்
படாத விம்மிருகங்கள் இம்முனிவர்கையம்பின்மாண்டவகை மி
கவியப்பென்று சிந்தித்து இம்முனிவ... ரா மிருகங்கள்வந்தகா
ரணம்யாதோ, இம்முனிவர் வில்வித்தையில் தொன்றுதொட்டு
வேட்டம்புரியும் நம்மினுமாயிரமடங்கதிகர்; அன்றியுஞ் செத்த
மிருகங்கள் கந்திருவவடிவமடைந்து தேவவிமானத்திலேறிச்செ
ன்றன. இவ்வற்புதங்களையெல்லாம்நமதுராஜாதிராஜனுகிய விச்
சலமகாராஜனுக்கு அறிவிப்போமென்றுசென்று தெரிவித்தனர்.

இவ்வற்புதத்தைக்கேட்ட விச்சலராஜனும் மந்திரியாராகி
ய ஸ்ரீவசவதேவரும் அந்நகரத்திலுள்ளாரும் அம்முனிவரத தற்
புதச்செய்கையைக் காணவந்தனர். அம்முனிவரும் வர்த்தமா
னத்தைச்சொல்ல அரசன்முதலியோ ரதிசயித்திருந்தனர்.

அப்போது ஸ்ரீவசவதேவர் ஞானமாகிய வாயுதத்தினலே
அஞ்ஞானமாகிய மிருகத்தைக்கொல்லவல்ல இந்தச்சோமையரு
க்கு இம்மிருகவேட்டமு மொருபாரமோவென்று துதித்துவண
ங்கி யுபசரித்தனர். சோமையரும் முன்னைய முறைமையாகவே
கலியாணநகரத்தில்சிவகாருணியத்தோடெழுந்தருளியிருந்தார்.

தெலுங்கச்சோமையர் புராணவசன

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



## ஏகாந்தராமையர் புராணம்.



பேராதவமலகுணம்பெற்றபெருந்தோற்றத்தா
ரோராருந்திருநாமமேகாந்தராமைய
ராராதசிவநேயரப்பாலூரொனுந்தலத்திற்
சீராகவாழ்ந்திருப்பூசிச்சேசர்தொழுந்திருத்தாளார். க

உலகவுருத்திரனென்னுமுறையுடையாருக்கிரன்போல்
விலகரியவீரத்தார்விமலகுருவிருப்புள்ளார்
பலபரவாதனைத்துணிக்கும்பரசன்னார்பரஞானர்
நிலவியதஞ்சிவசமயநீதியேநிறுத்துவார். உ

வாதமுறுஞ்சமண்சமயமாசறுக்குமனத்தினர்
பேதமுறும்பவிச்சனத்தைப்பேணதபெருமையார்
நீதிதராமாயாங்கநெறிசெல்லாநெஞ்சினர்
நாதனெழுத்தஞ்சல்லானவிலாதநாவினர். ௩

அத்தனருச்சனையந்தத்தமலமதிராமைய
ருத்தமநற்கயிலேயில்வாழுருத்திரனுரோலக்க
மத்தியினற்றெரிசித்தங்கமர்ந்தசிவகணத்தோரைப்
பத்தியினற்றொழுதவனைப்பரிவினற்பரவியரோ. ௪

சங்கரன்மேனையத்தாற்றத்துவநற்சுகானுபவத்
திங்கிதத்தாலேகாந்தத்தினிதிலிருந்தின்புற்றே
யங்கமெலாம்புளகமெய்தியங்கணனார்கயிலையினும்
பொங்குநெறிப்புலியிடத்தும்பொருந்தியிவர்வாழ்நாளில்

வசவேசர்குருலிங்கமலர்ப்பதத்துவண்பத்தி
யிசைநீடுயேகாந்தராமையர்கேட்டின்புறு
நசைமேவிநந்திகளைநாங்காண்பமெனக்கடகந்
தசையாதநண்பினலவர்க்கண்டுங்க[illegible]ந்திருந்தார். ௬

வாச்சையர். சிவநாகமையர்.

மற்றுமொருபேரன்பர்வாச்சையனெனும்பேரார்
நற்றவஞ்சேர்நல்லசிவநாகமையனெனுநாம
ருற்றநண்பானந்திகளையொன்றியுய்வாமெனவந்து.
பற்றியமேனையத்தாற்பரவிமகிழ்ந்துடனிருந்தார். ௭

ஏகாந்தராமையர்புராணம்
முற்றுப்பெற்றது.
ஆக திருவிருத்தம் - ௧௧௬௨.

௨

திருச்சிற்றம்பலம்.

ஏ கா ந் த ரா மை ய ர் பு ரா ண

வ ச ன ம் .

உலகத்தில் நிருமலகுணாதிகத்தினால் பெருந்தோற்றமுள்ளவர், சிவநேயர், அப்பாலூரென்னூர் தலத்தில் வாழ்பவர், பூ

லோகவுருத்திரரென்று யாவராலுந்துதிக்கப்பெற்ற புகழுடைய வர்; வீரபத்திரர்க்குச் சமமான வீரமுள்ளவர், இராமதவாதிக ளாகிய யானைகளுக்கு அங்குசம்போன்றவர், சிவச்சின்னங்களை த்தரிக்கப்பெறாத பவிகளை விரும்பாதவர், சிவபெருமானது ஸ்ரீ மஹாபஞ்சாக்ஷரமல்லது மற்றொன்றும் புகலவறியாதவராயினர் ஏகாந்தராமையரென்னும் பெயருள்ளவர்.

இவர் நித்தமுந் தாஞ்செய்யுஞ் சிவார்ச்சனைமுடிவில் ஸ்ரீம ஹாகைலாசத்திலெழுந்தருளிய சிவபெருமானது திருவோலக்க ந்தெரிசித்து, அவ்விடத்தமர்ந்த சிவகணங்களைத் தொழுது துதித்து, மற்றைய வ[illegible]ள பரிவாரங்களையுந்துதித்துப் பின் ஏகாந்தமான ஸ்தலத்திலிருந்து தியானித்து, சிவாநுபவசுகமே லீட்டால் தமதுதிருமேனிமுற்றும் புளகாங்கிதராயிருந்து பின் ஸ்ரீகைலையினின்றும் பூவுலகிற்செல்வர். இவ்வாறேவாழுங்கால த்தில் ஸ்ரீவசவதேவர் குருலிங்கஜங்கமங்களிற்புரியும் பத்திமை மிகுதியைப் பெரியர்பலர்புகல ஈரடோறுங்கேட் டானந்தபரவச ராய் ஸ்ரீவசவதேவரையுந் தெரிசித்துத் தளராநண்போடு அவ் விடத்தமர்ந்திருந்தனர்.

அன்றியும் வாச்சையரென்னுமொரு சிவபத்தரும், அன்றி யும் சிவகாகையயரென்னு மொரு சிவபத்தரும் ஸ்ரீவசவதேவரி டத் ததிகநட்புடையராய் அங்குச்சென்று உய்வோமென்று கரு தியவந்து தரிசித்துத் துதித்துக் கலியாணபுரியில் மகிழ்ச்சியொடு உடனிருந்து வாழ்ந்தனர்.

ஏகாந்தராமையர் புராணவசன

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருக்கூட்டச்சருக்கம்.



## சங்கமப்பிராணியானபுராணம்.

நந்தியாரருணற்றவர்பூசைநண்ணிமுற்றியபின்புதாங்
கசிந்து, புந்தியாவலாலிட்டலிங்கத்தைப்போதவின்புறு
பூசனைசெய்வா, ருந்திமேலிடும்பரவசமதனாலும்பர்கோ
ன்றனையொழிவறநோக்கிச், சிங்[illegible]ாருநற்சிவானந்தவெ
ழுதஞ்சென்றுசென்றுறத்தெவிட்டிடாதருந்தி. க

பரிவினாலடிக் கடியுபசாரப் பரிசஞ்செய்தனற் படு
மெழுகினராய்ப், புரியுநேயமேபொருந்தியுண்ணெக்குப்
புளகமெய்யராயையர்தாம்புலம்பி,யரியமேனியின்குண
ங்களொன்றின்றி யதிகவானந்தராகமேலரும்பி, யுரிய
தோத்திரங்கண்கணீரொழுக வோதியோதியன்புதநியு
ளூறுங்கால். உ

என்றுமெய்திடாச்சங்கமர்புநியோ ரெய்திநந்திகளிரு
ஞ்சிவார்ச்சனையி, னென்றுசெய்தியைத் துவாரபாலக
ராலுணர்ந்துநீங்கவவ்வுத்தமருடனே, சென்றடைந்து
நண்டநாயகனார் செய்யவாவியச்செய்தியாலுடல, மின்
றகம்பமதென்னவேயோகசித்தரானந்தநிலையராயிருந்
தார். ங

புதியமெய்த்தவத்தம்பிரானிடத்தே புக்கவாருயிர்புற
ப்படாதாகி, யதிகசங்கமாராதனைப்பத்தி யமுதருந்துவா
ரத்தவரடிக்காம், விதியினென்றியங் கரங்களாற்செய்யு
மேவுசெய்கையுமெல்லெனவொழிந், துதியுநாவிடைமற
ந்திருகண்ணீர் தொலையவப்பெருஞ்சோதியுட்டங்கி. ௪

நான்றவூசலின்கயிறற்றுப்போனவன்னுடம்பிந்தியங்கர
ணங்களடங்கிச், சான்றவன்விழிக் கதிர்களுமவன்பின்
சாருந்தன்மையபோற் சுருங்கமாடிசுகி, மூன்றுசிந்தையினு
டனறிவினைத்து மெய்க்காவியுட் புறம்பொன்றையுமறியா,
தூன்றவெட்டிடுத ரிதயவெப்புயமே யவர்பதாம்புயமாகவ
ங்கழுந்தி. ௫

மண்டொளுதவற்புதவனுபவத்து மன்னிமேனிமிர்ந்
திருந்துபேரின்பங், கொண்டருட்சிவயோகமுத்திரையு
ட்குலவுநந்திகள் குறிப்பினையறிவாற், கண்டுமெய்ச்சென்
னவசவேசர்பணிந்துகழறுவார்சற்றுங்காண்பரிதாய்நீர்,
மொண்டமிழ்ந்தநற் கடமெனச்சோதி மூழ்கியேபுறமு
ன்னலாச்சுகமோ. ௬

பாசமித்திரைநீங்குபேரின்பப் பரமசித்திரைநந்திய
ன்றுசான், வீகமத்திரையற்றதோர்கடற்கால்விரவிடாத
விளக்கெனவசங்கா, தாசைமெத்துமிந்தியமெலாமகன்
றேயருமேகங்களற்றவின்போன்று, நேசநற்சிவானந்
தமிக்கியத்துமைக்கமகத்திருந்தனமறந்தனரே. ௭

யார்க்களித்தறிவிக்கு மறிவெனும்பிரசாதமார்நிலையோ,
மறுவிலாதவவ்வறிவிலுற்றுடல மனமுறுந்தொழின்மற
ந்திருப்பதுவோ. ௰௧

என்றுதங்குருநந்திகடிருமுனிலறைஞ்சியேசென்னவச
வேசரோதி, நின்றுநெஞ்சமுமுடலமுமுருகிநேயமெய்
யராயநீரவிழிதது மபித், துனறுமேனியி லுரோமங்கள்
சிலிர்தத் தோன்றலாப்பெரும புளகமேற்றுன்றி,
யொன்றிடும்பரவசத்தானையைய முற்றசித்தராயுலாவுமக்
காலை. ௰௨

வேறு.

இந்தநெறிகலியாணந் திருக்கும்பத்த ரிருமைசெறிந
வதநோக ளெல்லாங்கேளா, வந்தீணந்துவசவேசர்பூ
சைக்காலை வந்தசிவயோகநிலைமகிமைகண்டு, தந்தமில
ற்புதமெய்தி யிந்தத்தன்மை சார்ந்தகாரணமதனைத் தம்
முளாய்வார், முந்தியநட்பினரறிஞர்துவாரபாலர் முத
லோரையழைக்கவவா முடுகிவந்தார். ௰௩

வேறு.

இங்குவசவேசர்சிவபூசனையிலின்பாற்
பொங்கமகிழ்போதெனபொருந்துசெயனும்பாற்
றங்கியவர்போனவர்சடக்கெனவறிந்தே
யெங்கண்முனமிங்ஙனமியம்பிடுமினென்ன. ௰௪

மற்றவர்கடம்மிலுயர்வாயிலுறுகொல்ல
ருற்றசெய்தியொன்றுளதுனைக்குதுமதென்று
நற்றவரொருத்தரொமைநண்ணியெதிரின்றார்
வெற்றிவசவேசருறுவேலையெனவென்றார். ௰௫

நித்தசிவபூசனைசெய்கிட்டையிலடைந்தே
யொத்தசுகமேவியயர்வுற்றுறைகின்றா
மெய்த்தவவெனப்பெரியர்மீளவுநடந்தா
ரித்தனைகனமயாமறிவதென்றெ[illegible]சத்தார். ௰௬

துய்யவுரையங்கணவர்சொன்னளவினல்லோ
ராயவசவேசரவசத்தறைதிறந்தே
யையவவர்சொல்விரதபான்மையறிவேநாஞ்
செய்வதிதுவென்னவெதிர்சென்னவசவேசர். ௰௭

இந்தமுறைமெய்யடியனென்றறிவனென்று
வந்தனைசெய்தவ்வுரைவகுத்துமொழிகின்று
ருந்தியவிலிங்கவுயிரோதுகுருலிங்கம்
பந்தமறுபத்தர்கள்பரிக்குமுயிர்பன்னின். ௰௮

வேறு.

பொங்கருநண்பாலென்னைப்போதிக்குநந்திக்கென்றுஞ்
சங்கமமுயிரிதற்குச்சங்கமேசுரனேசான்று
துங்கநம்பாததீர்த்தந்தூயசேடத்துநேயந்
தங்கியபெரியோர்கிட்டைத்தன்மைகீர்வல்லீரொன்றார்.

அப்படி தப்பாதிந்தவரும்பிரமாநதிட்டை
யொப்பவும்வாக்கினுமேல புணைக்கவுமுறைத்தாற்போலத்
தப்புதலின் றிசன்றுய்ச்சரிக்கவும்வல்லநந்திக்
கிப்பட்டிமிதிலொப்பாரில்லையென்றேநதினுரால். ௨௰

நந்திகள்சிவபூசைக்கணயந்துறுங்காலைவந்து
சந்தியாதேகுந்துப்பசங்கமாநமமைநேடிப் [த
புந்தியால்வணவிக்கொண்டு போதுமென் றுரைக்கத்தா
ரந்திவாணனையமெய் ''ந லயமடங்கஙெ்ளங்கும். ௨௧

ஓடினர்தேடிக்கண்டங்குவப்புடன்வணங்கிமன் று
ளாடியாரனையார்தமமையழைத்துவந்தருந்தவத்தோர்
கூடியகுழுவிற்கொண்டுகுறுகலுமாவிபின்றி
வாடியவசவதேவமொழுந்தனாவணங்கிநின்ருர். ௨௨

மன்னுமாசபையிருந்தமாதவரனைத்துளோரு [ருர்
மன்ன வெம்பெரியோர் செய்யுமருந்தவமென்னேவென்
பின்னமொந்தண்டநாதாபெருமையேபிறங்கவேத்தி
மின்னவெரிமாடநீடுதம்ம மேவிச்சென்ருர். ௨௩

சங்கமப்பிராணியான புராணம்

முற்றுப்பெற்றது.

---

ஆக திருவிருத்தம் - ௧௧௮௫.

உ

திருச்சிற்றம்பலம்.

—*—

# சங்கமப்பிராணியான புராண

# வசனம்.

ஸ்ரீவசவதேவர் ஒருநாள் ஜங்கமபூஜையை முதலிற்செய்து முடித்துக்கொண்டு, பின் இஷ்டலிங்கபூஜை செய்வான்றொடங்கிப் பூதசுத்தி யந்த்ரயாகங்களைத்தொடங்கி முடித்துப் பின் பகிர்யாகமென்னும் புறத்திற் பூஜையையும்முடித்துப் பூஜாவசானகாலத்தில் நிஷ்களசகளரூபங்களைத் தியானித்துத் துதித்து வணங்கி யானந்தபரவசரா னமையானந்தமே மேலரும்பிய தென்னத் திருமேனிபுளகித்து உள்ளுருக்குருகி ஆனந்தபாஷ்பமென்னுங் கண்ணீர் தாரைதாரையாக வெள்ளங்கொண்டோடப் பத்திக்கடலில்மூழ்கி யிருந்தனர்.

இவ்விதமான சிவபூஜைவேளையில், என்றைக்கு மங்குவரப் பெறாத புதியர் ஜங்கமமூர்த்திகளொருவர்வந்து ஸ்ரீவசவதேவர் சிவார்ச்சனைநிஷ்டையி லிருக்குந் செய்தியைத் துவாரபாலகரென்னும் வாயில்காப்போரா லுணர்ந்து அவ்விடத்தினின்றுஞ் சென்றனர். சிவார்ச்சனைநிஷ்டையிலிருந்த ஸ்ரீவசவதேவரதுபிராணவாயுவும் அவ்வுத்தமமான ஜங்கமமூர்த்திகளுடன் சென்றடைந்தது. அதனால் அவரது அருமைத்திருமேனியுந் தாணம் போலசைவற்றுநின்றது.

அந்தப் புதியராய ஜங்கமமூர்த்திகளிடத்துப் புக்க இவரது உயிரானது வெளிப்படாததினால், ஜங்கமாராதனையில் தமது திருக்கரங்களாற்செய்யும் நன்முற்றலோடு இன்சொல் இன்முகமும், நாவினிடத்துத் துதியும், கண்களி லானந்தவெள்ளமும் ஒன்றுமின்றிக் கயிறற்றஊசல்போல இந்திரியங்கள் கரணங்க

ளெல்லாமடங்கிச் சான்றவனாகிய சூரியன்செல்லக் கிரணங்களுமவன்பின்செல்வதுபோல வப்புதியஜங்கமரது திருவடியி லூன்றியசிந்தையுடன் அறிவனைத்துமொடுங்கி உள்ளும்புறம்பும் ஒன்றுமறியாது அஷ்டதளபத்மமாகிய இருதயபத்மமேயவரது பாதபத்மங்களாகவமுந்தி, அளவற்ற அற்புதானுபவத்தில் நிலைபெற்று மேலோங்கியிருந்து பேரின்பத்தையடைந்து திருவருளால் வலிதினெய்திய சிவயோகமுத்திரையில் ஸ்ரீவசவதேவர் பொருந்துங்குறிப்பை,

ஸ்ரீசென்னவசவேசர் தமது பேரறிவா லுணர்ந்து பணிந்து, எம்முடைய ப[illegible]ரியனாகிய ஸ்ரீவசவதேவர் அசைவற்று இவ்வாறு நெடும்பொழுது தியானித்திருக்குங் காரணம் யாதோ? ஜோதிர்மயமான சிவத்திற்கலந்து புறநோக்காத பேரின்பமோவென்று பலவாறுகத் துதித்து வணங்கி நெஞ்சோடு உடலுமுருகிக் கண்களில் நீர்ததும்பி உரோமங்கள் சிலிர்க்கப்பெற்றுப் பரவசராய் ஐயமுற்றசிந்தையுட னிருக்குமிடத்து,

இந்தவதிசயத்தை அந்தக் கல்லியாணநகரத்தி லெழுந்தருளிய பத்தர் சரணர்முதல் யாரும் கேள்வியுற்று விரைந்துவந்து ஸ்ரீவசவதேவர் பூஜையில்நேரிட்ட சிவயோகமகிமைநிலைமையைக்கண்டு தந்தம்மில் அற்புதமடைந்து இதன்காரணமறியவேண்டினராய், அவரில் ஸ்ரீவசவதேவர்க்கு ப்ரதானநட்பினராய அறிஞர் துவாரபாலராய வாயில்காப்பாளர் முதலியோரை யழைப்பித்து இங்கு ஸ்ரீவசவதேவர் சிவபூஜைநிஷ்டையி லெழுந்தருளிய காலத்து நடந்தகருமங்கள் யாவை, இந்தஸ்தலத்தில் உம்மிடத்து யாரேனும்வந்து தங்கி வார்த்தையாடிச் சென்றவருண்டோ அதை விரைந் தெம்மிடத் தறிவிப்பீரென்று புகல, அவ்வாயில் காவலரிற் சிறந்தவரொருவர் அங்குக்குழுமிய பத்தர் சரணரை

நோக்கி, சுவாமி ஒருசெய்தியுண்டு என்னெனின், இவ்வுலகத்து என்றுங்கண்டறியாத வற்புதத் திருமேனியுடையராய சாமூர்த்திகளொருவர் எம்மிடத்துவந்துநின்று ஸ்ரீவசவதேவர் யாதுபுரிகின்றனரென்றுவினவினர். அதற்கு அடியேங்கள் ஸ்ரீவசவதேவர் சிவபூஜைநிஷ்டையிலெழுந்தருளிப் பரவசத்தினராயிருக்கின்றனரென்றுத்தரம்புகன்றேம்; அம்மூர்த்திகள் யாதும்புகலாதுசென்றனர் இது யாமறிந்ததென்றுபுகல, இதைக்கேட்டவர் யாரும் ஊகித்து இனிச் சிறிதுந்தாமதாது அவர் நிஷ்டைபுரியும் பூஜாக்கிரகத்தைத்திறந்து அந்நிஷ்டையின்றன்மையறிற்றெனவறிவேம், இதுவேசெய்யற்கக்கது என்று ஆலோசித்து, எதிர்நிற்குஞ் சென்னவசவேசுவரரோ ஸ்ரீவசவதேவர்க்கு மெய்யடியர் அவரோ யறியவேண்டுமென்றுசொல்ல, இதுகேட்ட சென்னவசவேசுவரர் அடியர்குழுவைநோக்கி உலகத்தில் குருலிங்கஜங்கமங்கள் பத்தர்கட்குயிரோயாம், எமதுகுருவாய ஸ்ரீவசவதேவர்க்கு ஜங்கமமேயுயிர், இதற்கு ஜங்கமேசுவரரோ சாக்ஷியாகும், பெரியோரதுதன்மையை நீவிர் இயற்கையானேயறிவீர். இப்பிரமாதநிஷ்டை அவ்வண்ணம் புகல்வதற்குங் கூடாது. ஆதலால் இங்குவந்து மீளச்சென்ற சாமூர்த்திகளைக்கண்டு அவரைப்பின்சென்று யாமுணர்வதே முறைமையென்றார். உடனே யறிஞர் பலருந் தூதரையேவிச் சாமூர்த்திகளைத் தேடச்சொல்ல, அத்தூதுவரும் தேவாலய மடாலயங்கள் எங்குமாராய்ந்துதேடி நடேசரேயென்றநுமானித்து அப்பெரியரைக்கண்டுபணிந்து நடந்தனவனைத்தும் விண்ணப்பம் புரிந்து மகிழுச்செய் தழைத்துவந்து அடியர் திருக்கூட்டத்திற் சேர்ப்பித்தனர். சேர்ந்ததுவாயிலாகவே ஸ்ரீவசவதேவரும் உயிர்பெற்றெழுந்து வணங்கி நின்றார்.

அங்குச்சென்ற பெரியர்யாரும் இப்புதிய சரமூர்த்திகளது திவ்வியசத்திக் கதிசவியப்புற்று இப்பெரியரது தவம் எத்தன்மைத்தெனவியந்து ஸ்ரீவசவதேவரது பெருமையையுந் துதித்துப் பின்னர் தமதுதமது திருமடங்களிற்சேர்ந்து வாழ்ந்திருந்தனர்.

சங்கமப்பிராணியான புராணவசன
முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## இன் [illegible] யர் புராணம்.



இன்னநாளில்வசவதேவரிட்டமானநண்பராங்
கின்னரையருடலகன்றுகிரிமினத்ராடியுற
வன்னநண்பர்பெருமைநாடிவசவராசரன்பிறன்
முன்னருந்துயர்க்கடற்குண்மூழ்கிலைநந்துமொழிகுவார்

என்னையாமெனக்குநல்லவின்பமேயெனுவியே
யென்னையாளுமெம்பிரானெனைத்தெருட்டுதேசிகா
வென்னையாவிசோரவிங்கிருந்திபெங்கணைந்தனை
யென்னையானினிச்செய்கெனனக்கிசைந்தசெல்வமே.

பரிசவேதியேதருப்பணைத்தெழுந்தசோலையே
யுரியகாமதேனுவேயுயர்ந்தசங்கநிதியமே
மருவினோர்கினைத்தகல்குமணியொடானவனசமே
பொருவின்மேருவேயருட்பிறந்தநல்லபூமியே. ௩

விரும்புநல்லசுற்றமேயென்மெய்க்குலத்தர்தெய்வமே
திருந்துபத்திமேவிதஞ்செறிந்தநன்விதானமே
பெருந்தவத்தர்நாதனேபிஞுகியென்னைவிட்டெனைப்
பரிந்தழைக்கநீயகன்றபான்மையென்னபான்மையே. ௪

நம்பனன்பகின்னரப்பிரமையாநலங்கியா
னிம்பரொன்புனைந்திருக்கவென்னைவிட்டகன்றுநீ
யும்பர்கோனையுற்றதென்னவுத்தமாவெனக்குறுந்
தம்பமேயுனைப்பிரிந்த [illegible]மியனேனை[illegible]னைவையோ. ௫

பிரமஞானவமுதமேபலிப்பெனக்குநீயலோ
திரமதாகவென்மனந்திருந்துசோதிநீயலோ
வரமலோவெனக்கணீர்மருந்துமாரிபோல்விழுந்
துரமிழந்துவசவதேவருடன்மறந்தவுணர்வராய். ௬

ஐயர்கின்னரப்பிரமராறிவையுமகந்தைதீர்
துய்யசொல்லையுமனந்துலங்குதூய்மைதன்னையு [ய்ச்
மெய்மையையும்விரும்பியங்கி மேவுவெண்ணெயென்னலா
செய்யமேனியுருகியேதியங்கியுண்மயங்கலும். ௭

வசவதேவர்துயரமெய்திமனநடுங்குமெல்லியி
னிசைநிறைந்தசங்கமேசரெங்கணுநிறைந்துளோ
ரசைவிலாதசிவமதமணைந்தருந்திறற்செயும்
விசையரானமாச்சிதேவர்விளையலங்கிலாரதென். ௮

வேறு.

படியாரிப்பாச்சையனைப்பார்த்தழுத்துட்பரிவினுன்
மடிவாலமாச்சையனைவணங்கியிந்தவாறெல்லாங்
கடிதோடியுரைத்தவனைக்கடிதுகொண்டுவருதியென்று
ரடிவேகத்தேகியவரடிக்கயலந்தாழ்ந்தரோ. ௯

இந்தவுரையியம்பவுறிக்கெழுநிறவத்தர்மாச்சையர்
வந்தவராரவ்விடத்தில்வசவேசர்செய்வதுவென்
சந்தமுறவுரைத்தியெனச்சகளேசமாதரசர்
முந்தையர்தாமகத்தர்பெருஞ்சமுகத்தினைந்தியார். ௰

பிரமையர்தந்திருவுருவைப்பிரியாமலணைத்துக்கொண்
டிரமமதொன்றுமின்றியவிழுந் துருகுகின்றுமொன்றலுமே
வரமிகுத்தமகத்தோர்முன்வாடியழும்வருத்தமெ
னரதவத்தோர்தமக்காவியரனைத்தெல்லாமிவ்வளவோ. ௰௧

சங்கமந்தமுயிரொன்னுஞ்சாற்றெலாமிவ்வளவோ
சங்கமந்தங்கதியென்னுஞ்சற்குணமுமிவ்வளவோ
சங்கமந்தமதியென்னுந்தருக்கெல்லாமிவ்வளவோ
சங்கமந்தங்கரத்திலிங்கர்தானெனுஞ்சொலிவ்வளவோ.

பிடித்தநிட்டைமறந்துடலைப்பேணியின்றுபற்றினரோ
வடித்தபத்திமயராகி வளம்பெறுஞ்சொல்வகுத்திருந்து
படித்தவுரையறியாமற்பரிந்துயிலைப்பரிந்தனரோ
துடித்தபத்திதலையேறிற்சொல்லிமற்றுஞ்சோர்வரோ.

அதிகதவர்க்கதிகதவரருணெறிசேர்பிரமையர்
மதிகலத்தாலானவனைவரவழைக்கவழக்கன்றோ
நதிமுடியானிடத்தணைந்தநன்மையெனநயந்துகந்து
புதியபெருமகிழ்ச்சியுடன்புளகிக்கும்படியலால். ௰௪

அழுவதுவென்விழுவதுவெ னங்கோவென்றரற்றுவதெ
னெழுகுகண்ணீர்மாறுமனுற்றுகச்சாப்பதுவென்
பழுதிலத்தனன்பர்முனம்பத்தர்செயும்பான்மையோ
நழுவுநெறியுலகத்தோர்நண்ணுதொழிலைமக்கதெனா. ௰௫

ஆயிடைவந்தவர்துயரமாற்றறியேமருங்கண்ணீர்
நேயமுடன்றுடைக்கறியேநெடிதுயிர்க்கும்படியறியேம்
வாயதனாற்பகர்ந்திட்டைமறந்தோரைப்பாரோநீ
போயவர்கள்செயுந்செயலைப்புகுந்தியற்றப்புகலென்று

பணித்தளவிற்படியாரிப் பாச்சையர்வினாந்துவந்தங், கணித்தொகையாமருந்தவத்தோர்க் கஞ்சலிசெய்தஞ்சியே, துணிந்தவர்சொல்வைராகஞ் சொன்னளவிற்றமதுநிட்டை, கணித்துவசவேசருயிர்பிரமையர்பாற்கலந்ததால். ௰௭

கலந்தளவில்வசவேசர்காயத்தைக்கண்டெல்லோர், புலந்தமுகராயிதென்ன புதுமையெனப்புலம்பியே, வலங்கொணிட்டைமடிவால மாச்சையர்சொற்செவியுறலும், விலங்கலின்றித்தமதுயிரை விட்டதனை வியந்தயர்வார்.

மாச்சையரோவன்மரிட்டைவருத்துரைக்கவல்லரந்தப்
பேச்சரியநந்திகளிப்பெருமைசிவனையறிவன்
வாய்ச்சொல்லேயென்றியிந்தமாபத்திவல்லவரா [ர்.
ரோச்சுடலம்விரும்புநமக் கிதுவெளிதன்றெனவுரைத்தா

பார்ப்பதற்குமுறைப்பதற்கும்பாவிக்கும்படியதற்கு
மார்க்குமிதுசெயவரிதாலாகராவெனத்தொழுதார்
நேர்த்துநின்றபடியாரிப்பாச்சையனாகின்றநல்லோர்
சீர்த்திமடிவாலையற்குச் செப்புகெனச்சென்றுரைத்தார்.

வே று.

கேட்டபொழுதே மாச்சையர் கிளர்ந்தவின்பமனத்த ராய்க், கோட்டமறுநற்சங்கமமே குலவுமுயிரொன்றுரை த்தவுரா, நாட்டவல்லநலதீராநமுவாவிரதநந்தியே, யா ட்டமொழிந்தமணிவிளக்கே யரனோர்க்கினிதாமன்பனே.

என்றுபுகழ்ந்துமாச்சைய ரொழுந்துவர்தமொனுமரங்க ள், பொன்றமுறிக்குங்கடகளிறே பொருந்தாரொன்னுங் கரிக்குழுவைச், சென்றுமுறிக்குஞ்சிங்கமோ சிவத்துரோ கச் சிலோச்சரயங்கள், குன்றவடிக்கும் பெருங்காற்றே கொடியவினையின்கூற்றமோ. ௨௨

தக்கன்வேட்விதகர்த்தவனே சமனையுதைக்குந்தாளி னனே, பொக்கவெறியாம்பெருங்காட்டைப்பொடியாயெ ரிக்கும்பொங்கழலோ, தொக்கபுரத்தையெரித்தபரன் கு

லாயுதமோசுடர்மழுவோ, மிக்கவீரவிருதகலா விமலன் கணத்துளொருவனே. ௨௩

என்னநடக்துசிவகணத்தோ ரிருக்குமவையிலிறைஞ் சியெழுங், கன்னர்பாதம்பிடித்தவர்த மத்தம்பாலமனை த்ததற்பி, னுன்றுமவர்நாளுள்ளங்கொண் டுந்தாங்கொ ண்டுறுதிகொண்டு, மின்னனையருக்கினைந்து மாச்சிகே வர்கினத்துவார். ௨௪

பத்தருயிரோமெய்ப்பொருளோ பத்திமணியாகந்திெய னு, முத்ரமனைநீபுடன்கொண்டீங் கும்பர்கோனையுறலா மோ,வித்தனையின்மேலரன்பெருமையெங்குநிலைத்துக் காட்டாதே,சித்தமிருவீர்களும்பொருந்திச்செல்லும்படி தான்செல்லுமோ. ௨௫

சிவபாகணத்தோரதிபாமற்சிவனுக்குமைக்கொண்டே குமதெ, னவமாமூன்றுவிதபத்தி நயக்கவளர்க்குநந்திக னைத், தவமாகேசரிடத்தகற்றிக் தன்பாற்கொண்டுசார்த னன்றே, புவிமேற்றனது பெருமையார் புதுக்கிநின்று பொலிவிப்பார். ௨௬

நந்தியகன்றுன்மண்மீதி னட்பானன்பின்பேரகலு, மிந் தமுறையானும்மனத்தி னிச்சைப்படியே செலவொண் ணு, புந்திமகிழ்ந்துநந்திதனை பொருந்துங்காலமெல்லா

நீர், சிந்தைமகிழ்ந்தங்குடனிருப்பீ ரொழுவீரென்னத்தெ
ளிந்துரைத்தார். ௨௭

தனுமெல்லெனவேயசைந்தசைந்துதவக்கின்னரையர்
சயனக்கண், கனவுதெளிந்தங்கெழுவார்போற்கடிதினெ
ழுவக்கணத்தினிலே, மனமாதிடத்தர்மாச்சைசயர்மலர்த்
தாள்மீதில்வசவேச, ரனகாவெனமு னெழுந்திறைஞ்சி
யருகிற்றவத்தோரடிபணிந்தார். ௨அ

எழுந்தவிருவோர்களுமகத்தோர்க் கிறைஞ்சிநின்றுரி
ருந்தவத்தோ, ரொழுங்குதிராமாச்சைசயனா யுவந்துபுவ
னியுருத்திரா, வழுந்துவீரதவந்திரா வருளாகரனேயற
முதல்வா, வெழுந்தகுரசிங்கார மெழிலாபரணமெனவு
டையாய். ௨௯

ஊறுதியுளாக்கிற்கோபியா யுவந்தவிடத்தி லுயிரளிக்
கு, மறுதிமானே யசஞ்சலனே யரியசீலமாதரிப்போய்,
பெறுதிசிவமே யெனத்தெளிந்திவ் வுலகநீதிபேணுதா,
யிறுதிவரினுஞ்செய்யாத தென்றுஞ்செய்யாவெண்ணத்
தாய். ௩௰

மாறுநலத்த வெலற்கரிய மடிவாலைய வெனப்பெரி
யோர், கூறுகின்றாரவர்தம்மைக்கும்பிட்டேத்திக்கொடி
யேனேத், தேறுவென்னையொருபொருளாய்ச்செய்யும்ப

டியெனடியனே,னேருவிண்ணப்பந்தருவீரென்றுநின்ற
ங்கிறைஞ்சினர். ௩௧

இறைஞ்சியதற்பின்வசவேசரொழிலார்முகத்தையெதி
ர்நோக்கி, நிறைந்ததவத்தோர்புகல்கின்ருர்நிதியங்கொ
டுக்கலாமுடலந், செறிந்தகொடுக்கமுடியாதுசெயலா
ற்கொடுக்கலாமனத்தைப்,பிறிந்தகொடுக்கமுடியாதுபி
ரியமதனைப்பிடித்திடலாம். ௩௨

மருவுமுயிரையளிக்கொணுவைராக்கியத்தாற்கொடுக்
கலா,மருவுமுயிர்சங்காரந்துடனேயகன்றுலகறவணவு
ற்றால், வருதலிந்தநந்திகட்கே வருமென்றெந்த வசவே
சர், பருவினிறைஞ்சி யிம்மொழிக்குப் பற்றேனடியே
னென்றிருந்தார். ௩௩

இருந்தபெரியோரிருவரையுமேத்தித்தமிடத்தணை
ந்தார், திருந்துதவத்தர்மாச்சையர்வசவேசுரரிற்செல்வி
டுத்தே, பொருந்துபுகழ்த்தம்மடம்புகுந்தார் கின்னரை
யர்தம்புனிதவகம், பெருந்தன்மையராய் மகிழ்ந்துற்றார்
மடிவாலையர்சீர்பேசியே. ௩௪

கின்னரையர் புராணம்
முற்றுப்பெற்றது.
ஆக திருவிருத்தம் - ௪௨௧௯.

திருச்சிற்றம்பலம்.

—*—

# சின்னையர் புராண வசனம்.

இதற்குப்பின், ஸ்ரீசைவதேவர்க்கு உற்ற நண்பரான சின்னையரென்பவர் தேகவியோகமடைந்து சிவனது திருவடிகளையடைந்தனர். இதுகண்ட ஸ்ரீசைவதேவர் அந்நண்பரது மிதமற்ற பெருமைகளை எண்ணியெண்ணித் துயரக்கடலினமிழ்ந்தி மனநெக்குருகி எம்மையனே, எம்மின்பவடிவமே, எமதாவியே, எம்மையாளும்பிரானே, எம்மைத்தெளிவித்த நேசகனே, ஆவிசோர்ந்துருக விங்கெம்மையொழிந்தெவ்விடத்துற்றாய், எமது செல்வமே யாமினியென்செய்வோம் என்றின்னும்பலமுறை பிரலாபித்து, இடையின்றிக் கண்ணீர் தாரைகொண்டுபெருக வலிமையாவுங்குன்றி யுடலையுமறந்து சின்னையரது அறிவினையும் பணிந்தசொற்களையுந் தூய்மையையுஞ் சத்தியத்தையும்விரும்பி அழலிற்பட்டவெண்ணெய்போலாய்த் திருமேனியுருகிவருந்தித் திருவுள்ளமருண்டவளவில், அவ்விடத்தெங்ஙனும்நிறைந்த ஜங்கமமூர்த்திகளெல்லாருங்கூடி எவருமிரங்கத்தக்க இக்காலத்து எல்லோரும்வந்தனர். சைவமதஸ்தாபனத்தில் வெற்றியடைந்த மாச்சிதேவர்மாத்திரம் வாராதிருப்பது யாதுகாரணம், அவர் வந்தல்லது இதற்கொருமுடிவுந் தோன்றாதென்று நிச்சயித்துப் படியாரிப்பாச்சையரென்பவரை யழைப்பித்து நீர் மடிவாலமாச்சையர்க்கு வணக்கத்துடன் இங்குநடந்தனவெல்லாமுரைத்தவரைக் கடிதில் வருவிக்கவேண்டுமென்றனர்.

இதுகேட்ட படியாரிப்பாச்சையரும் மிகவிரைந்துசென்று அவரது திருவடித்தாமரைகளில் வணங்கி நடந்தவண்ணமுரை

ப்ப, மாச்சைய ரவனைநோக்கி அவ்விடத்துவந்தவர்கள் யாவர், வசவதேவர் என்செய்தனர் தெளியச்சொல்வாயென்று வினவவே, சுவாமி மற்றையவெல்லாம் ஆதியந்தமாகவறியேன், சகோசமாதிராஜர் முதலிய பெரியோரது திருக்கூட்டத்தில் ஸ்ரீவசவதேவர் இன்னாயாரது திருவுருவத்தை யிறுகத்தழுவிக்கொண்டு வலியுஞ்செயலுமழிந் தறிவுகலங்கித் துக்கிக்கின்றார். இதுகண்ட ஜங்கமமூர்த்திகள்யாவரு மென்னைத் தேவரீர்க்குத்தெரிவிக்கக் கடிதிற் றூண்டினமையில் விரைந்திங்குவந்தேன் காரணமொன்றுமறியேனென் றுபுகல, அங்கு மாச்சையர் பாச்சையனை நோக்கி வசவதேவர் வருந்துங்காரணம் யாது, சிவயோகிகளுக்கு உயிரொன்றுசொல்லப்படுவ திவ்வளவிற்றே, ஜங்கமர் தாம்பிடித்தவிரதத்தையைக் கைநெகிழவிட்டு உடலத்தைவிரும்பி வருந்துவரோ, மிகு தவமுடையாரிற் சிறந்த இன்னாயார் சிவபெருமானது திருவடிநீழலை யடைந்ததுகொண்டு புதிதான பெருமகிழ்ச்சியோடு புளகிக்கவேண்டுவதையல்லது அவரைத் திருவடியைவிட்டு மீட்க விரும்புவாருமுண்டோ, இவ்வாறன்றி அழுவதும் மேல்விழுவதும் ஐயோவென்று ஓலமிடுவதும் முறையோ, இது சிவபத்தர்கட்குச் செயலோ, இவையெல்லாம் பாசபந்தமுள்ளவர்க்கே யுரியதன்றி நம்மவர்க்குரியதல்லவே, அவ்விடத்துற்று அவர்துயரத்தை யாற்றவுமறியேம் அவர் கண்ணீரைத் துடைக்கவுமறியேம், விரதத்தைமறந்து புலம்புகின்றாரைக் காதாற்கேட்டதே மிகை, இனிக் கண்களினாலும்பார்க்க வல்லோமல்லோம். ஆதலால் அவர் செய்யுஞ்செயலையே செய்யச்சொல்லியென்றனர்.

இதைக்கேட்ட பாச்சையரும் விரைந்தோடிவந்து திருக்கூட்டத்தில் ஜங்கமமூர்த்திகளை வணங்கி நின்றனர்

லித்து மனத்தின்கண் மிகவச்சத்துடன் மாச்சையர் கண்டித்துப்புகன்ற வைராக்கியமொழிகளை யெடுத்துக்கூறியவளவில், இதுகேட்ட ஸ்ரீவசவதேவரது பிராணவாயுவும் நிஷ்டைவழியாய்க் கின்னரையரிடத்துக் கலந்துநின்றது. இதுகண்ட வடியாரியாரும் ஸ்ரீவசவதேவரது திருமேனியைக்கண் டிரங்கியமனமும் புலந்த முகமுமுடையராய் இஃதென்ன புதுமையென்றுபுலம்பி, இச்செய்தி மடிவாலமாச்சையர் செவிகளிற்பொருந்தின்இந்தவுயிர்கொடையை மிக நினைந்துவருந்துவர், இப்படிக்கொத்த நிஷ்டைகளின்பெருமையை மாச்சையரோ வகுத்துச்சொல்லுதற்கு வல்லவர், வசவதேவரது பெருமையைச் சிவனே யறிதல் வேண்டும். உலகத்திற் சகலபத்திமார்க்கங்களையும் வாக்கினாற்புகல்வதன்றி அநுபவத்தி லிவ்வல்லமை யெவர்க்குண்டாம். அநித்தியசரீரத்தைப் பொருளாகவிரும்பும் நம்மவர்க்கு இஃது சிறிதுமெளிதன்று. இதனைப் பார்த்தற்கும், உரைப்பதற்கும், நினைப்பதற்கும் யார்க்குஞ் செயற்கரிது. ஹரஹரவென்று தொழுதுபின் எதிர்நிற்கும் படியாரிப்பாச்சையரைநோக்கி இதனை மடிவாலமாச்சையர்க்குச் சொல்லுமென்றுரைக்க, அவருமவ்வாறேயறிவிக்க, இதுகேட்டபொழுதே மாச்சையர் மிகவின்பநிறைந்த மனமுடையவராய் ஜங்கமமே யுயிரென்னுமுரையை நிலைநாட்டவல்ல தீரரோ, தாழாவிரதமுடைய நந்திதேவரோ, அசைவில்லாத ரத்தினதீபமே, அரனுக்கினிதான வன்பனே என்று பலவாறுப்புகழ்ந்து, அதிவேகத்துடன் சென்று சிவசரணரது திருக்கூட்டத்தையடைந்து அவர்களைவணங்கிக்கொண்டு, பின்பு கின்னரையர்க்கருகேசென்று அவரைநோக்கி பத்தர்க்குயிர்போன்ற கின்னரையரே, தேவரீர் சிவசாயுச்சியத்தையடைந்தாலும் ஸ்ரீவசவதேவராவது இப்பூமியின்கணிருந்தன்றோ சிவபெருமானது மகி

மை விளங்கவேண்டும். நீவிரிருவீருஞ் சித்தமொருமித் துடன் சென்றால் அஃதடுக்குமோ, நீவிரொத்துச்சென்றாலும் நம்மை அச்சிவபெருமானு மொத்துக்கொணர்ந்துசெல்வது நீதியன்று. நிலைபெறச் செய்யாதவிடத்து அவரது அபாரமகிமையை உலகத்தில் உத்தாரணஞ்செய்பவர் நந்திதேவர்க்கு வேறாரிருக்கின்றார். நந்திதேவ ரிவ்வுலகத்தைக் கடந்துசென்றால், சிவபத்தியென்னும் பேர்மாத்திரமு முலகத்தைக்கடந்துசெல்லும். இந்தமுறைமைபற்றி நீவிரிச்சைப்படி செல்வது நீதியன்று. நந்திதேவர் இவ்வுலகத்தில் எவ்வளவுகாலமிருந்தாலும் அதுகாறும் நீருமுடனிருத்தலே நன்று. ஆதலா லிருவீரு மெழுந்திருப்பீரென்று சொல்லிச் சிவத்தியானம்புரிந்தனர்.

இதுநிகழ்ந்த வவ்வளவில், கின்னரையர் கைகால்முதலிய வவயவமெல்லா மெல்லமெல்லவசைந்து கனவுதெளிந் தெழுபவர்போலச் சயனத்தினின்று மெழுந்தனர். அக்கணத்திற்றானே ஸ்ரீவசவதேவருமெழுந்து மாச்சையாது திருவடிகளிற்பணிந்து அருகிலிருந்த திருக்கூட்டத்தாரையும் வணங்கினர். பின்னரிருவரும் மாச்சையனைப் பலவாறுதுதித்து வணங்கிப் புகழ்ந்து நின்றனர்.

பின்னர் அங்கிருந்தவடியார் ஸ்ரீவசவதேவர்முகத்தைப்பார்த்து இவ்விதமாக வுடலோடு உயிரையுமளிக்கத்தக்க பத்திமார்க்கம் தேவரீர்க்கே சிறந்ததன்றிச் சாமானியர்கட்கு இச்செயல் முடிவுபெறாது என்று துதித்தனர். ஸ்ரீவசவதேவரும் அவரை வணங்கி யெளியே னிம்மொழிக்குப் பாத்திரனல்லனென்று வணங்கிநின்றனர். அடியாரொவரு மிவ்விருவரையும் வணங்கித்துதித்துத் தமதுதமது வாசஸ்தலங்கட்குச் சென்றனர். மாச்சை

யரும் ஸ்ரீவசவதேவரா லனுப்பப்பெற்றுக்கொண்டு தமதுமடத்திற்சென்றனர். கின்னரையரும் மடிவாலமாச்சையர் பெருமையைத்துதித்துத் தம்மிடஞ்சென்றனர்.

கின்னரையர் புராணவசன
முற்றிற்று.

---

உ
திருச்சிற்றம்பலம்.
மேதாரகேதையர் புராணம.

---

பெருமூவிதபத்தியெனுந்திருவைப் பேறுந்திருநந்திகள்பேருயிர்தான், கருணாகரசங்கமமென்பதைமுக் காலுமுலகத் தவர்காண்டகவே, வரமேதாகே தையராவியைமாமதிவேணியர்வவ்வகன்றிடலுந், தருமேவியவிச்சலநன்னகர்வாழ் சற்பத்தருடன்வசவேசுரரும். க

உவமிக்கவொணாதுயர்சங்கமமு மோலக்கமிருத்தொழியின்னியமோ, டவனுற்றபி னம்மடிவாலையர்வந் தாரில்லையழைத்திடு கென்றனவின், பவமற்றுளமாச்சையர் தம்மிடைபோய்ப் படியாரிகள்பாச்சர்பணிந்துகரங், குவிவுற்றையமேதாகேதையாநங் கோமானடிகூடினரொன்றனவின். உ

வேறு.

அவ்வழியார்பெரியோர்கள் வந்தாரொன்ன வல்லையர் மதுவையரல்லமையர், செவ்வியராஞ்சகதேவத்தண்ட

நாதர் சகளேசமாதாரசர் தெசரிதேவ, ரெவ்வமிலா விப்
பையர்கின்னணைய ரியற்றெலுங்கச்சோமையர்கேசிராச
ர், கைவருநற்பாச்சரசர்தாசிமையர் காசிநாதையருடன்
கல்விதேவர். ௩

வரமுகுண்டிச்சவுண்டையர் சங்கணையர் மாயிதேவை
யர்கண தாசிமையர், கரிகைசவுண்டையர்மொறட வே
மிதேவர் துய்யகன்னப்பிரமையர் கலைக்கேதையர், கர
வில்சிவநாகமைய ருடன்கொக்கையர் கருணையராங்கக்
கையரோகாந்தராமர், திராடப்புபத்தண்ணரொடு செய்ய
ஞானத் திரளனையசென்ன. .வேசர்முன்னும். ௪

பத்தர்சங்கமேசருடன் வசவதேவர் பரிந்துவந்து மே
தாகேதையர்முன்ன, மொத்தசமுகத்தரா யின்னியங்க
ளொழியாதுமுழங்கவிருக்கின்றுபொன்னச், சுத்தமடிவா
லையர்நகைத்துநந்தி தொல்லையுளதன்விரதந் துறந்துமற்
று, மிந்தணையிமிருப்பதெனவவரோடாவியேகாமணு
ன்கொலென்னேயென்னே. ௫

அங்கணுறுந்தவத்தோரொன்சொல்வரிவ்வாறவன்றனை
க்குச்சங்கமமே யாவியென்னுந், துங்கவுணாயினைமறந்த
விரதகீனன் றெல்லையுடல்பார்க்கவொண்ணு தொடவு
மொண்ணுச், சங்கரன்மேதாகேதர்தமையழைக்கத் தா
ன்சென்று லவருடனே தானுஞ்செல்லாப், பங்கணுறும

வையினையும் பார்க்கக்குற்றம் பாவியேனிம்மாற்றம்பகர் வதென்னே. ௬

அளவிறந்தபத்தருந்தவத்தோரெல்லா மவணிருக்க மாம்வந்தங்காவதென்ன, கிளர்கருமமக்குண்டு நீசெல் லென்னக் கிளத்தளவிற்படியாரிப் பாச்சர்கேளா, வுளந டுங்கியுடல்கம்பித் தோடிவந்தங் குற்றமகத்தோர்கடம் மையுறவணங்கி, வளர்பயத்நானின்றளவிற் சங்கமேசர் மாச்சியமோன்வந்ததில்லை வரச்சொல்லென்ன. ௭

அஞ்சுவனனந்திகண்முன் றுரைக்கவொல்லே னப்ப டியேன்பயமின்றி யறைவாயென்ன, நெஞ்சமுகந் தவர் பகர்ந்த நேர்மையெல்லா நிகழ்த்தளவில்வசவேசர் நினை வுதோன்றிச், செஞ்சொன்மடிவாலையைாத் தோத்திரஞ் செய் திறத்தராய்ச்சிவன்கயிலை சேர்ந்தவாறே, துஞ்சி னர்நந்திகளென்றுதவத்தோர்பத்தர் தூயவந்தகருளோ ர் துயரராகி. ௮

மேதாகேதையருடன்வசவதேவர் மிக்கவுயிரினைப்பர மன் விளித்துக்கொண்டான், பூதலத்திலினியென்னசிவ நற்பத்தி போய்த்தந்தோவரகரா வெனப்புலம்பி, மாதவ த்தோர்படியாரி தன்னைநோக்கி மாச்சையற்கிவ்வாறுரை த்து வருவாயென்ன, வாதரத்தாலோடியவர்க் கங்கைகூ ப்பி யையர்தண்டநாதர்செய்தி யறைந்தவாறே. ௯

கேட்டளவின்மடிவால மாச்சர்சித்தங் கிளர்மகிழ்ச்சி யுடனங்கம் புளகமெய்தித், தாட்டருதாமரையென்னமு கமலர்ந்து சாற்றுவார்நன்னியமந் தவருவண்ண, நாட்டி னனைபிறவிவேர் களைந்திட்டோனே நவின்றவுரைசிலா லிபியினலம்போலாய்ந்தா,லோட்டமின்போற்புற்புதம் போலோடுங்கால்போ லொளிர்மதிபோன்மாறும லொ ருதன்மைத்தாய். ம

மறந்தசிட்டை நினைவித்த மாத்திரத்தான் மகிழ்ந்துயி ர்போய்மேதாகே தையர்பாலே, செறிந்தானைச் சேர்ந்த தனுற்செப்புமாறென் செயற்கரியசெய்வனந்திதேவனெ ன்று, நிறைநததுதிசெய்துமடகின்றுபோந்து நீண்மகத் தோர்திருமுன்பு நேயநீட, விறைஞ்சிநிற்ப மாச்சையரி ங்ஙன்வம்மி லிருந்தருள்வீரெனப்பெரியோரியம்புகாலை.

வேறு.

சங்கமர்பத்தர்நொந்து சாற்றுவார்தண்டாதா
சங்கமாதாரமான் தாருவேவசவதேவா
சங்கமாராதனைககார் தாபரஞ்சகத்திலையா
சங்கமர்க்குற்றநின்போற் றுழ்ந்துளந்தருக்குவாரார். மஉ

பானுவில்பகலுந்துய்ய பனிமதியில்லிராவு
மானமில்லாதமாதும் வண்சுடரில்லாவில்லுந்
தானமில்லாதான்வாழ்வுஞ் சதுரங்கமில்லாவேந்து
மானதேவசவதேவ ரகனறரன்பத்தியந்தோ. மங

அண்ணனீவிடுப்பவந்த வருள்வசவேசர்தம்மை [டான்
யெண்ணியிவ்வகாலந்தன்னி லிப்படியழைத்துக்கொண்
மண்ணிலுன்புண்ணியந்தான் வளங்கெடும்வரவிடுப்பா
ய்,கண்ணுதற்கடவுளானே யெனப்பத்தர்கழறுகின்றார்.

ஆரினியிலக்கத்தெண்ப தாயிரந்தவர்க்கிதத்தோ
ராரினியெமக்குன்பத்தி யருமையையறிவிக்கும்பே
ராரினிச்சிவத்துரோக மகற்றுவாரஞ்செழுத்தை
யாரினிவளரச்செய்வா ரத்தவென்றரற்றுகின்றார் ௰௫

அலமருமவனைநோக்கி மாச்சையரறைவாரஞ்சல்
பலதுயர்மாற்றம்பேசிப் பரிதவித்திரங்கலெல்லா
நிலவுமாவீரசைவ நிட்டையர்க்கேலாநீங்க
ளுலைதலுங்கிலேசஞ்செய்யுமோசையுமொழிமினென்று.

அமலசங்கமப்பிராணி யருள்வசவேசனென்னுங்
கமழுணர்விக்கவேண்டிக் கருணைமேதாகேதையர்
நிமலமாமுயிரையத்த னீக்கியேதன்பாற்சேர்த்தான்
விமலனுநந்தியாவி விடுத்துத்தன்விரதங்காத்தான். ௰௭

பத்திகாரணமதாகப் பாரிடையுற்பவிப்பா
யுத்தமசிவாசாரத்தை யுயர்விப்பாயெனவிடுத்தா
லத்திறம்வசவதேவ னுக்குமுன்னழைத்ததன்றி
மெய்த்தவர்க்கிதத்தபூசை விக்கினஞ்செய்தாணத்தன

உருத்திராறிக்கையின்றி யுயர்கணாறிக்கையின்றித்
தருக்குமையறிக்கையின்றித் தபோதனாறிக்கையின்றி
யருட்டருபுராதனத்தாறிக்கையுமின்றியதன்
றெரித்திருவனையுங்கொண்டான் றிருவுளக்கருணைமாறி.

மேதாகேதையாதம்மை விரைவுடன்வரவிடாம
லாதரவுடனோநந்தி யவருடனங்கணைந்தா
னீதியோதண்டநாத னித்தசங்கமப்பிராணி
யோதுமூவிதநற்பத்தி யுருவமாயுலகில்வந்தோன். ௨௰

சங்கமச்செல்வந்தக்கோ தருக்கனசரீரன்றன்னை
யிங்குநீயிருத்தாதங்ங னிருக்கவேயிசைந்திருந்தாற்
றுங்கனேநீயிரண்டு சொல்லுடைக்கடவுளாகி
லங்கணுவென்றன்செய்தி யறிவையேயறவும்பொல்லே

என்றுமாச்சையருரைத்ததெம்பிரான்வெள்ளிவெற்பிற்
றன்றிருவுளத்திற்கண்டு சகலதன்கணத்தைநோக்கி
மென்றிருமூறுவல்கொண்டு விளம்புவான்விமலபத்தி
யொன்றினனம்மேலன்பா லுயாமடிவாலமாசசன். ௨௨

வேறு.

இந்தமேதாகேதையன்றன்னையாமழைக்க
வந்தனனிவன்றன்னெடுநந்தியும்வரலா
லந்தமாகிலத்தமலநம்பத்திபோய்த்தென்றே
யெந்தமேல்முனிநின்றனன்யாமெனசெய்தும். ௨௩

என்னவீரபத்திராதிபல்கணத்தருமிறைஞ்சிப்
பன்னகாபரணநின்றன்பதத்தினிற்பற்றுந்
துன்னுபத்தியாற்சங்கமார்ச்சனைசெயுந்தொழும்பாற்
பின்னைநந்தியையொப்பவரெங்குளார்பேசின். உ௪

நின்பதத்தினுக்கியன்றநன்மைமந்தனைநின்போற்
றுன்பமில்லனைச்சுகானந்தஞானர்தந்துணையை
மன்பெருந்தவர்வைப்பினைமாச்சையர்மகிழ்வ
ரன்பர்மண்ணிடைமல்குவானங்கணீவிடுப்பாய். உ௫

என்றிறைஞ்சநம்பிரானிருவோரையுமழையா
சென்றுறுங்கடகத்தின்றுநீரெனச்செப்ப
நின்றிறைஞ்சியேநின்னிடைநீங்கலமென்று
ரன்றுசொல்லுநாநும்மிடையற்பமுமகலேம். உ௬

நம்பெருந்தவர்பூசையேநமக்கிதபூசை
யம்புவிக்குணீர்செல்விரென்றணைத்துகந்தருளத்
தம்பிரான்கழலிருவருந்தாழ்ந்துறப்பணிந்தங்
கெம்பிரான்றிருக்கருணையால்விடைகொண்டங்கேத்தி.

இறைவர்தந்திருக்கூட்டராங்கணங்களையிறைஞ்சி
நிறையுமங்கவரருள்கொடுநீங்கினர்கடக
முறையுமாதவர்முன்னுறுந்தமதுடனுற்றார் [ர்.
தறையினின்றெழுந்தன்பர்மெய்ச்சமுகத்தைத்தாழ்ந்தா

பற்றுநேயராய்மாச்சையாபதத்தினும்பணிந்தார்
மற்றுநன்மடிவாலையாதவத்தனைவணங்கி
யுற்றுநும்மடியார்கள்வந்தாநுமக்குரிய
நற்றிறத்தொழும்பானவைகொளுமென்றுநவின்றார் உ௯

திருந்துநந்திகள்சங்கமப்பிராணியாஞ்சீரை
யருந்திறற்றருமாச்சையாபுகழினையங்க
ணிருந்தமாதவரோத்தலுமிருவருமிறைஞ்சிப்
பொருந்துமன்பினும்மடஞ்செலுமின்னெனப்புகன்று.

வேறு.

ஐயர்மாசசையர்தாளிற்கஞ்சலிசெய்துபோற்றிச்
செய்யதம்மடத்திற்செல்லச்செப்பியேநந்திதேவ
ருய்யமேதாகேதையருடன்சென்றுதம்மடத்து
மெய்யராமடிவாலையாபெருமையையியந்திருந்தார். ௩க

மேதாகேதையர் புராணம்
முற்றுபபெற்றது.

---

திருக்கூட்டச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கஉ௱௦.

---

திருச்சிற்றம்பலம்.

—*—

# மேதாகேதையர் புராண வசனம்.

ஸ்ரீவசவதேவரது உயிரானது ஜங்கமரூபமென்பதனை இவ்வுலகத்தவர் முக்காலுமறிதறபொருட்டுச் சிவபெருமான் தவத்திற்சிறந்த மேதாகேதையருயிரைத் தம்பாற்சேர வருளசெய்தவளவில், விச்சலநகரவாசிகளாகிய பத்தஜனங்களோடு ஸ்ரீவசவதேவரும் இன்னும் மற்றைய ஜங்கமர்களும் ஒலக்கமாகி வாத்தியகோஷங்களோடு அங்குச்சென்று, மடிவாலமாச்சையர் அவ்விடத்துவரத் தாழ்த்ததனால் அவரையழைமின்களென்று ஆஞ்ஞாபித்தவளவின், இதுகேட்டருகேனின்ற படியாரிப்பாச்சையர் மாச்சையரிடத்துச்சென்று வணங்கி யஞ்சலிஹஸ்தராய் நமது மேதாகேதையர் சிவபதமடைந்தனரென்று அறிவித்தவளவின, மாச்சையர் அவ்வுழிவந்திருக்கும் பெரியர் யாவரென்று வினவ, வல்லையர், மதுவையர், அல்லமையர், சகதேவத்தண்டநாதர் முதலிய பத்தர் ஜங்கமமூர்த்திகளுடன் ஸ்ரீவசவதேவரும் மேதாகேதையர்முன்னே சமுகமாய்க்கூடி வாத்தியங்களெல்லா முழங்க விருக்கின்றனரென்று விஞ்ஞாபிக்க,

இதுகேட்ட மடிவாலமாச்சையர் நகைத்து வசவதேவர் தாம்ஸங்கற்பித்த விரதத்தை நெகிழவிட்டு இத்தனையில் சீவிப்பது யாதுகாரணம், நாணமென்பது சிறிதுமிலராயினர், தமக்கு ஜங்கமமே யுயிரென்னுஞ் சீர்த்திமொழியை மறந்துநின்ற விரதபங்கராய வவரதுதேகத்தைத் தரிசிக்கவும் பரிசிக்கவு மொண்ணாது மேதாகேதையர் சிவபதமடையவும் அவருடன்செல்லாததோர் பங்கமுடைய வவரது அவையைக்காணினுங்குற்றமேயா

ம். இம்மொழி யான்புகல்வதுந் தகாது. அவ்விடத்து அனந்தம் பெரியர்வந்து நிறைந்திருக்க யா னவ்விடத்துவந்தத ஞலாவதெ ன்னபயன், எமக்கும் புரியுங்கடமைத்தாய கருமங்கள் அநேகமி ருக்கின்றமையால் இனிநீர்செல்லுமென்றுபுகல, இதுகேட்ட பா ச்சையர் உள்ளமுமுடலமு நடுநடுங்கி யோடிவந்து திருக்கூட் டத்தில் மகத்தோரைவணங்கி யச்சத்தால் பேசாமல் நின்றவளெ வில், அங்கு ஜங்கமரெல்லாம் மாச்சையர் வாராதகாரணம் யா தென்றுவினவ, ஸ்ரீவசவதேவா முன்பு புகலவஞ்சினனென்று நி ற்க, அதனைப் பயமின்றிப்புகலலாமென்று யாருஞ்சொல்ல, படி யாரிப்பாச்சையர் மாச்சையருரைத்ததெல்லாம் விளங்கவுரைக்க வே, ஸ்ரீவசவதேவர் தமது சங்கற்பஞானமுண்டாய் மடிவால மாச்சையரைத் துதிக்குந் திறத்துடன் ஸ்ரீபரமசிவனது மஹா கைலாசஞ்சென்றனர்.

இதுகண்ட தவத்தோர் பத்தர் மற்று மந்நகரவாசிகள் யா வரும் துககமுகராய், மேதாகேதையருடன் ஸ்ரீவசவதேவனையு ம் ஸ்ரீபரமேசுவரன் தம்பாற்செல்லத் திருவுளம்பற்றினர், இனி பூலோகத்தில் சிவபத்தியென்பதேது என்றிரங்கி, ஹரஹரவெ ன்று உச்சரித்துவருந்தி இவ்விதத்தை மடிவாலமாச்சையர்க்குத் தெரிவிக்கச்சொல்ல, பாச்சையர் விரைந்துசென்று நடந்தபடி யுரைக்க.

இதுகேட்ட மாச்சையர் மனமகிழ்ந்து புளகாங்கிதராய் மு கமலர்ச்சியோடு ஸ்ரீவசவதேவனைப் பலவாறுபுகழ்ந்து துதித்து தமதுமடத்தினின்றும் புறப்பட்டு மகத்தோரது திருக்கூட்டத் திற்சென்று வணங்கிநிற்ப, அவருமெதிர்ந்துவந் துபசரிக்கவிரு ந்து அங்குப் பலவாறு புலம்பிப்பரிதபிக்கும் அடியார்களைநோக் கிக்கையமர்த்தித் துயரத்துக்கேதுவாயபலமொழிகளைப்புகன்று

இவ்விதமாக விரங்குவதெல்லாம் வீரசைவநிஷ்டையில் நிற்கும் நம்மவர்க்கழகன்று அவையொழிந்து நிற்கக்கடவீர். ஸ்ரீபரமேசுவரனும் வசவதேவர் ஜங்கமப்பிராணியென்று தெரிவித்தற்கே மேதாகேதையருயிரைக் கவர்ந்தனர். அதுகண்ட வசவதேவரும் அவருடன்சென்று தமதுசங்கற்பத்தைக் காத்தனர். உலகத்தில் நமதுபத்திக்குக் காரணசொரூபமாய் நீயுற்பவித்துச் சிவாசாரத்தை யுயர்த்துவாயென்று அன்று கைலையில் ஆஞ்ஞாபித்து அதுமுடியுமுன்னே நந்திதேவரைச் சிவபெருமான் கொண்டு செல்வது முறையோ? அன்றியும் மெய்யன்பினையுடைய ஜங்கமாராதனைக்கும் சிவனே விக்கினகர்த்தாவாக வெண்ணவேண்டும் என்று பலவாறுசிந்தித்து, சுவாமீ சிவபெருமானே ஜங்கமப்பிராணியாகவும் பக்திவடிவினராகவும் அவதரித்த ஸ்ரீவசவதேவரை இந்தவுலகத்தின்க ணிருப்பச்செய்யாது அங்குக்கைலையின்கண்ணே யிருத்தற்கே சம்மதிப்பீராயின் முன்னுக்குப்பின் விரோதமான கபடவார்த்தையைக்கொண்டு நடிக்குங்கடவுளென்று உமக்குமொரு பெயருண்டாமென்பதிற் சந்தேகமில்லை. அதுவும் வேண்டுவதுதானென்று சம்மதிப்பீராயின், சுவாமி அடியேன்செய்தியு முமக்கு நன்றாகத்தெரியுமன்றோ? நானோ அறவும்பொல்லாதவனே என்று மாச்சையர்புகன்ற கடுஞ்சொல்லையும் ஸ்ரீமஹாகைலாசத்தில் உமாதேவியாரோடு வீற்றிருக்கும் பரமேசுவரன் தந்திருவுளத்திற்கண்டு தமதுகணங்களைநோக்கிப் புன்மூறுவலோடு சொல்லுவார்.

பூலோகத்தில் நம்மிடத்து விமலமான மெய்யன்புள்ளவன் மடிவாலமாச்சையனென்னு மோரன்பன், இந்தமேதாகேதையனை யாமிங்கழைத்தது காரணமாக நந்தியு மிவ்விடத்து வந்தனன், இருவரு மிவிடத்துவந்ததேகாரணமாக நமதுபத்திமார்க்கம்

